# இமாம் முஹம்மது

பின்

# அப்துல் வஹ்ஹாப்

(வாழ்க்கை வரலாறு)



ஆசிரியர்

## அஹமது பின் ஹஜர்

(கதர் அரசாங்க நீதிபதி)

# الشيخ محمد بن عبد الوهاب

## عقيدته السلفية ودعوته الإصلاحية وثناء العلماء عليه

بقلم

العلامة الشيخ أحمد بن حجر بن محمد آل أبوطامي

(قاضي المحكمة الشرعية بقطر)

قدم له وصححه سماحة الشيخ

عبد العزيز بن عبد الله الباز

نقله إلى التاملية

كمال الدين بن شاه الحميد

# இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப்

( வாழ்க்கை வரலாறு )



ஆசிரியர் :

**அஹமது பின் ஹஜர்**

*(கதர் அரசாங்க நீதிபதி)*



தமிழாக்கம் :

**மௌலவி S. கமாலுத்தீன்**

**இஸ்லாமிய பல்கலைக் கழகம்**

**மதீனா**

## அப்துல் அஜீஸ் பின் பாஸ் அவர்கள் முகவுரை

எல்லாப்புகழும் அல்லாஹ்விற்கே; இறைவன் ஒவ்வொரு காலத்திலும் நேரான பாதையில் மக்களை அழைக்கின்ற சீரிய தலைவர்களை உருவாக்கி நம்மீது அருள் புரிந்தான். இவர்கள் மக்களை உண்மையான பாதையின் பால் அழைத்து கண்ணிருந்தும் பார்வையற்றவர்கள் போலிருந்தவர்களுக்கு திருக்குர் ஆன் என்னும் தெய்வீக கிரந்தத்தால் ஞான ஒளி யூட்டினார்கள். இறைபாதையில் ஏற்படுகின்ற இன்னல்களை பொறுத்து, குர்ஆன், ஹதீஸை எதிர்க்கின்றவர்களை அடியோடு இல்லாமலாக்கினார்கள். திருக்குர் ஆனிற்கு அறிவீனர்கள், வழிகெட்டவர்கள் உண்டாக்கிய மாற்றுப் பதங்களையும் மாற்றுப்பொருள்களையும் எதிர்த்தார்கள். மார்க்கத்தின் உண்மைகளை மக்களுக்கு விளக்கி, அவர்களுக்கு ஏற்படுகின்ற சந்தேகங்களுக்குத் தெளிவான, உறுதியான ஆதாரங்களை எடுத்துக்காட்டிச் செயல்பட்டுவந்தார்கள்.

ஹிஜ்ரீ பன்னிரண்டாம் நூற்றுண்டில் அழிந்துபோன இஸ்லாமியச் சின்னங்களை புதுப்பிக்க வந்த மேதை, மார்க்க ஞானி முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப்பின் சுலைமான் பின் அலி அத்தமீமி அல்ஹன்பலி (ரஹ்) என்பவர்கள் மேல் குறிப்பிடப்பட்ட சீர்த்திருத்தப் பிரச்சாரத் தலைவர்களில் ஒருவராவார்கள். (அல்லாஹ் அவர்கள் உறைவிடத்தை மணமாக்கிச் சுவர்க்கத்தில் அவர்கள் ஒதுங்குமிடத்தைச் சிறப்புறச் செய்தருள்வாஞக)

இஸ்லாத்தின் உண்மைகளையும், பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு இறைவன் அருளிய போதனைகளையும் நன்கு சிந்திக்கின்ற பேற்றை அல்லாஹ் இவர்களுக்கு நல்கினான்.

இவர்கள் தோன்றிய காலம் இஸ்லாம் வியப்பிற்குரிய தாகி (ஏழ்மை நிலையை அடைந்து) அறியாமையும், பித்அத் என்னும் புதுமைகளும், அனுச்சாரங்களும் பெருகி, நபிமார் கள், நல்லவர்கள், மரங்கள், கற்கள் அனைத்தையும் வணங்கு வதும் மிக அதிகமாகக் காணப்பட்ட காலம். உண்மையை மக்களுக்கு துணிவுடன் எடுத்துரைத்து நபிமார்களையும், கிரந்தங்களையும் எதற்காக அல்லாஹ் அனுப்பினானோ, அந்த ஏகத்துவத்தின் உண்மைகளை மக்களுக்கு விளக்கி இஸ்லாத் துக்கு முரணான இணைவைத்தலின் பல்வேறு வகைகளை விட்டு மக்களை எச்சரிக்கின்றவர்கள் மிகக்குறைவாகவே இருந்தனர்.

இந்நிலையில் ஹிஜ்ரீ பன்னிரண்டாம் நூற்றாண்டின் மத்திய காலத்தில் நாவாலும், எழுத்தாலும் மக்களை இறை வன்பால் அழைக்க இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள் தீவிரமானார்கள் இவர்கள் பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களை இறைவன் நபியாக உலகிற்கு அனுப்பியதன் உண்மைகளை மக்களுக்கு விளக்கினார்கள். இவர்களைப்பற்றி அறிவிலிகளும், அறிஞர்களென வாதாடிய சில கீழ்த்தரமான உலமாக்களும் இவர்களுக்குப் பலதொல்லை கள் கொடுத்தனர். இத்தகைய உலமாக்கள் மறு உலக வாழ்க்கையை உலகாதாயங்களுக்கு விலை பேசியவர்களாவார் கள். இத்தகையோர் பற்றிக் குர்ஆன் கூறுவதாவது.

فَمَا رَبِحَتْ تِّجَارَتُهُمْ وَمَا كَانُوا مُهْتَدِينَ -

(அவர்கள் வியாபாரம் இலாபமற்றதாகி விட்டது. மேலும் அவர்கள் நேர்வழி பெறாதவர்களாகி விட்டனர்.) (2-16)

பதவிகளையும், உலகாதாயங்களையும், பெறுவதையே குறிக்கோளாகக்கொண்ட அறிவீனத் தலைவர்களும் இவர் களுக்கு பல வேதனைகள் கொடுத்தனர். ஆனால் இவர்கள் பொறுமையைமேற்கொண்டு, தம்பிரச்சாரத்தில் தொடர்ந்து செயல்பட்டார்கள். திருக்குர்ஆன், ஹதீதுகளிலிருந்து

தகுந்த பல ஆதாரங்கள் காட்டி விளக்கி, முன் சென்ற நல்லவர்கள், உத்தமர்கள் நிலைமைகளைத் தெளிவுபடுத்திக் காட்டினார்கள். இதனால் இறைவன் அருள் பெற்ற நல்லவர்கள் இப்பிரச்சாரத்தை ஏற்று இதற்கு உதவி புரிந்து, இதைப்பரத்தி வந்தனர். எழுத்தாலும், பேச்சாலும், ஆயுதத்தாலும் ஆதரவளித்த தம் குடும்பத்தினர்களிலும், சுஊது அரசு குடும்பத்தினர்களிலும் முஹம்மதுபின்சுஊது குறிப்பிடத்தக்கவராவார். (அல்லாஹ் அவர்களையும் பிரச்சாரத்திற்கு உதவியவர்களையும் தனது அருளால் அணைத்து அவனது விசாலமான சுவர்க்கத்தில் வாழச் செய்தருள் வானாக!)

இப்பெரும் தலைவர் அமீர் முஹம்மது பின் சுஊது அவர்கள் தம் முழு சக்தியாலும் இப்பிரச்சாரத்தைச் செயல்படுத்தி, இது பரவுவதற்குத் தடையாக இருந்து போராடியவர்களோடு போர் புரியவும் தயாரானார்கள். அல்லாஹ் அவர்களுக்கும், அவர்களைப் பின்பற்றியவர்களுக்கும் ஆதரவும் உதவியும் அருளி, இஸ்லாமிய மார்க்கத்தை வழிகெட்டவர்கள் அனுச்சாரகர்கள் ஆகியோரின் சந்தேகங்களை விட்டும் தூய்மைப் படுத்தினான்.

இறைவன்பால் அழைக்கின்ற தம் பிரச்சாரத்தில் மாணவர்களுக்கு மார்க்கக் கல்வி போதிப்பதிலும், கப்ரு வணங்கிகளுக்கும், காபிர்களுக்கும் சரியான விளக்கம் கொடுப்பதிலும் இமாம்முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள் ஓயாது ஈடுபட்டார்கள். இஸ்லாமிய அறப்போரின் சிறப்பை போதித்து, மாணவர்களுக்கு அதில் ஆர்வமூட்டி, தம்மையும் தம் மக்களையும் அதில் செயல்படுத்தினார்கள்.

உண்மையான இஸ்லாமியக் கொள்கைகளை விளக்குகின்ற பல புத்தகங்கள் தொகுத்தார்கள். இப்புத்தகங்கள் உண்மையான கொள்கைகளை எதிர்க்கின்றவர்களுக்குத் தகுந்த தெளிவான ஆதாரங்களுடன் மறுப்புக் கொடுக்கின்றது. இதனால் இறை மார்க்கமாகிய இஸ்லாம் வெற்றி பெற்றது. முன் சென்ற நல்லவர்கள் கொள்கை சிறப்

படைந்தது, அராபியாவிலும், அதைச் சுற்றியுள்ள நாடுகளிலும் பரந்து உண்மையின்பால் அழைக்கின்றபிரச்சாரகர்கள் அதிகமானார்கள். பித்அத் என்னும் புதுமைகளையும், அனாச்சாரங்களையும் புரிந்து வந்த தலைவர்கள் தலைகுனிந்தனர்.

இஸ்லாமிய அறப்போரின் அழைப்பு எங்கும் எழுந்தது. பள்ளிவாயில்கள் இஸ்லாமிய போதனைகளாலும் தொழுகைகளாலும் அலங்கரிக்கப்பட்டன. ஷிர்க்கு என்னும் இணைவைப்பு அதிகமாகி இஸ்லாமிய சின்னங்கள் அழிந்து அறியாமையும், 'பித்அத்' என்னும் புதுமைகளும் மிகைத்திருந்த நேரத்தில், இம்மாபெரும் அருளை அவன் அடியார்கள்மீது அருளிய அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும். முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்களுக்கு அல்லாஹு தஆலா உதவி அவர்களைப் பின்பற்றியவர்களுக்கும் சிறந்த நல்ல பலன்களை கொடுத்தருள்வானாக! நிச்சயமாக அல்லாஹ் அனைத்தின் மீதும் சக்தியுடையவனாக இருக்கின்றான்.

இவர்களின் பிரச்சாரத்தைப் பற்றியும், இவர்களுடையவும் மேலும் அமீர் சுஊது குடும்பத்தவர்களுடையவும் அறப்போர்கள் பற்றிப் பெரியார்கள் பலர் புத்தகங்கள் எழுதியுள்ளனர். இவர்களில் மிகப் பெரும் வரலாற்றாசிரியர் ''அபூபக்ரு'' கன்னாம் ''உத்மான் பின் அப்துல்லாஹ்பின் பிஷ்ர்'' ''அஹமது பின் ஹஜர் பின் முஹம்மதுஅல் அபூதாமி'' (கதர் அரசாங்க நீதிபதி) ஆகியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

அஹமது பின் ஹஜர் எழுதிய புத்தகத்தில் இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாபுடைய பிரச்சாரத்தையும், அதன் கொள்கைகளையும் அவர்கள் நடத்திய போராட்டங்களையும் பற்றிப் பயனுள்ள வகையில், மிக அழகிய முறையில் வடித்துள்ளார்கள். இப்பிரச்சாரத்தைப் பற்றி தற்கால, சென்றகால இஸ்லாமிய அறிஞர்களும், மாற்றுமதத் தலைவர்களும் புகழ்ந்துரைத்ததையும் இப்புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளார்கள்.

இந்தப் புத்தகத்தைப் படித்துத் திருத்தித்தருமாறு அஹமது பின் ஹஜர் என்னைக் கேட்டுக்கொண்டார். உண்மை பரவுவதில் பங்கு பெற நாடிப்பயன்பெறும் நோக்கு டன் இப்புத்தகத்தை மிகக் கூர்ந்து, நன்கு படித்து அதில் இருந்த சில பதிப்புத் தவறுகளைத் திருத்தி, ஒரு சில விளக்கங் களைக் கொடுத்துள்ளேன். இவ்விளக்கங்கள் இப்புத்தகத்தைப் படிக்கின்றவர்களுக்கு மிகுந்த பலன் தருமென நினைக்கின் றேன்.

அல்லாஹ் இப்புத்தகத்தைப்படிக்கின்ற எல்லோருக்கும் இதைப் பயனுள்ள தாக்கித் தந்து இதன் ஆசிரியருக்கு பண மடங்கு நன்மையளித்து, முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் அவர்களுக்கும்; அவர்களைப் பின்பற்றியவர்களுக்கும், உண்மையான எல்லாப் பிரச்சாரகர்களுக்கும் பாவமன்னிப் புத் தந்தருள வேண்டுகிறேன்.

அப்துல் அஜீஸ்பின் அப்துல்லாஹ் பின் பாஸ்(1)
இஸ்லாமியப் பல்கலைகழக முதல்வர்
ஹிஜ்ரீ 22—3—1393 மதீனா

---

(1) தற்போது இவர்கள் ரியாலில் உள்ள "தாருல் இப்தா" என்றநிறுவனத்தின் தலைவர்.

## தமிழாக்கியவர் உரை

"வஹ்ஹாபிய்யா" என்ற பெயரைச் செவியுறும்போது மக்கள் சிந்தனையில் சில வினக்கள் எழுகின்றன.

வஹ்ஹாபிய்யா பிரச்சாரத்தின் உண்மை என்ன?

இப்பிரச்சாரத்தின் குறிக்கோள்களும், இதன் நோக்கமுமென்ன?

இப்பிரச்சாரத்தை உருவாக்கியவர் யார்?

இப்பிரச்சாரத்தால் ஏற்பட்ட நன்மைகள் என்ன?

இத்தகு கேள்விகளுக்கு விடை கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்தில் இப்புத்தகம் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது.

இப்பெயரைச் செவியுறும்போது நமக்குள் பலர் பல வாருகத் தீர்ப்பு வழங்கிவிடுகின்றனர். எனவே இப்புத்தகத்தைப் படித்த பின்பாவது, அதன் உண்மைகளை உணர்ந்து தீர்ப்பு வழங்குவார்களென நம்புகின்றேன்.

முஹம்மதுப்னு அப்துல் வஹ்ஹாப் அவர்கள் பிறந்த ஹிஜ்ரீ பன்னிரண்டாம் நூற்ருண்டின் ஆரம்ப கட்டத்தில் அனுச்சாரமும், அநியாயமும் நாடெங்கும் பரந்து அறியாமையும், அஞ்ஞானமும் மக்களிடையே பெருகி, இஸ்லாத்தில் இல்லாப் புதுமைகள் புரிவதிலும்; சமாதி, மரங்கள் போன்றவற்றை கடவுளென வணங்கியும் மிக மோசமான நிலையில் வாழ்க்கை நடத்தி வந்தனர். தெய்வீக ஒளியை அவர்கள் உள்ளங்களில் ஏற்றி வைப்பதற்கும், இஸ்லாமிய அறிவைப் புகட்டுவதற்கும் சரியான மேதைகளிருக்கவில்லை. சுருங்கக்கூறின்

அராபிய தீபகற்பத்தில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் எண்ணிக்கை மிகக் குறைவாகவே இருந்தது. இவை அக்கால மக்களின் பிற்போக்கான பண்பாட்டையே குறிக்கும்.

இந்த அவல நிலை பெரும்பாலான மக்களைத் தாக்கி, அதனால் சமுதாயம் கேவலமான நிலையிலிருந்ததென்பது வரலாற்றாசிரியர்களும், இஸ்லாமிய உலக ஆராய்ச்சியாளர்களும் கூறுகின்ற முடிவாகும்.

தம் சமூகத்தின் இந்த நிலையைக் கண்ட முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள் சமுதாயத்தின் ஒவ்வொரு ஓரத்தையும் ஆராய்ந்து, அதை எப்படித் தூய்மையான சமூகமாக மாற்றவேண்டுமென்பதில் முழு முயற்சியையும் பயன்படுத்தினார்கள். உத்தம ஸஹாபாக்களும், முன் சென்ற பெரியார்களும் தங்கள் வாழ்க்கையில் எதை அடிப் படையாகக் கொண்டு செயல்பட்டார்களோ அதுவே சீர்திருத்தத்தின் முக்கிய ஆயுதம் என்பதை அவர்கள் உள்ளத்தில் அல்லாஹு தஆலா உதயமாக்கினான். இறைவன் அருளிய இந்த உதயத்தின்மீது நம்பிக்கைக் கொண்டு, தம் பிரச்சாரத்தை ஆரம்பிக்கலானார்கள்.

இவர்கள் ஒரு புதுமையான மதத்தின்பாலோ, புதுமையான கொள்கையின்பாலோ அழைக்கவில்லை. மாறாக இறைவன் ஒருவன்பால் திரும்பி, திருக்குர்ஆன், பெருமானார் (ஸல்) அவர்கள் காட்டிய வழியில் வாழ்க்கையை அமைக்க வேண்டுமென்பதே அவர்கள் பிரச்சாரமாகும்.

இப்பிரச்சாரம் நேர்வழியின்பால் அழைக்கும் பிரச்சாரம்; அனாச்சாரங்களையும், புதுமைகளையும், சமாதி வணக்கங்களையும் ஒழிக்கும் பிரச்சாரம்; உண்மையான இஸ்லாத்தின்பால் எல்லோரும் திரும்ப வேண்டுமென்பதற்காக அழைப்புக் கொடுக்கும் பிரச்சாரமாகும்.

இப்பிரச்சாரம் சிறப்புமிக்க பல பலன்களைத் தந்தது. ஏகத்துவத்தின்பால் நம்பிக்கை கொண்ட இஸ்லாமிய சமுதாயத்தை சவூதி அராபியாவில் உருவாக்கிய, முன் சென்ற நல்லவர்கள் பாதையில் வாழ்க்கை அமைத்து ''லாயிலாஹ்இல்லல்லாஹ்'' என்னும் திருக்கலிமா பொறிக்கப் பட்ட கொடியேந்தி அக்கலிமாவின் அடிப்படையில் சட்டம் அமைத்துச் செயல்படுகின்ற மிகப் பெரிய ஓர் அரபிய நாட்டை இப்பிரச்சாரம் உருவாக்கியது. செயல்படுத்தப் படாமலிருந்த திருக்குர்ஆன் சட்டங்களைச் செயல் முறையில் நடத்திக் காண்பித்தது. இதன் பயனாக அது இஸ்லாமிய முறைப்படி இயங்குகின்ற ஒரே நாடாகத் திகழ்ந்துவருகின் றது. இதற்குக் காரணமாக இருந்தது இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்களின் பிரச்சாரமேயாகும் என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை.

இதுபோன்ற உண்மைகளை இப்புத்தகத்தைப் படிக் கின்றவர்கள் நன்கு அறிய முடியும். உண்மையை அறிந்து அதன்படி செயல்படுகின்றவர்களாக அல்லாஹ் நம்மை ஆக்கியருள்வானாக!

தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட முஸ்லிம் களிடையில் முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் அவர்களைப் பற்றி நிலவி வரும் தவறான கருத்துக்களை மாற்றவேண்டு மென்ற நன்னோக்குடன் அல்லாமா அஹமதுப்னு ஹஜர் [கதர் (QUATAR) பிரதேச நீதிபதி] அவர்கள் எழுதிய இப்புத்தகத்தைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளேன். புத்தகத்தின் இறுதியில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ள அறிஞர்கள் பாராட்டுரையில் இருபத்திரண்டு பேர்களின் பாராட்டுரையை மட்டும் சுருக்கமாக மொழி பெயர்த்துக் கூறியுள்ளேன்.

இப்புத்தகம் தமிழில் வெளிவருவதற்கு மிகவும் உறுதுணை யாக இருந்த மதீனா இஸ்லாமியப் பல்கலைகழகப் பேராசிரியர் மதிப்பிற்குரிய டாக்டர் F. அப்துர்ரஹீம், M.A., Ph. D (வாணியம்பாடி) அவர்களுக்கும், ஷேக் ஸஅதுத்தீன் பாகவி அவர்களுக்கும், எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

*18—1—1399* S. கமாலுத்தீன்

*மதீனத்துல் முனவ்வரா*



# ஆசிரியர் முகவுரை

பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் நபியாக உலகிற்கு அனுப்பப்படுவதற்கு முன், அராபியர்கள் இறைவனுக்கு இணை வைப்பதிலும், இறைவனை மறுப்பதிலும், இழிவிலிலும், ஏழ்மையிலும், பிளவிலும், வீழ்ச்சியிலும் மிக மோசமான வாழ்க்கை நடத்தி வந்தனர். அவர்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணுவதற்கும், வாழ்க்கையின் வழிகாட்டியாக வைத்துக் கொள்வதற்கும் தெய்வீகச் சட்டமிருக்கவில்லை. அவர்கள் மத்தியில் நீதி வழங்குவதற்கும் வேறுபட்டுக்கிடந்தவர்களை ஒன்று சேர்ப்பதற்கும் ஓர் அரசனிருக்கவில்லை.

இறைவன் இவர்களை இந்த இழுக்கான வாழ்க்கையிலிருந்து காப்பாற்றி, உன்னதமான வாழ்க்கையை அளிக்க நாடியபோது பெருமானார் (ஸல்) அவர்களை இவ்வுலகிற்குத் தன் தூதராக அனுப்பினான். இவர்கள் பல தெய்வங்களை வணங்கி வந்த மக்களை ஒரே இறைவன்பால் அழைத்து அவர்களுக்கு நேர்வழி காட்டினார்கள். இதனால் மக்கள் கூட்டம் கூட்டமாக இஸ்லாத்தில் சேர்ந்தார்கள். இஸ்லாத்தை நேசத்தோடும், களங்கமற்ற உள்ளத்தோடும் ஏற்று இஸ்லாத்தின் சீரிய பாதையில் வாழ்க்கையை அமைத்தார்கள். இதனால் சிதறுண்டு கிடந்தவர்கள் ஒன்று சேர்ந்து, அவர்கள் சக்தியும், செல்வாக்கும் உயர்ந்து உலகின் பல பாகங்களை வெற்றி கண்டார்கள். மானிட சமூகத்திற்கு வழிகாட்டும் ஒளிவிளக்கானார்கள். எனவே உலகமே அவர்களுக்கு அடிபணிந்தது. இறை மார்க்க

மு. அ. 2

மாகிய இஸ்லாத்தில் மக்கள் கூட்டம் கூட்டமாக நுழையவே அவர்களின் கொடி ஐரோப்பாவின் எல்லையிலிருந்து சீனுவரை பறந்தது. அவர்கள் சக்தி அதிகமானபோது இறைவன் அன்னிய அரசர்களை இவர்களுக்குச் சரணடையச் செய்தான்.

திருக்குர்ஆனையும், பெருமானுர் (ஸல்) அவர்களின் நடைமுறைகளையும் முற்றிலும் பின்பற்றி, சிறந்த பண்புடையவர்களாக அவர்கள் வாழ்ந்ததனுல்தான் இம்மாபெரும் சிறப்பை எய்த முடிந்தது.

சில நூற்றுண்டுகள் சென்றபின் மார்க்கத்தில் இல்லாத பித்அத் என்னும் புதுமைகளும், அனுச்சாரங்களும் அதிகமாகி ஆரம்பகால சிலை வணக்கத்தின்பால் மக்கள் திரும்ப ஆரம்பித்தனர். புனிதப் போர் செய்து மரணமடைந்த உத்தமர்களின் போர்க்களங்களையும், சமாதிகளையும் வரம்புமீறி கண்ணியப்படுத்தலானுர்கள், பெருமானுர் முஹம்மது(ஸல்) அவர்களின் தூய்மையான நடைமுறையை விடத் தம் கருத்துக்களை மதித்தார்கள். திருக்குர்ஆன், ஹதீதைப் பின்பற்றுவதை விட்டுவிட்டு மற்றவர்களைப் பின்பற்றினுர்கள். அல்லாஹ்வின் திருநாமங்களுக்கும், பண்புகளுக்கும் (சிபாத்) சரியான பொருள் கொடுக்காமல் மாற்றுப் பொருள் கொடுத்தனர். இஸ்லாத்தில் இல்லாத பித்அத் என்னும் புதுமைகளுக்கு அடிபணிந்து அவற்றில் அதிகமானவற்றை நல்லவை எனவும் தீர்ப்பு வழங்கினர்.

சிலர் சதி, நயவஞ்சகத்தாலும், வேறு சிலர் நல்லெண்ணத்தாலும், மார்க்கத்தின் அடிப்படைக் கொள்கைகள் பற்றிய போதிய விளக்கங்கள் இல்லாததாலும் மேற்குறிப்பிட்ட மூடக்கொள்கை அதிகமான இஸ்லாமியர்களிடையில் பரவ ஆரம்பித்தது.

இஸ்லாத்தின் உண்மைகளை அறியாத காரணத்தாலோ அல்லது நாட்டுத் தலைவர்களுக்கு ஒத்துப் போக வேண்டுமென்பதனுலோ அதிகமானவர்கள் வாய் மூடியிருந்தனர். இதனுல் 'பித்அத்கள்' என்னும் பெருவெள்ளமும், சிலை வணக்கமும் எங்கும் பரவி அதிகமானவர்களை அதில் மூழ்கடித்தது.

என்ருலும் இறையருளால் புதுமையென்னும் பித்அத்கள், இணைவைப்பு இருக்கும் காலமெல்லாம் உண்மையான தெய்வீக ஞானிகளும், தம் பிரச்சாரத்தாலும், போதனைகளாலும் சிறந்த முன் மாதிரியாக நடந்து காட்டுவதாலும் புதுமைகளையும், அனுச்சாரங்களையும் சமூகத்தை விட்டுப் போக்கி மார்க்கத்தைப் புதுப்பிக்கின்ற உண்மையான சீர்திருத்தவாதிகளும் இல்லாமலிருக்கவில்லை. இவர்கள் சமுதாயத்தில் உருவாகிய பொய்களைப் போக்கி, இஸ்லாத்திற்கு தீங்கிழைக்க நாடியவர்களுடைய தொல்லைகளை ஒழித்தார்கள். இறைவனை மறுக்கின்றவர்களுக்குச் சரியான ஆதாரங்களைக் காட்டி இஸ்லாமிய மார்க்கத்திற்கு சேவை செய்கின்ற ஞானிகளாக இருந்து வந்தனர்.

''ஒவ்வொரு நூற்ருண்டின் ஆரம்பத்திலும் இஸ்லாமிய சமுதாயத்தின் மார்க்க விஷயங்களை புதுப்பிக்கின்றவர்களை இறைவன் அனுப்புகின்ருன்,'' என்ற பெருமானுர் (ஸல்) அவர்கள் சொல் இதை உண்மைப் படுத்துகிறது.

மிகப்பெரும் பிரபல்யமான சீர்திருத்தவாதியும், ஏகத்துவக் கொள்கைப் புரட்சி புரிந்தவருமான முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் என்பவர்கள் பெருமானுர் (ஸல்) அவர்கள் கூறிய இஸ்லாத்தைப் புதுப்பிக்கின்றவர்களில் ஒருவராவார்கள். இவர்கள் ஏகத்

துவத்தின் பாலும் அல்லாஹ்வைத் தவிர வேறுயாரை யும் வணங்கக் கூடாதென்ற குர்ஆன், ஹதீஸின் சட் டத்தின்பாலும் மக்களை அழைத்தார்கள். 'பித்அத் கள்,' பாவங்கள் செய்யக் கூடாதென்றும், வலிமார் கள், நல்லவர்களையும், மரங்கள், குகைகளையும் வணங் கக் கூடாதென்றும் மக்களைத் தடுத்தார்கள்.

விடப்பட்டுப்போன இஸ்லாமியச் சட்டங்களை நிலை நாட்டுமாறும், இழிவு படுத்தப்பட்டுள்ள இஸ் லாத்தின் கண்ணியங்களை மதிக்குமாறும் மக்களை வேண்டினார்கள்.

ஆனால் அவர்கள் காலமுதல் இன்றுவரையுள் ளோர் அவர்கள் நேரிய பாதையிலில்லை என்றும்,அவர் கள் பிரச்சாரம் குர்ஆன் ஹதீஸிற்கும், நான்கு மத் ஹபுகளுக்கும் முரண்பட்டதென்றும் கருதுகின்றனர். இதற்குக் காரணம் அக்கால துருக்கியர்கள், மக்கா ஷரீபுகள் ஆகியோரின் பிரச்சாரங்களும் அரசியல் கார ணங்களுமேயாகும். துருக்கியர்களின் இத்தவறான பிரச்சாரம் உலகெங்கும் பரந்து அதிகமானவர்கள் அதை உண்மையெனக் கருதினார்கள். வேறு சிலர் அவர் கள் பிரச்சாரத்தை எதிர்த்து, புத்தகங்களும் எழுதி னார்கள்.

தற்காலத்தைப் போன்று செய்தித் துறைகள், தகவல் துறைகள், பதிப்பகங்கள் முதலியன அக்காலத் தில் இல்லாததால் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள், அல்லது அவர்கள் மக்கள் எழு திய புத்தகங்களை படிக்கின்ற வாய்ப்பு இவர்களுக்கு கிடைக்கவில்லை. எனவே இவர்கள் இப்பிரச்சாரத்தின் உண்மைகளை அறியமுடியவில்லை. மக்களின் வாய்மூலம் கிடைத்த தகவல்களை மட்டும் ஆதாரமாகக்கொண்டு புத்தகங்கள் எழுதினார்கள். இத் தவறிய பிரச்சாரம்

மக்களிடையே பரந்தபோது அதை உண்மையெனக் கருதினர்.

முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்களை எதிர்த்து எழுதப்படும் புத்தகங்களில் காணப்படு பவையும், அவர்களைப் பற்றி கேள்விப்படுபவையும் உண்மையென மக்கள் நம்பினார்கள். ஒரு மனிதனைப் பற்றி, அல்லது ஒரு கொள்கையைப் பற்றி அல்லது ஒரு இயக்கத்தைப் பற்றி சொல்லப்படுபவை உண்மை யென்பதை ஆதாரபூர்வமாக நிரூபிப்பதே அறி வுடைமை என்பதை அறியாததாலோ என்னவோ அவர்களை எதிர்த்துப் புத்தகங்கள் எழுதிவிட்டனர். ஒருவருடைய பிரச்சாரத்தை எதிர்ப்பவர் அவருடைய பிரச்சாரத்தைக் காதால் கேட்டிருக்க வேண்டும். அல்லது அவர் எழுதிய புத்தகங்களைப் படித்து அதி லுள்ளவற்றை மேற்கோள் காட்டி தவற்றை விளக்க வேண்டும். இதுவே நல்லவர்களின் பண்பாகும்.

சென்ற கால துருக்கியர்களுடைய பிரச்சாரம் மக்களிடையே ஓர் இடத்தைப் பெற்றிருந்ததென மேலே கூறினோம்.

ஆனால் தற்காலத்தில் அத்தவறிய பிரச்சாரம் குறைந்து உலகின் பல பாகங்களிலுமுள்ள அறிஞர்கள் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள் பிரச் சாரத்தின் அந்தரங்கத்தையும், அதன் உண்மைகளை யும் அறிந்தனர். தற்காலம் அறிவுலகமாக மாறியதே இதற்குக் காரணமாகும்.

மேலும் சவூதி அரசு ஏகத்துவக் கொள்கையையும், இஸ்லாமியச் சட்டங்களையும் நடைமுறையில் கொண்டு வந்துள்ளது. இஸ்லாமியச் சட்டங்களையும், மார்க்கத்தில் விதிக்கப்பட்ட தண்டனைகளையும் செயல்

முறையில் நடத்திக் காட்டுகிறது. இஸ்லாமிய பிரச்சாரத்தை தீவிரமாகச் செயல்படுத்தி, நேர்மையையும், நம்பிக்கையையும் பரத்துகிறது. குர்ஆன், ஹதீஸ் கூறுவதை முழுக்க முழுக்கப் பின்பற்றி, இஸ்லாத்தில் புதுமையாக உண்டாகிய பித்அத்களை ஒழிக்கின்றது. சவூதி அராபியாவில் மாத்திரமின்றி உலகின் பல பாகங்களிலும் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் நிறுவி மார்க்க அறிவைப் பரத்துகிறது. உலகின் எல்லாப் பாகங்களிலிருந்தும் வருகின்ற மாணவர்களுக்கு சகல வசதிகளும் அருளி, இஸ்லாமிய மார்க்க அறிவை போதிப்பதில் முதலிடம் வகிக்கிறது. இதனால் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள் பிரச்சாரத்தை அறிந்து அதற்கு ஆதரவும் கொடுக்கின்றனர்.

மேல் கூறப்பட்ட உண்மைகளை கண் கூடாகக் கண்டும்கூட அறிவாளிகளென வாதாடும் சிலர் இமாம் முஹம்மது அவர்கள் நேர்வழியில் இல்லை என்றும் கருதுகின்றனர். வஹ்ஹாபி இயக்கம் முஸ்லிம்களை காபிர்களென்று கூறுகிறது, நபிமார்களுக்கு கண்ணியம் கொடுப்பதில்லை, அவர்களுக்கு ஷபாஅத்து இல்லையெனக் கூறுகிறது, வலிமார்கள், நல்லவர்களை மதிப்பதில்லை. அவர்கள் கப்ரையும், மற்ற எந்த கப்றுகளையும் தரிசிப்பதை அனுமதிப்பதில்லை; என்றெல்லாம் இட்டுக்கட்டி மாபெரும் பொய்யை சுமத்துகின்றனர். ஏதோ அறிவீனர்கள் எழுதிச்சென்ற புத்தகங்கள் மீது நம்பிக்கை கொள்கின்றார்களே தவிர, இவற்றுக்கு உண்மையான எந்த ஆதாரமும் கிடையாது.

இத்தவறிய எண்ணங்களை மக்களை விட்டுப்போக்க வேண்டுமென்ற நல்லெண்ணத்தில் முஹம்மது பின் அப்

துல் வஹ்ஹாப் அவர்களின் வாழ்க்கை வரலாற்றைத் தொகுத்தேன். நஜ்துமா காணத்தைபற்றிய வரலாற் ருசிரியர்களான "இப்னு கன்னும்" "இப்னுபிஷ்ர்" "ஆலூசி" "ரைஹானி" போன்றவர்கள் எழுதிய புத்த கங்களிலிருந்து இதைத் திரட்டினேன். மேலும் முஹம் மதுபின் அப்துல் வஹ்ஹாப் அவர்களும் அவர்கள் சந்ததியினரும் எழுதிச்சென்ற புத்தகங்களையும்ஆதார மாகக் கொண்டேன்.

தம் வாழ்க்கை முழுவதையும் திருக்குர் ஆன், ஹதீஸின் சட்டங்களைச் செயல்படுத்துவதிலும் மக்களை சீர் திருத்துவதிலும் அர்ப்பணித்த அம்மேதையின் சேவையைப் பாராட்டிப் புகழ்ந்திருக்கும் சில வர லாற்று ஆசிரியர்களுடைய புகழுரைகளையும் இப் புத்தகத்தின் இறுதியில் இணைத்துள்ளேன். நான் இப்புத்தகத்தை எழுதத் தகுதியற்றிருந்தும் இதைப் படிக்கின்ற ஒவ்வொருவரும் வஹ்ஹாபிய கொள்கைப் புரட்சியின் உண்மையை தெளிவாக அறியவேண்டு மென்ற எண்ணத்தில் இறைவனிடம் உதவி வேண்டி இதை வரைகின்றேன். இக்கொள்கைப் பிரச்சாரத்தின் உண்மைகளை மறைத்துக் கொண்டிருக்கும் திரைக ளெல்லாம் இதைப்படிப்பதனுல் தாமாக நீங்கிவிடு மெனக் கருதுகின்றேன். மேலும் முஹம்மதுபின் அப் துல் வஹ்ஹாப் அவர்களை எதிர்த்து இட்டுக்கட்டப் பட்டிருக்கும் பொய்களெல்லாம் படிக்கின்றவர்களுக் குத் தெரிய வருமென்பது உண்மையாகும், இன்னும் அறிவாளிகளென வாதாடிய சிலர் இமாம் முஹம்மது அவர்களை எதிர்த்து எழுதிய புத்தகங்கள் அறிவாளி

களிடத்தில் மதிப்பிழந்தவையாகும்; ஏனெனில் அவை குர்ஆன், ஹதீஸ் அல்லது அறிவிற்குப் பொருந்து கின்ற ஆதாரத்தின் அடிப்படையில் எழுதப்பட்டவை யல்ல அனைத்தும் கட்டுக் கதைகள், பொய்யான ஹதீஸ்கள் ஆகிறவற்றை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டவையாகும்.

ஆசிரியர்.






# இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப்

## பிறப்பு

இவர்கள் பெயர் "முஹம்மது", இவர்கள் தந்தையின் பெயர் "அப்துல் வஹ்ஹாப்". இவர்கள் ஹிஜ்ரீ 1115ம் ஆண்டு (கி.பி. 1703) சவூதி அராபியாவின் தலைநகரான ரியாலின் வடபகுதியில் உள்ள "உயைனு" என்ற ஊரில் பிறந்தார்கள்.

இவர்கள் தந்தை மார்க்கக் கல்வியில் வல்லுனராக இருந்தார்கள். எனவே இமாம் முஹம்மது சொந்த ஊரில் வாழ்ந்து தம் தந்தையிடமே கல்வி பயின்றார்கள். அன்று "அப்துல்லாஹ் பின் முஹம்மது பின் ஹமது பின் முஅம்மர்" என்பவர் அமீராக இருந்தார். இமாம் முஹம்மது அவர்கள் சிறிய வயதிலிருந்தே மிக புத்தி கூர்மையானவர்களாகவும், நல்ல ஆரோக்கியமுடையவர்களாகவும் இருந்தார்கள். பத்து வயதில் திருக்குர்ஆனை மனனம் செய்து, பன்னிரண்டாவது வயதில் வாலிபத்தை எய்தார்கள். இவர்கள் தந்தை இவர்களைப் பற்றிக் கூறும்போது, 'முஹம்மதை பன்னிரண்டாவது வயதில் ஜமாஅத்துடன் தொழுவதற்கு தகுதியானவராகக் கண்டபோது, அதே வருடத்திலேயே திருமணம் செய்துவைத்தேன்,' எனக் கூறினார்கள்.

## கல்வி தேடல்

தம் தந்தையிடம் ஹன்பலி மத்ஹபின் பிக்ஹையும், குர்ஆன், ஹதீஸ் விளக்கங்களையும் கற்றார்கள். இவர்கள் சிறிய வயதிலிருந்தே திருக்குர்ஆன், ஹதீஸ் விளக்கங்களையும், இஸ்லாத்தின் கொள்கையையும் அறிவதில் மிக ஆர்வமுடையவர்களாகத் திகழ்ந்

தார்கள். இப்னு தைமிய்யா, இப்னுல் கையிம் போன்ற மேதைகள் எழுதிய புத்தகங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து அவற்றை அதிகமாகப் படித்து வந்தார்கள்.

## அறிவுப் பயணங்கள்

புனித மக்காவிற்குச் சென்று ஹஜ்ஜுக் கடமையை நிறைவேற்றிய பின், பெருமானார் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலை தரிசிப்பதற்காக திரு மதீனா சென்றார்கள். பின் பெருமானார் (ஸல்) அவர்களையும், அவர்கள் உத்தம ஸஹாபாக்களையும் ஜியாரத்துச் செய்தார்கள்.

## மதீனாவில் முஹம்மதின் ஆசிரியர்கள்

அன்று மதீனாவில் மிகப்பெரும் மார்க்க மேதையாக திகழ்ந்த "அப்துல்லாஹ் பின் இப்ராஹீம் பின் சைப்" என்பவர்களிடமிருந்து கல்வி கற்றார்கள். இவர்கள் "மஜ்மஆ"[1] என்ற ஊர்த் தலைவராக இருந்தார். தம் ஆசிரியரிடமிருந்து அதிகமான கல்வியையும் அவர் தம் நேசத்தையும் பெற்றார்கள். எனவே இவர்களுக்குப் புதிய அறிவுக் கலைகளைக் கற்றுக் கொடுப்பதில் ஆசிரியர், முழு முயற்சி எடுத்துக் கொண்டார். ஆசிரியரின் அன்பையும், பிரிக்க முடியாத தொடர்பையும் உண்டாக்கிக் கொள்வதற்கு மிக முக்கிய காரணமாக இருந்தது யாதெனில் ஏக தெய்வக் கொள்கையில் மாணவர், ஆசிரியர் இருவருடைய சிந்தனைகளும், அடிப்படைகளும் ஒன்றுபட்டிருந்தமையேயாகும், நஜ்து மாகாணத்தவர்களும், மற்றவர்களும் பிற்போக்

(1) மஜ்மஆ என்பது நஜ்து மாகாணத்தில் ஒரு ஊரின் பெயர்.

கான கொள்கையில் இருந்து, தவறிய செயல்கள் புரிந்து வருவதைக் கண்டு வேதனைப்படுவதில் ஆசிரியரும், மாணவர் முஹம்மதும் ஒன்றுபட்டிருந்தனர். எனவே முஹம்மதை ஆசிரியர் மிக நேசித்தார். தம் ஆசிரியரோடு தோழமை கொண்டிருந்ததனுல், அதிகமான பயன்களைப் பெற்ருர்கள். "இரக்கமுடையவர்களுக்கு அல்லாஹ் இரக்கம் காட்டுகின்ருன்" என்ற மஷ்ஹூர், முஸல்ஸல் ஹதீஸை இரு தொடர்கள்மூலம் அறிவிப்பதற்குத் தம் ஆசிரியர் அனுமதி வழங்கினுர்.

(1) இப்னு முப்லிஹ் என்பவர், இப்னு தைமிய்யா கூறியதாக, இவர் அவருடைய ஆசிரியர் கூறியதாக இப்படியே அஹமது பின் ஹன்பல் (ரலி) அவர்கள் வரை சென்று சேரும் தொடர்,

(2) "அப்துர் ரஹ்மான் பின் ரஜப்" என்பவர் "இப்னுல் கையிம்" சொன்னதாக இவர் "இப்னுதைமிய்யா" சொன்னதாக இப்படியே இமாம் அஹமது பின் ஹன்பல் (ரலி) அவர்கள் வரை சென்று சேரும் தொடர்.

மேலும் அக்கால மாபெரும் ஹதீஸ்கலைவல்லுனரான அப்துல்பாக்கி ஹன்பலிஎன்பார் மூலம் கிடைத்த ஹதீஸ்களையும் அறிவிப்பதற்கு முஹம்மதவர்களுக்கு ஆசிரியர் அனுமதி வழங்கினுர். அறுபெரும் ஹதீஸ் தொகுப்புக்களைத் திரட்டிய இமாம்களான புகாரி (ரஹ்) முஸ்லிம் (ரஹ்) திருமதி (ரஹ்) அபூதாவூது (ரஹ்) இப்னுமாஜா (ரஹ்) நஸயீ (ரஹ்) ஆகியோர் தொகுத்த ஹதீஸ்களையும் இமாம்களான மாலிக் (ரஹ்) ஷாபியீ (ரஹ்) அஹ்மதுப்னு ஹன்பல் (ரஹ்) போன்றவர்கள் தொகுத்த ஹதீஸ்களை அவரவர்களோடு இணைத்து அறிவிப்பதற்குள்ள அனுமதியையும் தம் ஆசிரியரிடமிருந்து பெற்ருர்கள்.

ஆசிரியர் அப்துல்லாஹ், இமாம் முஹம்மது அவர்களை ஹதீஸ்கலை மேதையான முஹம்மது ஹயாத் ஸிந்தி என்பவர்களிடம் அறிமுகப்படுத்திவைத்தார்கள். முஹம்மது தூய்மையான கொள்கையுடையவர்கள். இணை வைப்பதையும், இஸ்லாத்தில் புதுமையாகத் தோன்றியுள்ள பித்அத்களையும் அனுச்சாரங்களையும் வெறுக்கின்றவர்கள்; இஸ்லாமியப்பாதையில் போர்புரியவும் மார்க்கப்பிரச்சாரம் புரிவதற்கும் உதவியாக இருக்கும் அறிவென்னும் சக்திமிக்க ஆயுதத்தைத் தயார் செய்வதற்காகவே தம் ஊரை விட்டுப் புறப்பட்டுள்ளார்கள் என்றும் அறிமுகப்படுத்தினார்கள்.

மதினாவில் "அலி அபந்தி தாகிஸ்தானி" "இஸ்மாயீல் அஜ்லூனீ" "அப்துல் லத்தீப் அபாலிகி அல் அஹ்சாயீ" "முஹம்ம அபாலிகி" போன்ற மேதைகளிடமிருந்து கல்வி பெற்றார்கள்.

தம் ஆசிரியர் அப்துல்லாஹ் வழங்கிய அனுமதியைப் போன்றே "தாகிஸ்தானி" "அஹ்ஸாயீ" என்பவர்களும் "அபில்மலாஹிப்" என்பவர் மூலம் கிடைக்கப் பெற்ற ஹதீஸ்களை அறிவிப்பதற்கு அனுமதி வழங்கினார்கள்.

## பஸராவில் இமாம் முஹம்மதின் ஆசிரியர்கள்

மதீனாவிலிருந்து நஜ்து மாகாணம் சென்று, அங்கிருந்து பஸரா என்ற ஊருக்கு சென்று, அங்கு சில காலம் தங்கி மார்க்க மேதைகள் பலரிடம் கல்வி பயின்றார்கள். இவர்களில் "முஹம்மது மஜ்மூயீ" என்பார் குறிப்பிடத்தக்கவராவார்கள். இமாம் முஹம்மது பஸராவில் இருக்கும் காலத்தில் இலக்

கணம், மொழி, ஹதீஸ் போன்ற கலைகளை அதிகம் பயின்று சில புத்தகங்களும் எழுதினார்கள். இஸ்லாத்தில் பித்அத் என்னும் புதுமையாகத் தோன்றியவற்றையும் அனுச்சாரங்களையும், சமாதிகளுக்குச் சென்று பூஜை புரிதல் போன்ற இஸ்லாத்திற்கு முரணானவற்றையும் ஒழிப்பதிலேயே தம் அறிவையும், ஆராய்ச்சியையும் பயன்படுத்தினார்கள். தாம் கூறுகின்ற ஒவ்வொன்றுக்கும் தகுந்த, மிகத் தெளிவான ஆதாரங்களை எடுத்துக் காட்டினார்கள்.

இவர்கள் பஸராவில் கல்வி கற்கின்ற காலத்தில் அங்கு மக்கள் பித்அத்கள் புரிவதிலும் கப்ருகளை வணங்குவதிலும், இன்னும் பல அனுச்சாரங்களிலும் மூழ்கியிருந்தனர். அவற்றை விட்டு மக்களைத் தடுத்த போது மக்கள் அவர்களுக்குப் பல தொல்லைகள் கொடுத்து, இமாம் முஹம்மது அவர்களை உச்சிப் பொழுதில் ஊரைவிட்டு வெளியேற்றினார்கள். இவர்களின் ஆசிரியரான "முஹம்மது மஜ்மூயீ" அவர்களுக்கும் சில தொல்லைகளை விளைவித்தார்கள்.

இவர்களின் தொல்லைகளைத் தாங்க முடியாமல் இமாம் முஹம்மது மூளையை உருக்கும் கொடும் வெயிலில் கடுமையான தாகத்தையும் சகித்துக்கொண்டு ஸுபைர்(1) என்ற ஊருக்குக் கால்நடையாகச் சென்றார்கள். வழியில் அவ்வூரைச் சார்ந்த "அபூஹுமைதான்" என்பவர் தம் வாகனத்தில் இமாம் முஹம்மதை ஏற்றிக்கொண்டு, தம் ஊருக்கு அழைத்துச் சென்றார். பின் மார்க்க மேதைகளிடமிருந்து அறிவுக் கருவூலங்களையும், மார்க்கக் கலாச்சாரங்களையும் அதிகமாகப் பெறுவதற்காக ஷாம் நாடு நோக்கிக் கால் நடையாகச் சென்றார்கள்.

---

(1) ஸுபைர் என்பது பஸராவை அடுத்துள்ள ஓர் ஊரின் பெயர்.

## நஜ்து மாகாணம் திரும்புதல்

பல இஸ்லாமிய நாடுகள் சென்று மார்க்கக் கலைகளை கற்க வேண்டுமென பேரவாக் கொண்டிருந்த இமாம் முஹம்மதுக்கு, அவர்களின் பொருளாதாரம் இடம் கொடாததால் ஸிரியாவை விட்டுவிட்டு "அஹ்சா"(2) என்ற நகருக்குச் சென்று அங்கு "அப்துல் லத்தீப் அஷ்ஷாபியீ" என்பவர்களிடம் தங்கி சில காலம் பயின்றார்கள். பின் தம் தாயகமான நஜ்து மாகாணத்திற்குத் திரும்பி விட்டார்கள். தம் தந்தை அப்துல் வஹ்ஹாப் இருந்து வந்த "ஹரீமலா"(3) என்ற ஊருக்குச் சென்று அங்கு தம் தந்தையிடமே அதிகக் கல்வியைப் பெற்றார்கள்.

ஷெய்குல் இஸ்லாம் இப்னு தைமிய்யா, இப்னுல் கையிம் போன்ற பெரியார்கள் எழுதிய புத்தகங்களை அதிகமாகப் படித்தார்கள். இதனால் அறிவுக்கண்கள் திறக்கப் பெற்று, ஞான ஒளியடைந்தார்கள். நஜ்து மாகாணத்திலும், தம் அறிவுப் பிரயாணங்களில் கண் கூடாகக் கண்ட மூடக் கொள்கைகளையும், கெட்ட பழக்க வழக்கங்களையும் ஒழிக்கப் பிரச்சாரம் செய்யத் திட்டமிட்டார்கள்.

## பிரச்சாரத்திற்கு முன்னர் நஜ்தின் நிலை

இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள் அறிவொளியைத் தேடி ஹிஜாஸ், அஹ்ஸா, பஸரா, ஸுபைர் போன்ற ஊர்களுக்குச் சென்றார்களென மேலே அறிந்தோம். தம் நாடான நஜ்து மாகாணத்தில் கண்ட வெறுக்கத் தக்க பழக்க வழக்

(2) சவூதி அராபியாவின் வட கிழக்கில் ஒரு மாகாணம்.

(3) நஜ்து மாகாணத்தில் ஒரு கிராமம்.

குங்களையும், மோசமான கொள்கைகளையும், அறியாமையையும், மனிதத்துவத்திற்கு ஊறு விளைவிக்கின்ற இழிவான, வெறுக்கத்தக்க எத்தனையோ விஷயங்களையும், அங்குள்ள மக்களின் தவறிய போக்குகளையும் தக்க ஆதாரங்கள் காட்டி எதிர்க்கவே, மேல் கூறப்பட்ட நாடுகளுக்கு மார்க்கக் கல்வித் தாகம் தீர்க்கச் சென்றார்கள்.

இவர்கள் கல்வி கற்கின்ற நாள்களிலும்கூட தம்முடன் இருந்து வந்தவர்களிடம், தாம் அறிந்த மார்க்க அறிவுகளையும், ஏகத்துவக் கொள்கையினையும் எடுத்துக்கூறி, பொதுமக்களும், அறிவாளிகளென வாதாடிய சிலர்களும் புரிந்து வந்த மூடப்பழக்க வழக்கங்களை எடுத்து விளக்கி வந்தார்கள்.

இமாம் முஹம்மது அவர்கள் மதீனாவில் இருந்த போது மக்கள் ரஸூலுல்லாஹி (ஸல்) அவர்களிடம் இஸ்திகாதா தேடுவதையும், அல்லாஹ்வை அழைப்பதை விட்டுவிட்டு இறந்தவர்களை அழைத்து உதவி தேடுவதையும் செவிமடுத்த இமாம் முஹம்மது அவர்களின் கோபம் பொங்கியெழுந்தது, எனவே தம் ஆசிரியரான "முஹம்மது ஹயாத் சிந்தி" என்பவரிடம் இவ்வாறு செய்கின்ற மக்களைப் பற்றி என்ன கூறுகின்றீர்கள் என வினவியபோது கீழ்க்காணும் திருக்குர்ஆன் வசனத்தை ஓதினார்கள்.

إِنَّ هَٰٓؤُلَآءِ مُتَبَّرٌ مَّا هُمْ فِيهِ وَبَٰطِلٌ مَّا كَانُوا۟ يَعْمَلُونَ

(நிச்சயமாக இவர்கள் (பின்பற்றியிருக்கும்) மார்க்கம் அழிந்து விடக் கூடியது. அவர்கள் செய்பவை யாவும் வீணானவை. (யாதொரு பலனையும் அளிக்காது) [7:139]

நஜ்து மாகாண மக்கள் நிலைமைகளையும், அவர்கள் கல்வி தேடிச் சென்ற ஊர்களிலுள்ள மக்களின் நிலைமைகளையும் ஆராய்ந்தபோது அம்மக்கள் மார்க்கத்தை விட்டும் தூரமாக இருந்து வருவதைக் கண்டார்கள்.

நஜ்து மாகாண வரலாற்று ஆசிரியர்களான "இப்னு பிஷ்ர்" "இப்னு கன்னும்" "ஆலூசி" இன்னும் தற்கால வரலாற்றாசிரியர் "ஹாபிஸ் வஹபா" போன்றவர்கள் குறிப்பிடுவது போன்று நஜ்து மாகாணம் அனாச்சாரம், இஸ்லாத்திற்கு முரண்பட்ட கொள்கைகள் முதலியவற்றின் உறைவிடமாக இருந்தது. அதிகமான கப்ருகளை சஹாபாக்களுடையதெனக் கருதி அங்கே மக்கள் சென்று புனித கஃபாவிற்கு ஹஜ்ஜு செய்யச் செல்வது போன்று செயல்பட்டு வந்தனர். சமாதிகளிடம் அவர்கள் தேவைகளைக் கோரி, தங்களுக்கு ஏற்பட்டுள்ள தொல்லைகளையும், துன்பங்களையும் போக்குமாறு வேண்டினர், "ஜீபைலா" என்ற ஊரில் "ஸைதுப்னுல் கத்தாப்"[1] என்பவரின் கப்ருக்குச் சென்று வணக்கங்கள் புரிந்து, அதனிடம் தங்கள் தேவைகளை வேண்டி வந்தார்கள். இவ்வாறே "தர்யிய்யா" என்ற ஊரிலும் செய்து வந்தனர்.

ஆச்சரியத்திற்குரியதென்னவெனில் "அல்மன்பூஹா" என்ற ஊரில் மலட்டு ஆண் பேரீத்தம்பழ மரத்தடியில் சென்று அதைக் கொண்டு வஸீலா தேடி வந்தனர். திருமணமாகாத வயதான பெண்கள் அந்த மரத்தை நாடிச் சென்றாளானால், திருமணம் செய்து கொள்வாள் என்பது இவர்கள் கொள்கையாக

---

(1) இவர் உமறுப்னுல்கத்தாப் (ரலி) அவர்களின் சகோதரர்.

இருந்தது. எனவே அம்மரத்தை நாடிச் செல்கின்றவள் அம்மரத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டு "ஓ மரமே! ஒரு வருடத்திற்குள் ஒரு கணவனைக் கொடு" என ஓலமிடுவாள். இவ்வாறு புரிவது அவர்கள் வழக்கமாக இருந்தது.

"தர்யிய்யா" என்ற ஊரில் அமீர் ஒருவரின் மகளுக்குச் சில கெட்டவர்கள் கொடுத்த துன்பத்தின் காரணத்தால், அவள் ஊரை விட்டு வெளியே ஓடி ஒரு குகையில் விழ்ந்து மாண்டாள் என்பதாக அங்கு சென்று தங்கள் தேவைகளை குகையிடம் வேண்டினார்கள்.2

"குபைரா" என்ற பள்ளத் தாக்கில் "லிரார்பின் அஸ்வர்" என்பவரின் கப்ரு இருப்பதாகக் கருதி, சிந்தனைக்கு எட்டாத எத்தனையோ ஷிர்க்கான செயல்கள் புரிந்து வந்தார்கள்.

ஹிஜாஸ் மாகாணத்தில் பெருமானார் (ஸல்) அவர்கள், ஸஹாபாக்கள் அஹ்லுல்பைத்களுடைய கப்ருகளுக்கு அல்லாஹ்விற்கு செலுத்தும் வணக்கங்களைப்

---

2. "தர்யிய்யா" என்ற ஊரில் அமீர் ஒருவருடைய மகளின் அழகைக் கண்டு மயங்கிய சில வாலிபர்கள், அவளை நெருங்கித் தவறாக நடக்க முற்பட்டபோது, இத்துரோகிகள் கையில் சிக்கி இழிவடைவதைவிட மரணமடைவதே மேல் எனக்கருதிய அப்பெண் ஒருமலை அடிவாரத்தில் சென்று இறைவனிடம் பிரார்த்தித்து "இறைவா என்னை இப்பகைவர்களை விட்டுக் காப்பாற்று" என வேண்டினாள். இறைவன் அவள் பிரார்த்தனையை அங்கீகரித்து, அம்மலையில் ஒரு குகை பிளக்கச் செய்து, அப்பெண்ணை அதில் விழவைத்து மரணிக்கச் செய்தான். இதற்காக மக்கள் அங்கு சென்று அக்குகையிடம் தங்கள் தேவைகளைக் கோரி வந்தனர்.

[அப்துல் கபூர் அத்தார் எழுதிய கிதாபிலிருந்து சம்பவத்தின் விளக்கம் எடுக்கப்பட்டுள்ளது—தமிழாக்கியோன்]

புரிந்து வந்தனர். பஸரா, சுபைர் என்ற ஊர்களிலும் மக்கள் நிலை இவ்வாறே இருக்கக்கண்டார்கள். இராக், ஷாம், எகிப்து, எமன் போன்ற நாடுகளில் அறிவிற்கு எட்டாத அளவிற்கு, அறியாமைக் காலச் சிலை வணக்கங்களை மக்கள் புரிந்து வருவதையும் செவியுற்றார்கள். இவ்வாறே "அத்ன்" என்ற ஊரில் "ஐதுறூஸ் வலி" "எமன்" நாட்டில் "ஸைலயீ" வலி என்பவர்களைப் பற்றியும் அதிகமாகக் கேள்விப்பட்டார்கள். இவையெல்லாம் பற்றி அலசி ஆராயவும் செய்தார்கள்.

மக்கள் புரிந்து வந்த இச் செயல்களை குர்ஆன், ஹதீஸ் என்னும் தராசில் எடைபோட்டுப் பார்க்கும் போது அம்மக்கள் அல்லாஹ்வின் மார்க்கச் சட்டங்களை விட்டு தூரமாக இருக்கக் கண்டார்கள். பெருமானார் (ஸல்) அவர்களை இறைவன் உலகிற்கு ஏன் அனுப்பினான் என்பதையோ மானிட சமுகம் அனைத்திற்கும் முஹம்மது (ஸல்) அவர்களை நபியாக இறைவன் ஏன் அனுப்பினான் என்பதையோ மக்கள் அறியாமலிருப்பதைக் கண்டார்கள். அறியாமைக் காலம் என்றால் என்னவென்பதையும், அதில் இருந்து வந்த சிலை வணக்கங்களையும் இவர்கள் அறியவில்லை. மார்க்கச் சட்டங்கள் பலவற்றை இம்மக்கள் மாற்றி மறைத்தனர். இவ்வாறு மக்களின் மார்க்க நிலைமை அமைந்திருந்தது.

## நஜ்து மாகாணத்தின் அரசியல் நிலை

"இருபதாம் நூற்றாண்டில் அரபியர்கள்" என்ற புத்தகத்தில் காணப்படுவது போன்று மக்கள் மத்தியில் தெய்வீகச் சட்டம் செயல்படுத்தப்படவில்லை. அவர்கள் தலைவர்களின் மனோ இச்சைக்கிணங்க இயற்றப்படுவதே சட்டமாக இருந்தது. நீதி என்பதே

காணப்படவில்லை, நஜ்து மாகாணம் பல ஊர்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வோர் ஊரையும் ஒரு தலைவன் ஆட்சி செய்து வந்தான். ஓர் ஊருக்கும் மற்ற ஊருக்கும் எவ்விதத் தொடர்பும் இருக்கவில்லை.

இத்தலைவர்களில் முக்கியமானவர்கள் "அஹ்சா" என்ற ஊரில் "பனூ காலித்" என்பவர்களும், "உயைனா" என்ற ஊரில் "ஆலு முஅம்மர்" என்பவர்களும், ஹிஜாசில்" ஷரீபு(1)களுமாவார்கள். இவர்களுக்கிடையில் எப்போதும் சண்டைகள் நடந்து கொண்டே இருந்தன. குறிப்பாக கிராமவாசிகளோடு அதிகச் சண்டைகள் ஏற்பட்டன. வலியவன் எளியவனை நேரம் கிடைக்கின்றபோது அடித்து வீழ்த்துவதே அவர்கள் வழக்கமாக இருந்தது.

இமாம் முஹம்மதவர்கள் தம் கல்விப் பயணத்திலிருந்து திரும்பி வந்தபோது நஜ்தின் அரசியல் நிலை இவ்வாறு அமைந்திருந்தது.

## மார்க்கச் சீர்திருத்தத்தின் ஆரம்பம்

மக்களின் மார்க்க, அரசியல் நிலைகளை நன்கு ஆராய்ந்து உணர்ந்தபின், ஹிஜாஸிலும் மற்ற பகுதியிலுமுள்ள ஆலிம்கள் மக்கள் புரிந்துவந்த வெறுக்கத்தக்க பழக்கவழக்கங்களுக்கும், பித்அத்தான செயல்களுக்கும் ஆதரவாக இருந்தனர். இவர்களில் மக்கள் புரிந்துவந்த மாபெரும் தவறுகளை எதிர்க்கச் சக்தியற்ற ஆலிம்கள் சிலர் மட்டும் உண்மையை அறிந்திருந்தனர்; பிற்போக்கான ஆலிம்கள் இஸ்லாத்தின் உயர்ந்த அடிப்படைக் கொள்கைகளில்,

(1) அக்காலத்தில் மக்காவைப் பரிபாலித்து வந்த ஒவ்வொருவரும் "ஷரீப்" என அழைக்கப்பட்டனர்.

திருக்குர்ஆனும், பெருமானார் (ஸல்) அவர்களும் காட்டிய பரிசுத்த வழிமுறைகளும் வெறுக்கின்ற வற்றைப் புகுத்திவிட்டனர், என்பதை இமாம் முஹம்மதவர்கள் உணர்ந்தார்கள். மக்கள் தவறு களிலும் பித்அத்களிலும் மண்டியிட்டிருப்பது இமாம் முஹம்மதவர்களின் கொள்கையை வலுப்படுத்தியது. ஏனெனில் :

நிச்சயமாக நீங்கள் உங்களுக்கு முன் உள்ளவர்கள் நடைமுறைகளைப் பின்பற்றுவீர்கள்.

என்னுடைய உம்மத்தில் ஒரு கூட்டம் சிலைகளை வணங்குவதுவரை மறுமைநாள் ஏற்படுவதில்லை.

இஸ்லாம் வியப்பிற்குரியதாகவே ஆரம்பமானது. வியப்பிற்குரியதாகவே மீளும்.

என்பன போன்ற பெருமானார் (ஸல்) அவர்களின் திரு வாக்கியங்களை இமாம் முஹம்மது அவர்கள் படித்துணர்ந்த காரணத்தால், முஸ்லிம்கள் தம் மார்க்கத்தைவிட்டுப்பின் தங்கிச் செல்வது உண்மை தான், என்ற இமாம் முஹம்மதின் கொள்கை உறுதிப் பட்டது. எனவே மக்கள் சீரிய பாதையில் இல்லை, நேரிய நெறியைவிட்டு அகன்று விட்டார்கள் என்பதை அம்மக்களுக்கு வெளிப்படுத்தத் திட்ட மிட்டார்கள்.

எழுத்தாளர்கள் சிலர் குறிப்பிடுவதுபோன்று, அன்று மக்கள் மிக அபாயமான நிலையில் காணப் பட்டார்கள். அவர்களைத் திருத்தப் பெரும் உள்ளத் திறமையும், வீரமும் தேவைப்பட்டது. அல்லாஹ்வின் அருளைப் பெற்று, உண்மைக்காகப் போராடி,துன்பப் படும் மானிட சமூகத்தைக் காப்பாற்றும் பாதையில் ஏற்படும் இன்னல்களின்போது எள்ளளவும் அசையாத

உறுதிமிக்க ஈமான் தேவைப்பட்டது. போதிய பேச்சுத் திறனும், தகுந்த ஆதாரங்களும் எதிர் நோக்கும் சந்தேகங்களை அகற்றத் தேவைப்பட்டன. தம்மையும், தம் பிரச்சாரத்தையும் காப்பாற்ற உறுதியான ஆதரவாளர்கள் தேவைப்பட்டனர்.

## தம் சமூகத்திற்கு அழைப்புக் கொடுத்தல்

"ஹுரீமலா" என்ற ஊரில் தம் குடும்பத்தினர் களுக்குப் பிரச்சாரம் செய்ய ஆரம்பித்தார்கள். அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாரையும் அழைத்து உதவிகள் தேடக் கூடாது. அல்லாஹ் விற்கு மட்டுமே அறுத்து பலியிட வேண்டும், அவ னுக்கே நேர்ச்சை செய்யவேண்டுமென்றும், கப்ருகள், மரங்கள், கற்கள்மீது இருந்துவரும் மக்கள் கொள்கை களும், அவற்றினிடமிருந்து உதவி தேடுவதும், அவற்றுக்கு நன்மை, தீமை செய்கின்ற சக்தி இருக் கின்றதென நம்புவதும் மாபெரும் வழி கேடாகு மென்றும், அவர்கள் விரும்பத் தகாத நிலையிலுள் ளார்கள் எனவே, அவற்றை விட்டுவிடுவது அவசிய மாகுமெனவும் மக்களுக்குப் போதித்தார்கள்.

தாம் கூறுகின்றவற்றுக்கு குர்ஆன், ஹதீஸ், ஸஹாபாக்கள் சரிதை முதலியவற்றிலிருந்து தகுந்த சான்றுகளை எடுத்துக் காட்டினார்கள். இதனால் இமாம் முஹம்மதவர்களுக்கும் மக்களுக்கும் இடை யில், கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டன. தந்தையும் தவறுகள் செய்து வந்தவர்களால் சதிக்கப்பட்டு அவரும் இமாம் முஹம்மதை எதிர்த்தார்.

இமாம் முஹம்மதவர்கள் தம் சேவையைப் பேச்சாலும், எழுத்தாலும், உபதேசங்களாலும், தொடர்ந்து செயல்படுத்தி வந்தார்கள். அவ்வூரி

லுள்ள சிலர் இமாமவர்களை நேசித்தனர். ஹிஜ்ரி 1153-ம் ஆண்டு தந்தையார் காலமானார்.

அப்துல் வஹ்ஹாப் அவர்கள் இறுதிக் காலத்தில் தம் மகன் இமாம் முஹம்மதவர்கள் கூறுவதை ஏற்றிருந்தார்கள்; இவ்வாறே அவர்களின் சகோதரர் சுலைமானும் பல சர்ச்சைக்குப்பின் இமாம் முஹம்மது அவர்களின் கொள்கையை ஏற்றார்.1

தம் தந்தையின் மரணத்திற்குப்பின் தமது சமூகத்திற்கு பிரச்சாரம் செய்வதில் தீவிரமாகி மக்களின் வழிகேடான கொள்கைகளை மறுத்தார்கள். தம் சொல், செயல்களில் பெருமானார் (ஸல்) அவர்களைப் பின்பற்றுமாறு மக்களை அழைத்தார்கள்.

அவ்வூரில் இரண்டு வம்சத்தினரில் ஒவ்வொருவரும் தலைமைப் பதவியில் போட்டியிட்டுக் கொண்டிருந்தனர். அவர்கள் மத்தியில் நேர்மையான தீர்ப்பு வழங்குவதற்கு எவருமிருக்கவில்லை. அவ்விரு வம்சத்தில் ஒன்றிற்குச் சில அடிமைகள் இருந்தார்கள். இவர்கள் எல்லாவிதமான தவறுகளையும் புரிந்து வந்தார்கள், மக்களுடன் வரம்பு மீறித் தவறாகவும் நடந்து வந்தார்கள். இவர்களைத் தடுத்து நிறுத்த இமாம் முஹம்மதவர்கள் திட்டமிட்டார்கள். இவர்களின்

---

(1) "ஸியானத்துல் இன்ஸான் அன் வஸ்வஸத்தித் தஹ்லான்" பக்கம் 461. இதில் சுலைமான் இப்னு அப்துல் வஹ்ஹாப் அவர்கள் "அஹ்மது முஹம்மது அத்துவைஜிரி" என்பவருக்கும், "முஹம்மதுபின் உதுமான்" என்பவருக்கும் எழுதிய கடிதத்தைப் படித்துப் பாருங்கள். அதில் உண்மையைப் பின்பற்றுமாறும், தவறுகளை விட்டுவிடுமாறும் போதித்து, 'ஷிர்க்' என்பது இறைவன் விளக்கியவற்றில் மாபெரியதாகுமெனவும் சுலைமான் தெளிவுபடுத்தினர், அவர்கள் மூவரும் சுலைமானுக்கு எழுதிய பதிலை 416-ம் பக்கத்தில் காணமுடியும், அதில் அவர்கள் இருந்துவந்த மூடப் பழக்கங்களை விட்டுவிட்டதாகக் கூறுகின்றார்கள்.

இத்திட்டத்தை அறிந்த அவ்வடிமைகள் இமாம் அவர்களைக் கொலை செய்வதற்காக நள்ளிரவில் இமாம் முஹம்மதவர்களின் வீட்டிற்குச் சென்று சுவர்மீது ஏறி, வீட்டினுள் செல்ல முயன்றபோது அண்டை வீட்டார்கள் அறிந்து சப்தமிட்டனர். எனவே அவ்வடிமைகள், தங்கள் திட்டத்தில் தோல்வியடைந்து ஓடிவிட்டனர்.

இத்தகைய அவல நிலையை அறிந்து வேதனையடைந்த இமாம் முஹம்மது அவ்வூரை விட்டு வெளியேறித் தம் சொந்த ஊரான "உயைனு"விற்குச் சென்றார்கள். அன்று அவ்வூரின் தலைவராக இருந்து வந்த "உதுமான் பின் ஹம்துபின் முஅம்மர்" என்பவர் மிக கண்ணியத்தோடு வரவேற்றார். அவருக்கு இமாம் முஹம்மதவர்கள் தம் சீர்திருத்தப் பிரச்சாரத்தைப் பற்றி எடுத்துக்கூறி, இப்பிரச்சாரம் குர்ஆன், ஹதீஸின் அடிப்படையில் அமைந்துள்ளது என்பதையும் விளக்கினார்கள். ஏக தெய்வக் கொள்கையின் பொருளை விளக்கி, தற்கால மக்களின் கொள்கை இதற்கு மாற்றமாக இருப்பதையும் எடுத்துக்காட்டி குர்ஆன், ஹதீஸிலிருந்து ஆதாரங்களையும் எடுத்தோதினார்கள். "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்ற திருக்கலிமாவிற்குத் தாங்கள் உதவினால், அல்லாஹ் உங்களுக்கு உதவுவான் எனக்கூறி உதுமானிற்கு நசீஹத்துச் செய்தார்கள். இக்கலிமாவினால் தான் மோட்சமும், நஜ்த, மற்றைய நாடுகளின் தலைமைப் பதவியும் கிடைக்குமென போதித்தார்கள்.

இமாம் முஹம்மதவர்களின் இப்போதனைகளை உதுமான் ஏற்றார். எனவே இமாம் முஹம்மது தம் பிரச்சாரத்தை பகிரங்கப்படுத்தி, அல்லாஹ் ஒருவனையே வணங்கி, பெருமானார் முஹம்மது (ஸல்)

அவர்களின் வழிமுறைகளைப் பின்பற்றி, நல்லதை ஏவி, தீயதைத் தடுத்துச் செயல்பட முன்வந்தார்கள். மேலும் அவ்வூரில் மக்கள் பூஜை செய்து வந்த மரங்களை முறித்து, 'ஜைதுப்னுல கத்தாப்' கப்ரில் கட்டப் பட்டிருந்த குப்பாவை தலைவர் உதுமானின் உதவியுடன் உடைத்தார்கள்; புத்தி அறிவுள்ள ஒரு பெண் தான் விபச்சாரம் செய்ததாக பலமுறை நிரூபித்த போது, அவள்மீது இஸ்லாமிய தண்டனையைச் செயல் படுத்தினார்கள். எனவே இமாம் முஹம்மதவர்களின் பெயர் நாடெங்கும் பரவ ஆரம்பித்தது.

இமாம் முஹம்மதவர்களின் பிரச்சாரச் செய்தி "அஹ்சா" "பனூ காலித்' என்ற ஊர்களின் தலைவரான "சுலைமான் பின் முஹம்மது பின் உரையிர்" என்பவரை எட்டியபோது, அறியாமையும், அநீதியும் நிறைந்து காணப்பட்ட இவர் "உதுமான் பின் முஅம்மர்" என்பவருக்குக் கடிதம் எழுதி இமாம் முஹம்மது அவர்களைக் கொலை செய்யுமாறு கட்டளையிட்டார். அவ்வாறு அவரைக் கொலை செய்யவில்லையானால் நிரந்தரமாகக் கொடுத்துவரும் நிலவரியை நிறுத்தி விடுவதாக பயமுறுத்தினர்.

இவ்விஷயத்தைப் பெரிதாக நினைத்த உதுமான் இப்னு உரைருக்கு மாறு செய்வதை அஞ்சினர். இவருக்கு இமாம் முஹம்மதவர்களின் உபதேசமும் பிரச்சாரமும் எவ்விதப் பயனும் அளிக்கவில்லை—எனவே இமாம் முஹம்மதவர்களை ஊரைவிட்டு வெளியேற்றினர். இவ்வாறு இறைவன் பாதையில் ஏற்படுகின்ற இன்னல்களைச் சகிப்பது பிரச்சாரகர்களின் மிக முக்கியமான ஓர் அம்சமாகும். உண்மையான முத்தகீன்களுக்கு எவ்வளவு தொல்லைகள் ஏற்பட்டாலும், அவர்களுக்கே நல்மோட்சம் இருக்கின்றது.

இமாம் முஹம்மதவர்கள் அவ்வூரை விட்டு வெளியேறினாலும், அவர்களைக் கண்காணிப்பதற்காக ஒருவர் இவர்கள் பின்னால் அனுப்பப்பட்டார். கடுமையான வெய்யிலில் எவ்விதத் துணையுமின்றி, ஒரு விசிறியை மட்டும் கையில் ஏந்தி, சென்றார்கள் இமாம் முஹம்மது.

வழியில் கண்காணிப்பாளன் இமாம் முஹம்மதை கொலை செய்ய நினைத்தான். ஆனால் அல்லாஹ் அவர்களைக் காப்பாற்றினான். கொல்ல நினைத்தவன் கை நடுங்கித் திரும்பிச் சென்று விட்டான்.

وَمَنْ يَتَّقِ اللّٰهَ يَجْعَلْ لَّهٗ مَخْرَجًا وَّيَرْزُقْهُ مِنْ حَيْثُ لَا يَحْتَسِبُ ط

(யார் அல்லாஹ்வை பயந்து நடக்கின்றார்களோ அவர்களுக்கு (துன்பங்களிலிருந்து) ஒரு (நல்) வழியை ஏற்படுத்திக் கொடுப்பான்; மேலும், அவர்கள் அறியாத விதத்தில் அவர்களுக்கு வாழ்க்கை வசதிகளை அருளுகின்றான்) [65:2-3] என்ற திருக்குர்ஆன் வசனத்தை இடைவிடாது ஓதி அல்லாஹ்வை அதிகமதிகம் ஞாபகம் செய்து கொண்டே சென்றார்கள்.

இறுதியாக "தர்யிய்யா" என்ற ஊரில் ஹிஜ்ரீ 1158ம் ஆண்டு "அப்துர்ரஹ்மான் பின் சுவைலிம்" "அஹ்மது பின் சுவைலிம்" என்பவர்களிடம் விருந்தாளியாக தங்கினார்கள்.

'மக்கள் இமாம் முஹம்மதின் பிரச்சாரத்தை ஏற்றுக் கொள்ளாமல், அவர்களுக்குப் பல தொல்லைகள் கொடுக்கின்ற இந்நிலையில், நாம் இமாம் முஹம்மதிற்கு ஆதரவு கொடுப்போமானால், "தர்யிய்யாவின்"

அமீர் ஏதும் செய்துவிடுவாரோ,' என இப்னு சுவை லிம் அஞ்சினர். ஆனால் உறுதியான ஈமானுடைய இமாம் முஹம்மது, அவருக்கு அமைதி கூறி பல உப தேசங்கள் செய்து, நிச்சயமாக அல்லாஹ்வின் மார்க் கத்திற்கு ஆதரவு கொடுக்கின்றவர்களுக்கு எவ்விதக் கஷ்டமும் நேருவதில்லை எனக் கூறி ஊக்கமூட்டினார் கள்.

இவர்களின் பிரச்சாரத்தின் உண்மையை அறிந்த ''தர்யிய்யா'' ஊரின் முக்கியஸ்தர்கள், இமாம் முஹம் மதை இரகசியமாகச் சந்தித்தபோது அவர்களுக்கு தவ்ஹீதின் விளக்கங்களையும், தம் பிரச்சாரத்தின் உண்மைகளையும் எடுத்துக் கூறினார்கள்.

அமீர் முஹம்மது பின் சவூதிற்கு ''மஷாரி'' ''தனிய்யான்'' என்று சகோதரர்கள் இருவர் இருந்த னர். இவர்கள் இமாம் முஹம்மதை இரகசியமாக சந் தித்து, அவர்களின் பிரச்சாரத்தின் உண்மைகளை அறிந்தபின் அவற்றைத் தம் சகோதரரான அமீர் முஹம்மது பின் சுவூதிடம் விளக்கினார்கள்.

''இமாம் முஹம்மதவர்கள் முஹம்மது பின் சுவை லிம் என்பவரிடம்விருந்தாளியாகத் தங்கியுள்ளார்கள்: இப்பெரியார் இறைவனால் உங்கள் பக்கம் அனுப்பப் பட்டவராவார். எனவே இறைவன் உங்களுக்கென அருளிய இந்நல்ல சமயத்தை பயன்படுத்திக் கொள் ளுங்கள்,'' எனக்கூறி இமாம் முஹம்மதை சந்திப்பதின் பால் ஆசையூட்டினார்கள். தம் சகோதரர்களின் விருப்பத்திற்கிணங்க அமீர் முஹம்மது பின் சுவூது இமாம் முஹம்மதை சந்தித்தார்.

அமீருக்கு ஏகதெய்வக் கொள்கையின் உட் பொருளை விளக்கி, இந்த ஏகதெய்வக் கொள்கையை

நிலை நாட்டவே ரசூல்மார்கள் அனுப்பப்பட்டார்கள் என்பன போன்றவற்றைக் குறிக்கும் இறை வசனங்களையும், அல்லாஹ் அல்லாத மற்றவர்களுக்கு வணக்கம் புரியக் கூடாது என்பதைக் குறிக்கும் இறை வசனங்களையும் ஓதிக் காண்பித்தார்கள். மேலும் நஜ்து மாகாணத்தில் நடக்கின்ற இணை வைக்குதல் கப்ரு வணக்கம், அறியாமை, கொலை, கொள்ளை இவற்றைச் சுட்டிக் காட்டினார்கள். மக்கள் மார்க்கத்தில் பலஹீனமானவர்களாகவும், இஸ்லாமிய ஷரீஅத்துச் சட்டங்களை அறியாதவர்களாகவும் பிற்போக்கான நிலையிலுள்ளார்கள்; எனவே முஸ்லிம்களை ஒன்று சேர்க்கின்ற தலைவராக இருந்து அரசு பொறுப் பேற்று நடத்தி, தமக்குப்பின் தம் மக்களுக்கு ஆட்சிப் பொறுப்பை விட்டுச் செல்லுமாறு அமீர் சுவூதிடம் இமாம் முஹம்மது வேண்டினார்கள்.

இதனால். அமீர் முஹம்மது பின் சுவூதின் உள்ளத்தை இறைவன் திறந்து கொடுத்து, இமாம் முஹம்மதின் பிரச்சாரம் உண்மையானதென்பதை அறியச் செய்தான். எனவே தாம் இமாம் முஹம்மதின் பிரச்சாரத்திற்கு உதவுவதாகவும், பிரச்சாரத்தை எதிர்க்கின்றவர்களோடு போர் புரியத் தயாராக இருப்பதாகவும் அமீர் முஹம்மது பின் சுவூது வாக்களித்து, சில நிபந்தனைகள் விதித்தார்:

1. இறைவன் உங்கள் பிரச்சாரத்திற்கு வெற்றி அளித்தால் எங்களை விட்டுச் செல்லக் கூடாது.
2. "தர்யிய்யா" ஊர் மக்கள் மீது விதிக்கப்பட்டுள்ள வரியை வாங்கத் தடை செய்யக் கூடாது.

இமாம் முஹம்மது முதல் நிபந்தனையை ஏற்றுக் கொண்டார்கள். "இறைவன் உங்களுக்குப் பல வெற்றிகள் அருளி அவற்றின் வாயிலாகக் கிடைக்கும்

பொருளைவிட அதிகமான பொருளை தரக் கூடும்; எனவே மக்களிடமிருந்து வரி வாங்காமலிருப்பது நல்லது'' என இரண்டாவது நிபந்தனைக்கு பதிலளித்தார்கள்.

அல்லாஹ்வின்பால் மக்களை அழைத்து, இறைவன் பாதையில் போர் செய்து, பெருமானார் (ஸல்) அவர்களின் சுன்னத் என்னும் நடை, உடை, பாவனைகளை முற்றிலும் பின்பற்றி, நல்லவற்றை ஏவி, தீயவற்றைத் தடுத்து: இஸ்லாமிய மார்க்கத்தின் சின்னங்களை நிலைநாட்டத் தயாராவதாக அமீர் முஹம்மது பின் சவூது, இமாம் முஹம்மதுடன் ஓர் ஒப்பந்தத்தை ஏற்படுத்திக் கொண்டார்.

இமாம் முஹம்மதைத் தம் ஊரைவிட்டு வெளியேற்றிய ''சுலைமான் பின் முஅம்மர்'', இமாம் முஹம்மதிற்கு மாபெரும் ஆதரவு கிடைத்திருப்பதை அறிந்தபோது தம் ஊர்ப் பெரியார்களுடன் அவர்களைச் சந்திப்பதற்காக '' தர்யிய்யா '' சென்று அவர்களிடம் மன்னிப்புக் கோரி, இமாம் முஹம்மதவர்களைத் தம் ஊருக்குத் திரும்பி வருமாறு அழைத்தார். ஆனால் அமீர் முஹம்மது பின் சுவூது இதனை அனுமதிக்கவில்லை.

இமாம் முஹம்மதிடம் மக்கள் கூட்டம் கூட்டமாக பல பாகங்களிலிருந்தும் வந்து கல்வி பயின்றனர். நாட்டுப் பொருளாதார நிலை குன்றியிருந்ததால் கூட்டம் கூட்டமாக அறிவு தேடி வருகின்றவர்களுக்குப் போதிய வசதி செய்து கொடுக்க முடியவில்லை. இவர்களில் சிலர் கல்வி அறிவு பெறவேண்டுமென்ற ஆவல் நிரம்பப் பெற்றிருந்ததால், இரவில் கூலி வேலை செய்தும், பகலில் இமாம் முஹம்மதவர்கள் போதனை செய்யும் இடத்தில் கல்வி கற்றும்

வந்தனர். இவ்வாறு வருகின்றவர்களுக்கு, "லாயி லாஹ இல்லல்லாஹ்" என்ற திருக்கலிமாவின் உண்மையான உட்பொருளை விளக்கிக் கொடுப்பதில் இமாம் முஹம்மது பெருமுயற்சி எடுத்தார்கள்.

"லாயிலாஹ" வணக்கத்திற்குரியவன் யாருமில்லை என்ற இல்லாமையையும், "இல்லல்லாஹ்" அல்லாஹ் வைத் தவிர (அவன் மட்டுந்தான் வணக்கத்திற்குத் தகுதியானவன்) என்ற உறுதிப்பாட்டையும் கொண் டதுதான் ஏகத்துவக் கலிமா என்பதையும், அல்லாஹ் ஒருவனையே பயந்து, நேசித்து அவனிடம் ஆதரவுதேட வேண்டுமென்பதையும் விளக்கினார்கள். இவர்களின் இப்போதனைகளால் இருள் சூழ்ந்திருந்த உள்ளங்கள் ஒளிபெற்றன; சிந்தனைகள் தூய்மையாகி, கொள்கை கள் உண்மையானவையாக மாறின. இதனால் மக்கள் இமாம் முஹம்மதை ஆழ்ந்து நேசித்தார்கள்.

நஜ்து மாகாணத்தின் ஒவ்வோர் ஊர்த் தலைவருக் கும் கடிதம் எழுதி, இணை வைப்புகளை விட்டு விட்டு உண்மையின் பக்கம் திரும்புமாறும்; அல்லாஹ் ஒருவ னுக்கே வழிபடுமாறும் வேண்டினார்கள். சிலர் ஏற்றார் கள்; வேறு சிலர் இவர்களை அறிவீனர் எனக்கூறி கேலி செய்தனர். இன்னும் சிலர் இவர்களை சூனியக்காரர் என்றனர்; மற்றவர்கள் இவர்கள்மீது பல தவறுகளை இட்டுக் கட்டினர். ஆனால் இமாம் முஹம்மது இவர் கள் கூறுபவற்றை விட்டும் தூய்மையாகவேஇருந்தார் கள்.

இம்மூட மக்களுக்கு அறிவிருக்குமானால், அறிவீ னர் மிக உறுதியான, தெளிவான ஆதாரங்களைக் காட்ட முடியாதென்பதையும், சூனியக்காரர் நல்

லதை ஏவி, தீயதைத் தடுக்கமாட்டார்,'' என்பதை யும் அறிந்திருப்பார்கள்.

இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஏனெனில் சென்றுபோன நபிமார்களையும், ஸலபுஸ்ஸாலிஹீன்களையும் மக்கள் இவ்வாறே கூறினார்கள்.

இமாம் முஹம்மது இரவு பகலாகத் தம் பிரச்சாரத்திலும், புத்தகங்கள் எழுதுவதிலும், ஈடுபட்டார்கள். அமீர் முஹம்மது பின் சுவூது அவரால் இயன்ற உதவிகளைச் செய்து வந்தார். ஆனால் பிரச்சாரத்தின் எதிரிகள், இதை எதிர்ப்பதற்காக மக்களை ஒன்று திரட்டி பிரச்சாரத்தை ஒழிக்க எல்லா வழிகளையும் கையாண்டார்கள். பிரச்சாரத்தை ஏற்றுக் கொண்டவர்களுக்குப் பல தொல்லைகளும் கொடுத்தார்கள். இதனால் மார்க்கப் போர்கள் பல ஆண்டுகள் நடைபெற்று முஹம்மது பின் சுவூது வெற்றிமேல் வெற்றி கிடைக்கப் பெற்றார். கிராமங்கள் ஒன்றன் பின் ஒன்ருக அவர் தம் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. சிலர் பிரச்சாரத்தின் உண்மைகளை அறிந்து விருப்பத்துடன்அவர்களுடன் சேர்ந்தார்கள்.

ஆனால் முதலில் மக்கள் எவ்வாறு அடம்பிடித்திருந்தார்கள். ஒப்பந்தத்திற்கு எவ்வாறு பலமுறை மாறு செய்தார்கள் என்பன போன்ற விஷயங்களை அறிய விரும்பினால் ''உன்வானும் மஜ்து'' என்ற கிதாபை படித்துப் பாருங்கள். தூய்மையான பிரச்சாரத்தின் பாதையில் ஏற்பட்ட தடைகளை நீக்கி, எதிரிகளால் இட்டுக் கட்டப்படுபவற்றைத் தடுத்து நிறுத்துவதுமே இப்பிரச்சாரத் தலைவர்களின் நோக்கமாக இருந்தது.

"ரியால்" என்ற ஊரை வெற்றி பெற்ற பின்(1) அரசு விசாலமாயிற்று; இருந்து வந்த தொல்லைகள் தீர்ந்தன; எனவே இமாம் முஹம்மது ஆட்சிப் பொறுப்புக்களை அமீர் சுவூதுடைய மகன் அப்துல் அஸீஸிடம் ஒப்படைத்துவிட்டு வணக்கத்திலும், கல்வி போதிப்பதிலும் தம் வாழ்க்கையைக் கழிக்கலானார்கள்.

முஹம்மது பின் சுவூதும், அப்துல் அஸீஸும்— ஏற்படுகின்ற எல்லாப் பிரச்சினைகளுக்கும், மார்க்க அடிப்படையில் இமாம் முஹம்மதிடம் தீர்ப்புக் கோரி அதன்படியே செயல்பட்டு வந்தார்கள்.

---

(1) ஹி 1187ம் ஆண்டு ரியாலை அப்துல் அஸீஸ் பின் சுவூது வெற்றி கண்டார். இவ்வெற்றி "திஹாம் பின் தவாஸ்" என்பான் ரியாலை விட்டு ஓடிய பின் ஏற்பட்டது. இவன் பலமுறை பிரச்சாரத் தலைவர்களோடு வரம்பு மீறி நடந்து, ஒப்பந்தங்களுக்குப் பலமுறை மாறு செய்தான். ஆனால் உண்மை 'முத்தகீன்'களுக்கே இறுதி நல்முடிவுகிடைத்தது. 1179ம் ஆண்டு அமீர் முஹம்மது பின் சுவூது மரணமடைந்த பின், இவர் மகன் அப்துல் அஸீஸ் ஆட்சியில் வந்தார். 1215ம் ஆண்டு அமீர் சுவூது பின் அப்துல்அஸீஸ் தம் தந்தையின் அனுமதியின்படி இராக்குடன் போர்செய்து கர்பலா வாசிகளுக்கு அவர்கள் செய்து வந்த தவறுகளின் காரணத்தால் பல சேதங்கள் விளைவித்தார். அங்கு ஹுஸைன் (ரலி) அவர்கள் கப்ரு மீது கட்டப்பட்டிருந்த குப்பாவை மக்கள் வரம்பு மீறி கண்ணியப்படுத்தி வந்ததால் அதை உடைத்தார். 1218-ஆம் ஆண்டு ரஜப் மாதம் இராக்கிலிருந்து வந்த ஷீஆ வகுப்பைச் சார்ந்த ஒருவன் அமீர் அப்துல் அஸீஸைக் கொலை செய்தான். இவன் ஆலிம் போன்ற வேஷத்தில் மிக வணக்கம் புரியக் கூடியவனாகவும் தன்னைக் காட்டிக் கொண்டிருந்தான். எனவே அமீர் அப்துல் அஸீஸ் இவனை மதித்து இவனிடம் மார்க்க விஷயங்கள் சிலவற்றையும் தெரிந்து கொண்டார். ஆனால் அவன் வஞ்சகமாக அமீர் அப்துல் அஸீஸ் தொழுகையில் இருக்கும்போது அவரை ஈட்டியால் குத்திக் கொலை செய்தான். பின்னர் அமீர் சுவூது பின் அப்துல் அஸீஸ் ஆட்சியில் வந்தார்.

இமாம் முஹம்மதவர்கள் அழகிய நல்ல பண்பாட்டில் வாழ்ந்து இறுதியாக ஹிஜ்ரி 1206-ம் ஆண்டு இறையளவில் சேர்ந்தார்கள். அல்லாஹ் அவர்களுக்கு தனது விசாலமான சுவர்க்கத்தைக் கொடுத்தருள்வானாக!

## இமாம் முஹம்மது (ரஹ்)வின் பண்பு

இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள் தலை சிறந்த அறிஞர்களில் ஒருவராகவும், பித்அத் என்னும் புதுமைகளை ஒழித்து, தப்ஸீர், ஹதீஸ், பிக்ஹ் இலக்கண இலக்கியம் போன்ற துறைகளில் மிகத் தேர்ச்சி பெற்றவர்களாகவும், இஸ்லாமிய அடிப்படைக் கொள்கைகளையும், அதன் பிரிவுகளையும் நன்கு அறிந்து ஆராயக் கூடியவர்களாகவும் இருந்தார்கள். ஏற்படுகின்ற பிரச்சினைகளை இலேசாகத் தீர்த்து வைப்பதில் திறமை பெற்றிருந்தார்கள். தம் பிரச்சாரத்திற்குத் தேவையான உறுதியான ஆதாரங்களை எளிய முறையில் விளக்கும் சக்தி பெற்றிருந்தார்கள். அகமும், புறமும் தூய்மையானவர்களாகவும், மக்களை நேசிக்கின்றவர்களாகவுமிருந்தார்கள்.

தம் பிரச்சாரங்கள், உபதேசங்கள் எல்லாம் அல்லாஹ் ஒருவனின் அருளைப் பெறவேண்டுமென்பதற்காகவே செய்தார்கள், எவ்வேளையும் அல்லாஹ்வை நினைப்பதிலேயே இருப்பார்கள். வீணான பேச்சுகளை அறவே பேசுவதில்லை. மக்களுக்கு உதவுவதில் முதல்வராக இருந்தார்கள். தம் விருந்தாளிகளின் கடன்களைத் தாமே தீர்த்து வைப்பார்கள் பார்ப்பதற்கு கம்பீரமான தோற்றமுடையவர்களாகவும், செல்வந்தர்கள், ஏழைகள் எல்லோருடனும் பணிவாக நடந்து கொள்பவர்களாகவுமிருந்தார்கள். கல்வி கற்கும்

மாணவர்களை அதிகம் நேசித்துத் தம் பொருளை அவர்களுக்கு செலவிட்டு, அவர்களுக்கு நேர்வழி காட்டியும் வந்தார்கள். நுட்பமான அறிவுடையவர்களாகவும், எல்லாக் கலைகளிலும், குறிப்பாக தப்ஸீர், ஹதீஸில் மிக தேர்ச்சி பெற்றிருந்தார்கள், மிகப் பொறுமையானவர்களாகவும், அதே நேரத்தில் இஸ்லாத்தின் கண்ணியத்தைப் பங்கப்படுத்த நினைக்கின்றவர்களோடு நாவாலும், வாளாலும் போர் தொடுப்பவர்களாகவும் இருந்தார்கள். உலமாக்களை மதித்து, அவர்களை கண்ணியப்படுத்தியும் வந்தார்கள். இஸ்லாத்திற்கு முரணானவற்றை தம் முழு ஆற்றலால் எதிர்த்து, அவற்றைச் செய்கின்றவர்களை மென்மையாக விலக்குவதில் சிறந்து விளங்கினார்கள். இச்சிறப்புப் பண்புகளை இமாம் முஹம்மது பெற்றிருந்ததில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஏனெனில் இவர்களின் மூதாதைகளும் இதே பண்புகளிலேயே வாழ்ந்தார்கள்.

இவர்களின் பாட்டனார் சுலைமான் பின் அலி என்பவர் அவர் காலத்தில் நஜ்து மாகாணத்தின் தலைசிறந்த அறிஞராக திகழ்ந்தார். பலவிதமான கலைகளில் வல்லுனராகவுமிருந்தார். நஜ்தின் பல பாகங்களிலுமுள்ள மக்கள் கல்வி கற்பதற்காக இவரிடமே செல்வார்கள்.

"இப்னு பிஷ்ர்" என்ற சரித்திராசிரியர் கூறுகின்றார்: "சுலைமான் பல புத்தகங்களை எழுதியுள்ளார். மாணவர்களுக்கு போதித்து, மார்க்கத் தீர்ப்பு வழங்கக் கூடியவராகவுமிருந்தார், மாணவர்கள் இவரிடமிருந்து எண்ணற்ற பயன்கள் பெற்றனர்."

இமாம் முஹம்மதின் தந்தை அப்துல் வஹ்ஹாப் மாபெரும் மேதையாகவும், மிக பயபக்தியுடையவ

ராகவுமிருந்தார். இவர் இஸ்லாமிய ஷரீஅத்துச் சட்டங்களையும், அவற்றுக்குத் தேவையான எல்லா அறிவுகளையும் பெற்றிருந்தார். நஜ்து மாகாணத்தில் உயைனு, ஹரீமலா போன்ற ஊர்களில் நீதிபதியாகப் பணியாற்றினுர். பல கிதாபுகளையும் கோர்வை செய்துள்ளார், அல்லாஹ் எல்லோருக்கும் நல்லருள் புரிவாஞக!

## இமாம் முஹம்மது (ரஹ்) எழுதிய புத்தகங்களில் சில:

1. கஷ்புஷ் ஷீபுஹாத், 2. முக்தஸருல் இன்ஸாப், 3. நஸீஹத்துல் முஸ்லிமீன், 4. கிதாபுல் கபாயிர் 5. ஆதாபுல் மஷ்யி இலஸ்ஸலாத், 6. உஸூலுர் ஈமான், 7. முக்தஸர் ஸாதுல் மஆது, 8. முக்தஸர் ஸஹீஹுல் புகாரி, 9. மஸாயிலுல் ஜாஹிலிய்யா, 10. இஸ்தின்பாதுன்மினல் குர்ஆன் 11. அஹாதீதுல்ஃபித்ன்.

மேலும் பல புத்தகங்கள் கோர்வை செய்துள்ளார்கள். அவற்றில் அதிகமானவை தவ்ஹீது சம்பந்தப்பட்டவையாகும்.

## இமாம் முஹம்மதிடம் கல்வி பயின்றவர்கள்

"உன்வானுல் மஜ்து" என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது; இமாம் முஹம்மதிடமிருந்து தலைசிறந்த பெரும் அறிஞர்கள் பலர் கல்வி பயின்றனர், இவர்களில் இமாம் முஹம்மதின் மக்களான ஹஸன், அப்துல்லாஹ், அலீ இப்ருஹீம் என்ற நால்வரும் தங்களின் தந்தையிடமிருந்து அதிக அறிவுகளைப் பெற்று, நீதிபதிகளாகத் திகழ்ந்தார்கள். இவர்கள் ஒவ்வொருவருக்கும் தம் வீட்டடியிலேயே மதரஸாக்கள்

இருந்தன. இதில் "தரீயிய்யா" என்ற ஊரைச் சார்ந்த அதிகமானவர்கள் கல்வி பயின்று வந்தனர். இவர்கள் குடும்பத்தைச் சார்ந்த பெரும் அறிஞர்கள் பலர் இன்றுவரை இருந்து வருகின்றனர், இறையருளால் யுக முடிவு நாள்வரை இருந்து வருவார்கள்.

இன்று சவூதி அரேபியாவில் மார்க்க சம்பந்தப் பட்ட பதவிகளான மார்க்கத் தீர்ப்பு வழங்குதல்! மார்க்க போதனைகள்; நல்லதை ஏவி, தீயதை தடுக்கும் பணிகள்; பள்ளிக்கூடம், கல்லூரிகளின் தலைமை பொறுப்புகள்; பிரச்சினைகளுக்கு தீர்வு காணுதல்; மார்க்க எதிர்ப்புகளை ஆதாரங்கள் காட்டி விலக்குதல்; பெருமானார் (ஸல்) அவர்கள் கொண்டுவந்த ஷரீஅத்துச் சட்டங்களைப் பேணிப் பாதுகாத்தல் போன்ற பணிகளில் இமாம் முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் அவர்களின் சந்ததியினரே இருந்து வருகின்றார்கள்.

அல்லாஹ் அவர்களுக்கு நற்கூலியைக் கொடுத்து, நமக்கும், அவர்களுக்கும் அவன் விரும்பும்படி வாழ்ந்திட தவ்பீக் செய்தருள்வானாக!

எத்தனையோ பேர் இமாம் முஹம்மதிடம் கல்வி கற்று, வெளியாகி நீதிபதிகளாகவும், பதீவாக்கள் வழங்கக் கூடியவர்களாகவும் ஆகியுள்ளார்கள்.

அவர்களில் சிலரின் பெயரை இங்கு குறிப்பிடு கின்றோம்:

1. ஷெய்கு ஹம்துபின் நாஸிர்பின் உதுமான் பின் முஅம்மர், 2. ஷெய்கு அப்துல் அஸீஸ் பின் அப்துல்லாஹ் ஹுஸைன் அந்நாஸிரீ" 3. ஷெய்கு ஸயீதுபின் ஹிஜ்ஜி, 4. ஷெய்கு அப்துர் ரஹ்மான்பின்

நாமி, 5. ஷெய்கு அஹ்மதுபின் ராஷிது அல்அரீனி, 6. ஷெய்கு அப்துல் அஸீஸ் அபூ ஹுஸைன், 7. ஷெய்கு ஹஸன் பின் ஈதான் 8. ஷெய்கு அப்துல் அஸீஸ் பின் சுவைலிம் என்பவர்கள் குறிப்பிடத் தக்கவர்களாவார்கள்.

இமாம் முஹம்மதின் மகன் "ஹஸன்" என்பவர்களின் சந்ததியில் பிரபல்யமானவர்களான "ஷெய்கு இப்ருஹீம் பின் அப்துல் லத்தீப் பின் அப்துர் ரஹ்மான் பின் ஹஸன்" என்பவர்கள் இன்று சவூதி அரேபியாவின் நீதிபதியாகவும்; எல்லா மார்க்க நிறுவனங்களின் தலைவராகவும் இருந்து வருகின்ருர்கள். இவர்களின் சகோதரர் அப்துல் லத்தீப் என்பவர்கள் மார்க்கக் கல்விக் கூடங்கள், கல்லூரிகளின் தலைவராகப் பணியாற்றுகின்ருர்கள். ஷெய்கு அப்துல் மலிக் என்பவர்கள் மக்கா மார்க்க உபதேசக் குழுவின் தலைவராக இருந்து வருகிருர்கள். மேலும் ஷெய்கு ஹுஸைன்பின் முஹம்மது, ஷெய்கு உமர் பின் ஹஸன் (கிழக்கு மாநில மார்க்கப் போதகக் குழுவின் தலைவர்) முதலியவர்கள் குறிப்பிடத்தக்கவராவார்கள்.

## இமாம் முஹம்மதின் கொள்கை

பெருமானுர் முஹம்மது (ஸல்) அவர்களும், உத்தம சஹாபாக்களும், தாபியீன்களும், நாற்பெரும் இமாம்களான இமாம் மாலிக், இமாம் அபூ ஹனீபா, இமாம் ஷாபியீ, இமாம் அஹ்மது பின் ஹன்பல், சுப்யானுத்தவுரி, இப்னு உயைனு, இப்னுல் முபாரக், ஹதீஸ் கிரந்தங்களை தொகுத்த இமாம்களான, புகாரீ, முஸ்லிம், அபுதாவூது, நஸயீ, திர்மதி, இப்னு மாஜா, இவர்களைப் பின் தொடர்ந்த பிக்ஹு

கலே மேதைகளான அஷ்அரி, இப்னு குஸைமா, இப்னு தைமிய்யா, இப்னுல் கையிம், அத்ஹபி போன்ற ஸலபுஸ் ஸாலிஹீன்கள் எந்தக் கொள்கையில் இருந் தார்களோ அதே கொள்கையே இமாம் முஹம்மதின் கொள்கையாகும்.

வணக்கத்துக்குரிய இறைவன் ஒருவன்; அவன் எவரிடத்தும் தேவையற்றவன். அவனுக்கு இணை துணை கிடையாது. அவன் நிகரற்றவன், அவனுக்கு எந்த மந்திரியோ, ஆலோசகரோ கிடையாது. அவனுக்கு மனைவி மக்கள் கிடையாது. நடந்தவை, நடப்பவை, நடக்கப் போவவை எல்லாவற்றையும் அறிந்தவன்; எல்லாவற்றின்மீதும் சக்தி பெற்றவன். யாரும் அவனை மிகைக்க முடியாது. அவன் தான் நாடியதை நடத்துபவன், என்று நம்பினார்கள். மேலும் திருக் குர்ஆனிலும், ஹதீஸிலும் வந்துள்ள அல்லாஹ்வின் அழகிய திருநாமங்களையும், அவனுடைய உயர்ந்த பண்பு (சிபாத்)களான அறிவு

(இல்மு) العلم கேள்வி (அஸ்ஸம்வு), السمع

பார்வை, البصر சக்தி القدرة நாட்டம்,

الإرادة பேச்சு الكلام அர்ஷில் தரிபடுதல்

الإستواء போன்ற பண்புகளையும் மேலும் ஒவ்வோர்

இரவும் உலகத்தோடு அடுத்துள்ள வானத்திற்கு இறங்குதல், மற்றும் இறைவனுக்குள்ள எல்லாத்

தன்மைகளையும், பண்புகளையும் குர்ஆனிலும், ஹதீஸி லும் வந்தது போன்று கூட்டவோ குறைக்கவோ செய்யாமல் அப்பண்புகளுக்கு வடிவமும் உவமையும் கொடாமல் அப்படியே நம்பினூர்கள்.

## தவ்ஹீதுல் இபாதத் வர் ருபூபிய்யத்

அல்லாஹ் உயிரோடிருப்பவன், சக்தியுடையவன், எல்லாவற்றையும் படைப்பவன், உணவளிப்பவன், உயிர் கொடுப்பவன், மரணிக்கச் செய்பவன் எனவும் நம்பினூர்கள். அல்லாஹ் ஒருவனே வணக்கத்திற்குத் தகுதியானவன், இந்த வணக்கத்திற்கு இறைவனேடு நெருங்கியிருக்கும் மலக்கோ, ரசூல்மார்களோ நபிமார் களோ எவரும் தகுதியற்றவர்கள்.

படைப்பினங்கள் எவ்வளவு பெரிய அந்தஸ்தை எட்டியிருப்பினும், அவற்றுக்கு வணக்கம் செலுத்து வதைவிட்டும் இமாம் முஹம்மது விலகிக் கொண் டார்கள், இந்தத் தத்துவத்திற்காகவே அல்லாஹ் மனித, ஜின் வர்க்கங்களைப் படைத்து, ரசூல்மார்களை அனுப்பி, கிரந்தங்களையும் இறக்கினுன்(1)

கற்கள், மரங்கள், நல்லவர்களை வணங்குவதைவிட்டும் மேலும், அவற்றை வணங்குகின்றவர்களைவிட்டும் ஒதுங்கி, அவ்வாறு வணங்குவது இறைவனுக்கு இணை

---

(1) (ஜின்னையும் மனிதனையும் என்னை வணங்குவதற் கர்கவே தவிர வேறு எதற்காகவும் படைக்கவில்லை) மனிதன் அல்லாஹ்வை வணங்க வேண்டுமென்ற ஒரே நோக் கத்திற்காகவே படைக்கப் பட்டுள்ளான் என்பதை குர்ஆன் மிகத் தெளிவாக விளக்கிக் காட்டியுள்ளது.

(லவ்லாக லமா கலக்துல் அப்லாக) ''நீர் இல்லையேல் அண்ட சராசரமில்லை'' என்று கூறப்படும் ஹதீஸ் ஆதார மற்றதும், இட்டுக் கட்டப்பட்டதுமாகும்

வைப்பதும், அவனை மறுப்பதும் வழிகேடுமாகும் எனக் கூறி அறிவிற்குப் பொருந்துகின்ற பல ஆதாரங்களை எடுத்து விளக்கினார்கள்.

ரசூல்மார்கள் அவர்கள் காலத்து மக்களுக்குக் கூறியதை அல்லாஹ் தனது திருமறையில் கிழ்கண்ட வாறு குறிப்பிடுகின்றான்,

...قَالَ يٰقَوْمِ اعْبُدُوا اللّٰهَ مَا لَكُمْ مِّنْ اِلٰهٍ غَيْرُهٗ ...

(என்னுடைய மக்களே அல்லாஹ் ஒருவனையே நீங்கள் வணங்குங்கள், அவனைத் தவிர வேறு நாயன் உங்களுக்கு இல்லை) (11:84)

يٰۤاَيُّهَا النَّاسُ اعْبُدُوْا رَبَّكُمُ الَّذِىْ خَلَقَكُمْ وَالَّذِيْنَ مِنْ قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُوْنَ

(மனிதர்களே நீங்கள், உங்களையும், உங்களுக்கு முன்னிருந்தோர்களையும் படைத்த உங்கள் இறைவனையே வணங்குங்கள்) (2—21)

اِنْ تَدْعُوْهُمْ لَا يَسْمَعُوْا دُعَآءَكُمْ ۚ وَلَوْ سَمِعُوْا مَا اسْتَجَابُوْا لَكُمْ ؕ وَيَوْمَ الْقِيٰمَةِ يَكْفُرُوْنَ بِشِرْكِكُمْ ؕ وَلَا يُنَبِّئُكَ مِثْلُ خَبِيْرٍ

(அவர்களை நீங்கள் அழைத்தபோதிலும் உங்களுடைய அழைப்பை அவர்கள் செவியுற மாட்டார்கள்; அவர்கள் செவியுற்ற போதிலும் உங்களுக்கு பதில

ளிக்க மாட்டார்கள்; மறுமை நாளிலோ (அவர்களை) நீங்கள் இணைவைத்ததையும் அவர்கள் நிராகரித்து விடுவார்கள். யாவையும் அறிந்த இறைவன் அறிவிப்பதுபோல் அவர்கள்) எதுவுமே உங்களுக்கு அறிவிக்க மாட்டார்கள்.) (35:14)

## ஈமானின் மற்றக் கடமைகள்[1].

இறைவனால் அனுப்பப்பட்ட எல்லா ரசூல்மார்கள், நபிமார்களையும் அவர்களுக்கிடையில் வேறுபடுத்தாமல் நம்பினார்கள். பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் எல்லா ரசூல்மார்கள், நபிமார்களையும்விட சிறந்தவர்கள். பகிரங்கமான அத்தாட்சிகளையும் வெளிப்படையான முஃஜிசாக்களையும் இறைவன் அவர்களுக்குக் கொடுத்து ரசூலாக அனுப்பினான். அல்லாஹ் அவர்களை சங்கைக்குரிய வம்சத்தில் பிறக்கச் செய்து, மிக அழகிய நற்குணங்களையும் கொடுத்தான்; யார் இவர்களைப் பின்பற்றுகிறார்களோ அவர்கள் வெற்றி பெற்றவர்களாகி விட்டார்கள், இவர்களுக்கு மாற்றம் செய்பவர்கள் நஷ்டவாளிகளான மூதேவிகளாக ஆகிவிட்டார்கள் எனவும் இமாம் முஹம்மதவர்கள் நம்பினார்கள்.

மறுமை நாளையும், மரணத்திற்குப்பின் மனிதர்கள் எழுப்பப்படுவார்கள், அவர்களிடம் அல்லாஹ் கேள்வி கணக்குக் கேட்பான் என்றும் அங்கு நன்மை, தீமை எடைபோடுகின்ற தராசும் ஸிராதுல் முஸ்தகீம் என்னும் பாலமும், சுவர்க்கமும் நரகமும் இருக்கின்றவெனவும் நம்பினார்கள்.

---

(1) ரசூல்மார்கள், நபிமார்கள், மலாயிகத்துகள், வேதங்கள், மறுமைநாள் ஆகியவை.

## அல்கத்று (விதி)

நன்மை தீமைகள் இறைவனால் விதிக்கப்பட்டுள்ளவை என நம்பி விதியை மறுக்கின்றவர்களை விட்டும்; "ஈமான் கொண்டவன் புரிகின்ற தவறுகளுக்கு தண்டனையில்லை, காபிர்கள் செய்கின்ற நன்மைகளுக்கு பயனில்லை" என்று கூறும்முர்ஜிய்யாக்களைவிட்டும் இமாம் முஹம்மது ஒதுங்கிக் கொண்டார்கள். எல்லா சஹாபாக்களையும், பெருமானார் (ஸல்) அவர்களின் தூய்மையான குடும்பத்தினர்களையும் பின்பற்றினார்கள். அவர்கள் மத்தியில் நடந்த சண்டைகளைப் பற்றி எந்தத் தீர்ப்பும் வழங்கவில்லை. சஹாபாக்களில் சிறந்தவர்கள் அபூபக்ரு (ரலி), அவர்களுக்குப் பின் உமர் (ரலி), அவர்களுக்குப்பின் உதுமான் (ரலி), பின்னர் அலீ (ரலி) எனவும் நம்பினார்கள்.

## உலமாக்களைப் பற்றி இமாம் முஹம்மதின் கொள்கை

தப்ஸீர், ஹதீஸ், பிக்ஹு திரட்டியவர்கள், வணக்க வழிபாடுகளில் இருந்துவந்த மேதைகள் எல்லோரும் கூறுவதை மதித்துப் பின்பற்றினார்கள். இவர்களில் குறிப்பாக பெரும் இமாம்களான இமாம் மாலிக்; இமாம் அபூஹனீபா, இமாம் ஷாபியீ, இமாம் அஹ்மதுப்னு ஹன்பல் [ரலியல்லாஹு அன்ஹும்] ஆகிய நால்வரும் சிறப்பிற்குரியவர்களுமாவார்கள். கூறிமுடித்து விட முடியாத அளவிற்குச் சிறப்பின் சிகரமாக இருந்தார்கள். அவர்கள் சிறப்பிற்கும் பெருமைக்குமுரியவர்கள் என நம்பி அவர்களைப் பின்பற்றினார்கள். ஒரு முஜ்தஹிது கூறுகின்ற இஸ்லாமிய சட்டங்களுக்கு குர்ஆன், ஹதீஸிலிருந்து தகுந்த ஆதாரம் கிடைத்தபின்பே ஏற்றுக்கொள்வார்கள். முஜ்தஹிதுகள் கூறுவதையெல்லாம் ஆராயாமல் பின்பற்றுவதில்லை. இது நான்கு பெரும் இமாம்களும் மற்ற எல்லா மேதைகளும் ஏகோபித்துள்ள முடி

வாகும், என்பதை "இப்னு அப்துல்பர்" (ரஹ்) என்பவர்கள் குறிப்பிடுகிருர்கள்.

## இமாம் முஹம்மது எழுதிய கடிதங்களில் வந்த அவர்களின் கொள்கை(1)

"களீம்"(2) என்ற ஊர்வாசிகளுக்கு எழுதிய கடிதத்தில் வந்த சிலதை இங்கு குறிபபிடுகின்றேன்.

அல்லாஹ்வையும், என்னுடன் அடுத்துள்ள மலாயிகத்துகளேயும், உங்களேயும் சாட்சி செய்து கூறுகின்றேன்.

நிச்சயமாக நான் சுன்னத் ஜமாஅத்தார்கள் எவ்வாறு அல்லாஹ்வையும், மலாயிகத்துகளேயும், வேதங்களேயும், மறுமை நாளேயும், நன்மை தீமைகள் இறைவனுல் விதிக்கப்பட்டுள்ளது என்பதையும் ஈமான் கொண்டார்களோ அவ்வாறே நானும் ஈமான் கொண்டு நம்புகின்றேன். குர்ஆனிலும், ஹதீஸிலும் வந்துள்ள அல்லாஹ்வின் சிபத்களே (பண்புகளே) எவ்வித மாற்றமுமின்றி நம்புவது, அல்லாஹ்வை நம்புவதில் ஒரு பகுதியாகும்.

...لَيْسَ كَمِثْلِهِ شَيْءٌ ۖ وَهُوَ السَّمِيعُ الْبَصِيرُ

---

(1) அல்லாஹ்வின் திருநாமங்கள், அவன் பண்புகளில் ஸலபுஸ்ஸாலிஹீன்கள் எந்தக் கொள்கையிலிருந்தார்களோ அதுவே இமாம முஹம்மதின் கொள்கையாகும், இவர்களின் எதிரிகள் இவர்களேப் பற்றிப் பரத்துபவைகள் உண்மைக்குப் புறம்பானவையாகும் என்பதை நீங்கள் அறிய வேண்டுமென்பதற்காகவே கடிதத்தில் வந்தவற்றை இங்கு குறிப்பிடுகின்றேன்.

(2) ரியாலே அடுத்துள்ள ஒரு நகரத்தின் பெயர்.

[அல்லாஹ்விற்கு ஒப்பானது ஒன்றுமில்லை, அவன் (யாவையும்) செவியுறுவோனாகவும், உற்றுநோக்குபவனாகவும் இருக்கின்றான். (42:11)]
எனவும் நம்புகின்றேன்,

அல்லாஹ் தன்னை வர்ணித்துக்கூறிய (சிபத்) பண்புகளில் எதையும் நான் போக்கி மறைக்கவில்லை. அவற்றை மாற்றவுமில்லை. அவன் வசனங்களிலும், திருநாமங்களிலும் வரம்பு மீறவுமில்லை. அல்லாஹ்வின் பண்புகள் எப்படி என்று அவற்றுக்கு வடிவமும், உருவமும், உவமையும் காட்டவில்லை, அல்லாஹ்வின் பண்புகளை படைப்பினங்களின் பண்பிற்கு ஒப்பிடவுமில்லை. ஏனெனில், அல்லாஹ்விற்கு நிகர் எதுவுமில்லை. அவன் தன்னைப் பற்றியும் அவன் அல்லாதவை பற்றியும். நன்கறிந்தவன். அவன் உண்மையானவன் அழகான பேச்சுடையவன். அவனுக்கு உருவமும், உதாரணமும் காட்டுகின்றவர்களின் உவமைகளை விட்டும் தூய்மையானவன், அவன் பண்பு (சிபாத்)களைமாற்றி மறைக்கின்றவர்கள் செய்கின்ற கைவரிசைகளை விட்டும் தூய்மையானவன்.

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான்.

سُبْحٰنَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ ـ وَسَلٰمٌ
عَلَى الْمُرْسَلِيْنَ ـ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ

[அவர்களுடைய (தவறான) வர்ணிப்புக்களை விட்டும் கண்ணியமிக்க உம் இறைவன் மிகத் தூய்மையானவன், (அவனால்) அனுப்பப் பெற்ற தூதர்கள் (அனைவர்) மீதும் (அவனுடைய) சாந்தியும் சமாதான

மும் உண்டாவதாக; புகழனைத்தும் உலகங்களைப் படைத்துப் போஷித்துப் பரிபக்குவப்படுத்தும் அல்லாஹ்வுக்கு உரித்தானவை. (37 : 180-2)]

அல்லாஹ்வின் திருநாமங்களிலும், பண்புகளிலும் கைவரிசை காட்டி பலபிரிவுகளாக பிரிந்துசென்ற கத்ரியிய்யா, ஜபரியிய்யா, முர்ஜியிய்யா, வயீதிய்யா, ஹரூரிய்யா, முஃஸிலா, ஜஹமிய்யா, ரவாபிலா காரிஜிய்யா போன்றவர்கள் கூட்டியும் குறைத்தும் கூறியுள்ளனர் [1]

---

(1) கத்ரிய்யா : இவர்களுக்கு முஃதஸிலா என்றும்கூறப்படும். இவர்கள் கத்ரு என்னும் விதியை மறுக்கின்றவர்கள் மனிதனிடமிருந்து நிகழ்கின்ற எல்லாச் செயல்களும் அவன் இஷ்டப்படியே நடக்கின்றன எனக் கூறுபவர்கள்.

ஜபரிய்யா : இவர்கள் நன்மை தீமை எல்லாம் விதியின் படியே நடக்கின்றன மனிதன் விருப்பமிழந்தவன் என நம்புகின்றவர்கள்,

ஹரூரிய்யா : இவர்கள் அலி (ரலி) அவர்களை எதிர்த்தவர்கள்.

ஜஹமிய்யா : இவர்கள் அல்லாஹ்வின் திருநாமங்கள், பண்புகளை மறுக்கின்றவர்கள்.

ரவாபிலா : அலி (ரலி) அவர்களே பெருமானார் (ஸல்) அவர்களுக்குப் பின் கிலாபத்திற்குத் தகுதியானவர்கள், பெருமானார் (ஸல்) அவர்கள் இவர்களுக்கு வசிய்யத்து செய்து சென்றுள்ளார்கள் என்று கூறி அதிகமான சஹாபாக்களை காபிர்கள் எனக் கூறுபவர்கள், நடுத்தரவாதிகள் என்பதன் பொருள் சுன்னத் ஜமாஅத்தார்கள் மேல் கூறப்பட்ட பிரிவினர்கள் கூறுவது போன்று கூறுவதில்லை, மாறாக நல்லதையும், கெட்டதையும் பிரித்தறியும் ஆற்றலுள்ளவனாக மனிதன் இருக்கின்றான் என்று கூறுகின்றார்கள். விதியை மறுப்பதில்லை; ஈமான் கொண்டவன் செய்யும் தவறுக்காக தண்டிக்கப்படுவதில்லையென்றோ, காரிஜிய்யாக்கள் கூறுவது போன்று பெரும்பாவம் புரிந்தவன் காபிராக மாறி விட்டான் என்றோ ஈமானிற்கும் குப்ருக்கும் இடையிலிருக்கின்றான் என்று முஃதஸிலாக்கள் கூறுவது போன்றோ கூறுவதில்லை; ஆனால் நல்லவர்களுக்கு சுவர்க்கம் கிடைக்க ஆதரவு வைக்கின்றார்கள்; கெட்டவர்கள்மீது அஞ்சுகின்றார்கள்.

இவர்களில் வெற்றி பெற்றவர்கள் நடுத்தர வாதிகளான சுன்னத்ஜமா அத்தார்களே யாவார்கள்,

குர்ஆன் அல்லாஹ்வின் பரிசுத்த கலாமாகும். அது அல்லாஹ்விடமிருந்து இறக்கப்பட்டதாகும். படைக்கப்படாதது ஆகும். அல்லாஹ்விடமிருந்து வந்தது, அவனிடமே மீளும், அல்லாஹ் அதை உண்மையாகவே மொழிந்தான், அதை ஜிப்ரீல் (அலை) அவர்கள் வழியாக வஹீமூலம் பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள்மீது இறக்கி வைத்தான் என்றும் நம்புகின்றேன்.

அல்லாஹ் தான் நாடியதைச் செய்து முடிப்பவன். அவன் நாட்டமின்றி எதுவும் நடப்பதில்லை. அவன் விருப்பத்திற்கப்பால் எதுவுமில்லை. அவனால் விதிக்கப்பட்டுள்ள 'கத்ரு'க்கப்பால் உலகில் எதுவுமில்லை. அவன் பரிபாலனத்தை மிஞ்சி எதுவும் நடப்பதில்லை; அல்லாஹ்வினால் வரையறுக்கப்பட்ட விதியை யாராலும் வெல்ல முடியாது. லவ்ஹுல் மஹ்ஃபூலில் எழுதப்பட்டதை யாராலும் மீற முடியாது, எனவும் நம்புகின்றேன்.

---

பாவம்புரிந்து பாவமன்னிப்புக்கோராமல் மரணிப்பவனின் பொறுப்பு அல்லாஹ்வைச் சார்ந்ததாகும்.

எல்லா சஹாபாக்களும் சிறப்பிற்குரியவர்கள் என்று சுன்னத் ஜமாஅத்தார்கள் கூறுகின்றார்கள். ராபிலாக்களைப் போன்று பெருமானார் (ஸல்) அவர்கள் குடும்பத்தினர்கள் மீது மட்டும் வரம்புமீறிய புகழுடன் நடந்து கொள்வதில்லை. உதுமான், அலி, தல்ஹா, ஸுபைர், முஆவியா, அம்ருப்னுல் ஆஸ் (ரலியல்லாஹ் அன்ஹும) இவர்களை காபிர்கள் எனக் காரிஜிய்யாக்கள் கூறினார்கள்.

எனவே இவர்கள் போன்ற கூட்டத்தார்களில் சுன்னத் ஜமாஅத்தார்கள் நேர்மையான நடுத்தரவாதிகளாவார்கள்,

மரணத்திற்குப் பின் ஏற்படுகின்ற விஷயங்களைப் பற்றி பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் அறிவித்த எல்லா விஷயங்களையும் அப்படியே நம்புகின்றேன். கப்ரிலுள்ள வேதனைகளையும், அதிலுள்ள நிஃமத்துக்களையும், கப்ரில் உடலை வைத்தபின் அதில் உயிர் கொடுக்கப்படுமென்றும், மறுமை நாளில் எல்லோரும் கப்ரிலிருந்து எழுந்து, காலணியற்றவர்களாகவும், நிர்வாணமானவர்களாகவும், கத்னு செய்யப்படாதவர்களாகவும், தனித்தவர்களாகவும் வருவார்கள். சூரியன் அவர்களை நெருங்கிவரும், அமல்களை எடைபோடுகின்ற தராசு நிறுத்தப்படும் என்றும் நம்புகின்றேன்.

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான்.

فَمَنْ ثَقُلَتْ مَوَازِيْنُهٗ فَاُولٰٓئِكَ هُمُ الْمُفْلِحُوْنَ وَمَنْ
خَفَّتْ مَوَازِيْنُهٗ فَاُولٰٓئِكَ الَّذِيْنَ خَسِرُوْٓا اَنْفُسَهُمْ
فِيْ جَهَنَّمَ خٰلِدُوْنَ -

[எவர்களுடைய (நன்மையின்) எடை கனக்கின்றதோ அவர்கள்தாம் சித்தியடைந்தவர்கள்; எவர்களுடைய (நன்மையின்) எடை குறைகின்றதோ அவர்கள் தங்களுக்குத் தாங்களே நஷ்டத்தையுண்டு பண்ணிக் கொண்டு எந்நாளுமே நரகத்தில் தங்கி விடுவார்கள். (23:103)]

நன்மை தீமைகள் எழுதப்பட்ட ஏடுகள் வெளிப்படுத்தப்படும். சிலர் தம் வலக்கரத்தில் அவர்களுடைய ஏடுகள் கொடுக்கப்படும், சிலரது இடக்கரத்தில் கொடுக்கப்படும் என்றும் நம்புகின்றேன்.

மறுமையில் மஹ்ஷர் மைதானத்தில் பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களின் ஹவ்லு இருக்கின்றது. அதன் தண்ணீர் பாலைவிட மிக வெள்ளை; தேனைவிட மிக ருசியானது; வான நட்சத்திரங்கள் எண்ணிக்கையளவிற்கு அதன் பாத்திரங்கள் இருக்கின்றன; யார் அந்த ஹவ்லிலிருந்து குடிக்கின்றார்களோ அவர்கள் அறவே தாகிப்பதில்லை என்றும் நம்புகின்றேன்.

நரகத்தின்மேல் சிராத் என்னும் பாலம் இருக்கின்றது. மனிதர்கள் தங்கள் அமல்களுக்கேற்றவாறு அதில் நடந்து செல்வார்கள் என்றும் நம்புகின்றேன்.

பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு ஷபாஅத்து இருக்கின்றது. அவர்கள் முதல்முதலாக ஷபாஅத்துச் செய்பவர்கள் முதன் முதலாக ஷபாஅத்துச் செய்யப்படுபவர்கள். அவர்கள் ஷபாஅத்தை மறுப்பவன் வழிகெட்டவனாவான், பித்அத்கள் புரிந்தவர்களைச் சார்ந்தவனாவான் என்றும் நம்புகின்றேன்.

ஆனால் பெருமானார் (ஸல்) அவர்களின் ஷபாஅத்து இறைவன் விரும்பி அனுமதியளிக்கின்றவர்களுக்கே கிடைக்கும்.

அல்லாஹ் திருமறையில் கூறுகின்றான்.

...وَلَا يَشْفَعُونَ إِلَّا لِمَنِ ارْتَضَىٰ

(அல்லாஹ் விரும்பியவர்களுக்கன்றி [மற்றெவருக்கும் இவர்கள் சிபாரிசு செய்யமாட்டார்கள்.) (21:28)

...مَنْ ذَا الَّذِي يَشْفَعُ عِنْدَهُ إِلَّا بِإِذْنِهِ -

அல்லாஹ்வின் அனுமதியின்றி அவனிடத்தில் (எவருக்காகிலும்) யார்தான் பரிந்து பேசக்கூடும்? (2:255)

وَكَمْ مِّنْ مَّلَكٍ فِى السَّمٰوٰتِ لَا تُغْنِىْ شَفَاعَتُهُمْ شَيْـًٔا اِلَّا مِنْۢ بَعْدِ اَنْ يَّاْذَنَ اللّٰهُ لِمَنْ يَّشَآءُ وَيَرْضٰى

(வானங்களில் எத்தனையோ மலக்குகள் இருக்கின்றனர். (எவருக்காகவும்) அவர்கள் பரிந்து பேசுவது யாதொரு பயனுமளிக்காது. ஆயினும் அல்லாஹ் விரும்பி எவரைப் பற்றித் திருப்தியடைந்து அவன் அனுமதி கொடுக்கின்றானோ அவரைத் தவிர. (அத்தகையவர் பரிந்து பேசுவது பயனளிக்கும்) (53-26)

அதாவது அல்லாஹ், தான் விரும்பி, திருப்தியடைந்து யாருக்கு அனுமதியளிக்கின்றானோ அவர்களைத் தவிர மற்றவர்கள் எவருக்கும்—மலக்குகளே சிபாரிசு செய்வார்களானாலும்—அவர்களுடைய சிபாரிசுகளை அல்லாஹ் ஏற்றுக் கொள்வதில்லை.

அல்லாஹ் உண்மையான ஏகத்துவக் கொள்கையுடையவர்களையே ஏற்றுக் கொள்வான். இவர்களுக்கே ஷபாஅத்திற்கு அனுமதியளிப்பான்.

முஷ்ரிகீன்களுக்கு எவ்வித ஷபாஅத்தும் கிடையாது;

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான் :

فَمَا تَنْفَعُهُمْ شَفَاعَةُ الشّٰفِعِيْنَ

(ஆகவே (அவர்களுக்காகப்) பரிந்து பேசுவோரின் சிபாரிசும் (அன்றைய தினம்) அவர்களுக்கு யாதொரு பயனும் அளிக்காது. (74:48)

சுவர்க்கமும், நரகமும் படைக்கப்பட்டுள்ளது. அவ்விரண்டும் இப்போது இருந்து கொண்டிருக்கின்றன. அவை ஒருபோதும் அழிவதில்லை எனவும் நம்புகின்றேன்.

மூமீன்கள் அல்லாஹ்வை பதினன்காம் இரவு சந்திரனைப் பார்ப்பது போன்ற தம் பார்வைகளால் பார்ப்பார்கள். எவ்வித நெருக்குதலுமின்றித் தெளிவாகப் பார்ப்பார்கள் என்றும் நம்புகின்றேன்.

பெருமானர் (ஸல்) அவர்கள், ரசூல்மார்கள், நபிமார்களில் கடைசியானவர்கள். அவர்கள் நபித்துவத்தை நம்பினலொழிய ஒருவன் மூமினுக முடியாது என்றும் நம்புகின்றேன்.

பெருமானர் (ஸல்) அவர்கள் உம்மத்தில் சிறந்தவர் அபூபக்கரு (ரலி) அவர்களுக்குப் பின்னர் உமர் (ரலி), பின்னர் உதுமான் (ரலி), பின்னர் அலீ (ரலி), பின்னர் சுவர்க்கத்தால் சுபசோபனம் செய்யப்பட்ட பத்துப் பேர்களில் மீதமுள்ள அறுவர், பின்னர் பத்ரு சஹாபாக்கள், பின் மரத்தடியில் ஒப்பந்தம் செய்தவர்கள் ('பைஅத்து ரில்வானி'ல் பங்கு பெற்றவர்கள்) பின் மற்ற சஹாபாக்கள் என்றும் நம்புகின்றேன் :

பெருமானர் (ஸல்) அவர்களின் தோழர்களான ஸஹாபாக்களைப் பின்பற்றி அவர்களின் சிறப்புகளைக் கூறுகின்றேன் : அவர்களுக்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கோருகின்றேன், அவர்கள் மத்தியில்

---

(1) அபூபக்கரு, உமர், உதுமான், அலீ, ஸஃது, தல்ஹா, ஸுபைர், ஸயீது, அப்துர் ரஹ்மானுப்னு அவ்ப், அபூஉபைதா [ரலியல்லாஹு அன்ஹும்] இப்பதின்மரே அஷரத்துல் முபஷ்ஷரா என்று சுவர்க்கத்தைக் கொண்டு சுபசோபனம் செய்யப்பட்டவர்கள்.

ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளைப் பற்றி நான் எந்தக் கருத்தும் தெரிவிக்கமாட்டேன் :

கீழ்காணும் அல்லாஹ்வின் திருவசனத்தின் அடிப் படையில் அவர்கள் சிறப்பை நம்புகின்றேன்,

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான் :

وَالَّذِينَ جَاءُو مِنْ بَعْدِهِمْ يَقُولُونَ رَبَّنَا
اغْفِرْ لَنَا وَلِإِخْوَانِنَا الَّذِينَ سَبَقُونَا بِالْإِيمَانِ
وَلَا تَجْعَلْ فِي قُلُوبِنَا غِلًّا لِلَّذِينَ آمَنُوا رَبَّنَا إِنَّكَ
رَءُوفٌ رَحِيمٌ

(எவர்கள் (முஹாஜிர்களாகிய) இவர்களுக்குப் பின் (மதீனவுக்கு) வந்தார்களோ, அவர்களுக்கும் (அதில் பங்குண்டு) இவர்கள், "எங்கள் இறைவா! எங்களையும், எங்களுக்கு முன் விசுவாசங் கொண்ட எங்களுடைய சோதரர்களையும் நீ மன்னித்தருள்! விசுவாசங் கொண்டவர்களைப் பற்றி எங்களுடைய இதயங்களில் குரோதங்களை உண்டுபண்ணுதே! எங்கள் இறைவனே! நிச்சயமாக நீ மிக்க கிருபை யுடையோனும், இரக்கமுடையோனுமாக இருக் கின்றாய்!" என்று பிரார்த்தனை செய்து கொண்டே இருக்கின்றனர். (59-10)

பெருமானார் (ஸல்) அவர்களுடைய பரிசுத்தமான தவறுகளை விட்டும் தூய்மையான, மனைவிமார்களின் சிறப்புக்களையும் ஏற்றுக் கொள்கின்றேன்.

அவ்லியாக்களுக்கு கராமத்து இருக்கின்றது, ஆனால் அவர்கள் அல்லாஹ்விற்குச் செலுத்த வேண்டிய எந்த வணக்கத்தைப் பெறுவதற்கும் தகுதியில்லாதோர் எனவும் ஏற்றுக் கொள்கின்றேன்.

பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களால் குறிப்பிடப்பட்டவர்களைத் தவிர வேறு யாரையும் சுவர்க்கவாதி என்றோ, நரகவாதி என்றோ நான் கூற மாட்டேன். ஆனால் நல்லவர்களுக்கு சுவர்க்கம் கிடைப்பதின்மீது ஆதரவு வைக்கின்றேன்: கெட்டவர்களைப் பற்றி அஞ்சுகின்றேன்.

ஜிஹாத் என்னும் அறப்போர் புரிய இமாம்(1) அழைக்கின்றபோது, அவருடன் எதிரிகளோடு போர் செய்வது அவசியமாகும். அந்த இமாம் நல்லவராக இருப்பினும் கெட்டவராக இருப்பினும் அவரைப்பின் தொடர்ந்து ஜமாஅத்தாகத் தொழுவதும் ஆகுமானதாகும்.

ஜிஹாத் என்னும் மார்க்கப்போர் பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் நபியாக அனுப்பப்பட்டதிலிருந்து இந்த உம்மத்தின் இறுதியானவர், தஜ்ஜாலைக் கொலை செய்வது வரை நடந்துவர வேண்டிய ஒன்றாகும், அதை யாராலும் மாற்றவோ நிறுத்திவிடவோ முடியாது.

இஸ்லாத்தின் இமாம் (தலைவர்)களுக்கு வழிபடுவது கடமையாகும். அவர்கள் நல்லவர்களாலும், தீயவர்களானாலும் பாவத்தைச் செய்ய ஏவாமலிருக்கும் போதெல்லாம் அவர்களுக்கு வழிபடுவது அவசியமாகும்;

மக்களால் விரும்பித் தேர்ந்தெடுக்கப்பட்டு அல்லது தம் ஆதிக்கத்தால் ஒருவர் கிலாபத் பதவியில் வந்து

---

(1) இமாம் என்பவர் இஸ்லாமிய முறைப்படி ஆட்சி செய்பவரும் முஸ்லிம்களின் தலைவரும் ஆவார்.

விடுவாராஞல் அவருக்கு வழிபடுவது அவசியமாகும்; அவரை எதிர்ப்பது விலக்கப்பட்டுள்ளது.

"பித்அத்" என்னும் இஸ்லாத்தில் இல்லாத புதுமைகளேப் புரிகின்றவர்களே, அவர்கள் தங்கள் பாவத்திற்காகப் பாவமன்னிப்புக் கோரும்வரை எதிர்ப்பது அவசியமாகும். அவர்களின் வெளிப்படையான செயல்களே வைத்தே நான் தீர்ப்பு வழங்குவேன். அவர்கள் அந்தரங்கங்களே அல்லாஹ்விடம் விட்டுவிடுவேன்.

இஸ்லாமிய மார்க்கத்தில் புதுமையாக உண்டாகும் ஒவ்வொரு செயலும் "பித்அத்" ஆனதாகும் என நம்புகின்றேன்.

ஈமான் என்பது நாவால் மொழிந்து, உள்ளத்தால் உணர்ந்து, உடலால் செயல்படுவதாகும். இறைவழிபாட்டால் ஈமான் அதிகரிக்கின்றது; இறைவனுக்குப் பாவம் செய்வதால் அது குறைகின்றது என்றும் நம்புகின்றேன்.

ஈமான் எழுபதிற்கு மேற்பட்ட கிளேகளாகப் பிரிகின்றது; அதில் உயர்ந்தது "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்னும் திருக்கலிமாவைக் கொண்டு சாட்சி கூறுவதாகும். அதில் இறுதியானது வழிப்பாதையில் மக்களுக்குத் தொல்லே கொடுக்கின்றவற்றை அப்புறப்படுத்துவதாகும்.

பெருமானுர் முஹம்மது (ஸல்) அவர்களின் தூய்மையான ஷரீஅத்துச் சட்டம் விதித்தது போன்று நல்லவற்றை ஏவி, தீயவற்றைத் தடுப்பது நம்மீது கடமையாகும் என நம்புகின்றேன்.

கொள்கையைச் சுருக்கமாக இங்கு குறிப்பிட்டுள்ளேன். என்னுடைய கொள்கையை நீங்கள் அறிய

வேண்டுமென்பதற்காகவே இதை எழுதினேன். நாம் கூறுவதுமீது அல்லாஹ் சாட்சியாக இருக்கின்றான்.

இராக் நாட்டைச் சார்ந்த "அஸ்ஸுவைதீ" என்பவருக்கு எழுதிய கடிதத்தில் இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றார்கள் :

இஸ்லாமிய சகோதரர் அப்துர் ரஹ்மான் பின் அப்துல்லாஹ்விற்கு முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் எழுதுவதாவது : அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹ்.

உங்கள் கடிதம் கிடைத்தது; மிக சந்தோஷமடைந்தேன். அல்லாஹ் உங்களை உண்மையான இமாம்களில் ஒருவராகவும், பெருமானார் (ஸல்) அவர்கள் மார்க்கத்தின்பால் அழைக்கிறவருமாக ஆக்கியருள்வானாக!

நான் பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களைப் பின்பற்றக் கூடியவனாவேன்; பித்அத் என்னும் புதுமைகளை உண்டு பண்ணக் கூடியவனல்லன் என்பதை உங்களுக்கு கூறிக் கொள்கிறேன்.

நான்கு பெரும் இமாம்கள், அவர்களைப் பின்பற்றியவர்களைப் போன்ற இஸ்லாத்தின் இமாம்கள் எந்தக் கொள்கையிலிருந்தார்களோ அதுவே எனது கொள்கையாகும்.

அல்லாஹ் ஒருவனையே வணங்கவேண்டும். இறந்தவர்களை அழைத்து உதவி தேடக்கூடாது. வணக்கத்தில் அல்லாஹ்விற்கு இணைவைக்கக் கூடாது. அறுத்து பலியிடுவது (குர்பானி கொடுத்தல்), நேர்ச்சை நேர்

வது; ஸுஜூது செய்வது இவை போன்ற வணக்கங்களை அல்லாஹ் ஒருவனுக்கே செய்ய வேண்டும், வேறு படைப் பினங்கள் யாருக்கும் செய்யக்கூடாது—அவர்கள் மலக்காகவோ ரசூலாகவோ இருப்பினும் சரியே. இதன் வழியிலேயே ரசூல்மார்கள் எல்லோரும் மக்களை அழைத்தார்கள். இதுவே சுன்னத் ஜமாஅத்தின் கொள்கை என்பதின் பால் மக்களை அழைக்கின்றேன்.

அலி (ரலி) அவர்கள் இறந்தபின் அவர்களை அழைத்து அவர்களிடம் உதவி தேடித் துன்பங்களைப் போக்குமாறு வேண்டுகின்ற "ராபிலா(1) என்பவர்கள் ஷிர்க்கை முதல்முதலாக நம் உம்மத்தினரில் புகுத்தியவர்களாவார்கள் என்பதை மக்களுக்குக் கூறினேன்.

என்னுடைய ஊரில் நான் நேர்மையானவனுக நடந்து கொண்டேன்; என்னுடைய பேச்சை மக்கள் மதித்துக் கேட்பார்கள், ஆனுல் தலைவர்கள் சிலர் நான் கூறுகின்றவற்றை எதிர்த்தனர். இதற்குக் காரணம் நான் கூறுகின்றவை அவர்கள் கடைப்பிடித்து வந்த பழக்கவழக்கங்களுக்கு மாற்றமாக இருப்பதேயாகும். என் ஆதிக்கத்தின் கீழ் இருக்கின்றவர்களை தொழுது ஸகாத்துக் கொடுக்குமாறும், ஏனைய இஸ்லாமிய கடமைகளை நிறைவேற்றுமாறும் கூறினேன். வட்டி, மது அருந்தல் போன்ற தவறிய செயல்களை விட்டும் அவர்களைத் தடுத்தேன்.

பொதுமக்கள் விரும்புகின்ற இந்த நல்ல காரியங்களில் என்னை எதிர்த்தவர்கள் குறைகாண முடியாமல் போனபோது,நான் ஏகத்துவக் கொள்கை பற்றி விளக்

---

(1) ''ராபிலா'' என்பவர்கள் ஷியா வகுப்பினரைச் சார்ந்தவர்கள்.

கிய விஷயத்தில் பொதுமக்களுக்கிடையில் சந்தேகங் களைக் கிளப்பி விட்டனர். நான் கூறுபவை அதிகமான மக்கள் இருந்துவரும் கொள்கைக்கு மாற்றமான தாகும் என்றெல்லாம் கூறி எங்களைப் பற்றித் தவறு களை பரப்பியபோது, மக்கள் மத்தியில் குழப்பம் ஏற் பட்டு எங்களை எதிர்த்தனர்.

இவர்கள் பரப்பிய பெயர்களில் தாங்கள் குறிப் பிட்டுள்ள "என்னைப் பின்பற்றியவர்களைத் தவிர, மற்றவர்கள் எல்லோரையும் காபிர்கள் என்றுகூறி, அவர்கள் திருமணங்கள் கூடாதெனவும் கூறுகின் றேன்," என்பதும் ஒன்ருகும்.

இது ஆச்சரியமே ஆச்சரியம்! அறிவுடையவர் புத்திக்கு இது பொருந்துமா? ஒரு முஸ்லிம் இவ்வாறு கூறுவாளு? அறிவிற்குப் பொருந்தாத, இவர்கள் கூறும் இந்த விஷயத்தில் அல்லாஹ்விடம் நான் நிர பராதியாவேன்.

மக்களை ஏகத்துவக் கொள்கையின் பால் அழைத்து, ஷிர்க்கை விட்டு விலக்குவதைத் தவிர என் மீது கூறப்படும் மற்ற எல்லா விஷயங்களும் இட்டுக் கட்டியவையாகும்.

## "மொராக்கோ" நாட்டுவாசிகளுக்கு எழுதிய கடிதம்

பெருமானூர் முஹம்மது (ஸல்) அவர்களுடைய வழி முறைகளைப் பின்பற்றுவதின் கடமையையும் பித்அத்' என்னும் புதுமைகளை விடுவதற்கும் குர்ஆன், ஹதீஸி லிருந்து பல ஆதாரங்களையும் எடுத்துக் காட்டினூர்கள் "என் உம்மத்தினர். முன் சென்றவர்களை ஒவ்வோர் அடியாகப் பின்பற்றுவார்கள்," என்று பெருமானூர்

(ஸல்) அவர்கள் கூறிய ஹதீஸின்படி, நிச்சயமாக இந்த சமுதாயம் சென்றுபோனசமூகத்தினர்களைப்போன்று பல பிரிவுகளாகப் பிரியும். இவர்களில் பெருமானார் (ஸல்) அவர்களையும், உத்தம ஸஹாபாக்களையும் பின் பற்றுகின்றவர்கள் மட்டும்தான் வெற்றி பெற்றவர் கள் என்பதற்குப் பல ஆதாரங்களைக் குறிப்பிட்டுள் ளார்கள்.

இவற்றை நாம் அறிவோமானால், தற்போது மக்கள் மத்தியில் இவற்றுக்கு மாற்றமாகப் பரந்து காணப்படும் அல்லாஹ்விற்கு இணை வைத்தல், இறந்த வர்களிடம் தேவைகளை வேண்டுதல், எதிரிகளிடம் வெற்றி கிடைக்கக் கோரி கப்ரிடம் வேண்டல், அல்லாஹ்வைத் தவிர வேறு யாராலும் செய்ய முடியாதவற்றை கப்ரிடம் கேட்டல், கப்ரிலுள்ளவர் களுக்கு நேர்ச்சை செய்தல், அவர்களுக்கு அறுத்து பலியிடுதல், கஷ்டங்கள் மாற அவர்களிடம் இஸ்தி காதா (அபயம்) தேடல் போன்ற—இறைவன் ஒருவ னுக்கே செய்யவேண்டிய வணக்கங்களை—இறைவனல் லாதவர்களுக்கு மக்கள் செய்துவருவது நாம் எல் லோரும் தெரிந்த ஒன்றாகும்.

வணக்கத்தில் சிலதை அல்லாஹ் அல்லாத வர்களுக்குச் செலுத்துவது, வணக்கம் எல்லாவற்றை யும் அவ்வாறு செய்வது போன்றாகும். ஏனெனில், அல்லாஹ் கூட்டுக்காரர்களைவிட்டும் தேவையற்ற வன். ஷிர்க்கை செய்கின்றவர்கள், ஷிர்க்கான காரி யங்களை விட்டும் தேவையற்றவன். அல்லாஹ் அமல்களில் தூய்மையானதையே ஏற்றுக் கொள் வான்.

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான் :

...فَاعْبُدِ اللّٰهَ مُخْلِصًا لَّهُ الدِّيْنَ ۝ اَلَا لِلّٰهِ الدِّيْنُ الْخَالِصُ
وَالَّذِيْنَ اتَّخَذُوْا مِنْ دُوْنِهٖٓ اَوْلِيَآءَ ۘ مَا نَعْبُدُهُمْ
اِلَّا لِيُقَرِّبُوْنَآ اِلَى اللّٰهِ زُلْفٰى ؕ اِنَّ اللّٰهَ يَحْكُمُ بَيْنَهُمْ
فِيْ مَا هُمْ فِيْهِ يَخْتَلِفُوْنَ ؕ اِنَّ اللّٰهَ لَا يَهْدِيْ مَنْ
هُوَ كٰذِبٌ كَفَّارٌ ۔

(தூய வழிபாடு அல்லாஹ்வுக்கே சொந்தமானது என்பதை அறிந்து கொள்வீராக! எவர்கள் அல்லாஹ் அல்லாதவற்றைத் (தங்களுக்குப்) பாதுகாவலாக எடுத்துக் கொண்டிருக்கிறார்களோ, அவர்கள், ''அத் தெய்வங்கள் எங்களை அல்லாஹ்வுக்கு மிக்க சமீப மாக்கி வைக்கும் என்பதற்காகவேயன்றி, இவற்றை நாம் வணங்கவில்லை,'' (என்று கூறுகின்றனர்.) அவர்கள் வேறுபட்டு (த் தர்க்கித்துக்) கொண்டிருக் கும் இவ்விஷயத்தைப் பற்றி, நிச்சயமாக அல்லாஹ் (மறுமையில்) அவர்களுக்கிடையில் தீர்ப்பளிப்பான்; (உண்மையை) மறுத்துப் பொய் கூறுபவர்களை நிச்சயமாக அல்லாஹ் நேரான வழியில் செலுத்துவ தில்லை) (39 : 2—3)

வணக்கத்தில் பரிசுத்தமானதையே அல்லாஹ் ஏற்றுக் கொள்வான் என்பதை இந்த வசனத்தில் விளக்குகின்றான்.

மேலும், முஷ்ரிகீன்கள் தங்களை அல்லாஹ்வின் பக்கம் அடுத்து வைப்பதற்காகவும், அவர்களுக்காக

சிபாரிசு செய்வதற்காகவும் மலக்குகள், நபிமார்கள், நல்லவர்களை அழைக்கின்றார்கள் என்பதையும் இந்த வசனத்தில் விளக்குகின்றான்.

முஷ்ரிகீன்கள் கூறிக் கொள்ளும் இந்த விஷயத்தில் அவர்கள் பொய்யர்கள், இவ்வாறு பொய் கூறுகின்ற காபிர்களுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுவதில்லை எனவும் இந்த வசனத்தில் கூறுகின்றான்.

## அல்லாஹ்வின் திருநாமங்கள், பண்புகள் பற்றி எழுதிய கடிதம்

சஹாபாக்களும், தாபியீன்களும், அவர்களைப்பின் தொடர்ந்தவர்களும், நான்கு இமாம்களும், ஸலபுஸ் ஸாலிஹீன்களும் என்ன கொள்கையில் இருந்தார் களோ அவற்றையே நாங்களும் நம்புகின்றோம்.

அதாவது அல்லாஹ்வின் (சிபாத்) பண்புகள்பற்றி குர்ஆன், ஹதீஸில் வந்தவற்றை எவ்வித மாற்றமுமின்றி, எவ்வித உவமையும் கொடுக்காமல் வந்தது போன்று அப்படியே நம்புகின்றோம்.

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான்:

وَمَن يُشَاقِقِ الرَّسُولَ مِن بَعْدِ مَا تَبَيَّنَ لَهُ الْهُدَىٰ وَيَتَّبِعْ غَيْرَ سَبِيلِ الْمُؤْمِنِينَ نُوَلِّهِ مَا تَوَلَّىٰ وَنُصْلِهِ جَهَنَّمَ وَسَاءَتْ مَصِيرًا ۔

(நேரான வழியின்னதென்று தனக்குத் தெளிவான பின்னரும், எவன், (அல்லாஹ்வுடைய) இத்தூதரை விட்டுப் பிரிந்து, விசுவாசிகளின் வழியில்லாததில் செல்கின்றானோ அவனை, நாம் அவன் சொல்லும்

(தவருன) வழியிலேயே செல்லவிட்டு (பின்னர்) அவனை நரகத்தில் சேர்த்து விடுவோம், அது செல்லுமிடங்களில் மிகக் கெட்டதாகும் (4-15)

மற்ருேர் ஆயத்தில் கூறுகின்ருன்,

وَالسَّٰبِقُونَ الْأَوَّلُونَ مِنَ الْمُهَٰجِرِينَ وَالْأَنصَارِ
وَالَّذِينَ اتَّبَعُوهُم بِإِحْسَٰنٍ رَّضِيَ اللَّهُ عَنْهُمْ
وَرَضُوا عَنْهُ وَأَعَدَّ لَهُمْ جَنَّٰتٍ تَجْرِي تَحْتَهَا
الْأَنْهَٰرُ خَٰلِدِينَ فِيهَا أَبَدًا ۚ ذَٰلِكَ الْفَوْزُ الْعَظِيمُ

("முஹாஜிர்"களிலும் "அன்ஸார்"களிலும் எவர்கள் (இஸ்லாத்தில்) முதலாவதாக முந்திக் (கொண்டு விசுவாசங்) கொண்டார்களோ அவர்களையும், நற்கருமங்களில் (மெய்யாகவே) அவர்களைப் பின்பற்றியவர்களையும் பற்றி அல்லாஹ் திருப்தியடைகின்ருன். அவர்களும் அல்லாஹ்வைக் கொண்டும் திருப்தியடைகின்றனர். அன்றி சதா நீரருவிகள் ஓடிக் கொண்டிருக்கும் சுவனபதிகளை அவர்களுக்கென சித்தப்படுத்தி வைத்திருக்கின்ருன். அவற்றிலேயே அவர்கள் என்றென்றும் தங்கிவிடுவார்கள்; அது மகத்தான பெரும் பாக்கியமாகும்.) [9 : 100]

மற்ருேர் வசனத்தில் கூறுகின்ருன்,

لَقَدْ رَضِيَ اللَّهُ عَنِ الْمُؤْمِنِينَ إِذْ يُبَايِعُونَكَ تَحْتَ
الشَّجَرَةِ...

(அந்த மரத்தடியில் உம்மிடம் (கைகொடுத்து) வாக்குறுதி செய்த விசுவாசிகளைப்பற்றி நிச்சயமாக அல்லாஹ் திருப்தியடைந்தான். (48 : 18)

இவ்வாறு அல்லாஹ் தன் திருமறையில் புகழ்ந்திருக்கும் உத்தம சஹாபாக்களைப் பின்பற்றி நடப்பவன் நேரான பாதையிலுள்ளான். அவர்களுக்கு மாற்றம் செய்பவன் தவறிய பாதையைப் பின்பற்றுபவனாவான் என்று குர்ஆன் நமக்குத் தெளிவுபடுத்தியுள்ளது.

இந்த சஹாபாக்களின் கொள்கை என்னவெனில் திருக்குர்ஆன், பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் மூலம் அறியப்படுகின்ற அல்லாஹ்வின் திருநாமங்களையும், அவனால் வர்ணிக்கப்பட்ட அவன் (சிபாத்) பண்புகளையும் எவ்வித மாற்றமுமின்றி, கூட்டவோ குறைக்கவோ செய்யாமல், தன் இஷ்டப்படி விளக்கங்கள் கொடுக்காமல், அவற்றை தஃவீல் (மாற்றம்) செய்யாமல், படைப்பினங்களுடைய பண்புகளுக்கு அவற்றை ஒப்பிடாமல், வந்ததுபோன்று அப்படியே நம்புவதாகும். அப்பண்புகளின் அந்தரங்கப் பொருள்களை அல்லாஹ்விடமே விட்டுவிட்டார்கள்,(1)

---

(1) அதாவது அதன் வடிவம், அகப்பொருளை, அறிவது என்பது சுன்னத் ஜமாஅத்தார்களிடத்தில் மொழி அடிப்படையில் அதை அறிவது நோக்கமல்ல; ஏனெனில் அவர்களிடத்தில் அதன் பொருள் நன்கு அறியப்பட்டுள்ளது. அதாவது அல்லாஹ்வின் ''கேள்வி'' என்ற பண்பு அவனது ''பார்வை'' என்ற பண்பைப் போன்றதல்ல ''அர்ஷில் தறிபட்டான்'' என்ற அவன் பண்பு, ''வானத்திற்கு இறங்குதல்'' என்ற பண்பைப் போன்றதல்ல, ''கோபம்'' என்ற பண்பு ''விருப்பம்'' என்ற பண்பைப் போன்றதல்ல என்பதை சுன்னத் ஜமாஅத்தார்கள் நன்கு அறிவார்கள்,

இவ்வாறே மற்றெல்லாப் பண்புகளுமாகும்; நிச்சயமாக மேற்கூறப்பட்ட இவை போன்ற பண்புகளால் உண்மையா

இவ்வாறு சஹாபாக்கள் ஒருவர்பின் ஒருவராக நம்பி வந்தார்கள். இவற்றைப் பின்பற்றுமாறு தமக்குப் பின்னுள்ளவர்களுக்கு வசிய்யத்துச் செய்தார்கள். பித்அத் என்னும் புதுமைகள் புரிகின்றவர்களையும். பிரிவினை உண்டு பண்ணுகின்றவர்களையும் பின்பற்றுவதைவிட்டும் நம்மை எச்சரித்தார்கள்,

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான் ;

إِنَّ الَّذِينَ فَرَّقُوا دِينَهُمْ وَكَانُوا شِيَعًا لَّسْتَ مِنْهُمْ فِي شَيْءٍ...

---

கவே அல்லாஹ் வர்ணிக்கப்பட்டுள்ளான், படைப்பினங்களுடைய பண்புகளுக்கு ஒப்பின்றி, அவனுக்குத் தகுதியான முறையில் அப்பண்புகளால் வர்ணிக்கப்பட்டுள்ளான் என்றும் நம்பினார்கள்.

இமாம் மாலிக் (ரலி) அவர்களும், அவர்கள் ஆசிரியர் ரபீஆ (ரலி) என்பவர்களும் கூறுகின்றார்கள்: ''அல்லாஹ் அர்ஷில் தறிபட்டான்'' என்பது தெரியாத ஒன்றல்ல.ஆனால் அது எப்படி என்பது அறியப்படாததாகும்.

இமாம் மாலிக் (ரலி) மேலும் கூறினார்கள்: ''அர்ஷில் தறிபட்டான்'' என்ற பண்பு அறியப்பட்டுள்ளது, அது எந்த விதத்தில் என்பது அறியப்படவில்லை, அதை நம்புவது கடமை, எப்படித் தறிபட்டான் என்று கேட்பது 'பித்அத்' விலக்கப்பட்டதாகும், இதை இமாம் மாலிக் (ரலி) அவர்கள் மூலமாகவும், அவர்கள் ஆசிரியர் ரபீஆ (ரலி) அவர்கள் மூலமாகவும் எல்லா இமாம்களும் அறிந்து அது சரியென ஏற்றுள்ளார்கள். அதுவே சந்தேகத்திற்கு இடமற்ற உண்மையாகும்; அதன்படியே எல்லா சுன்னத் ஜமாஅத்தார்களும் நம்பி, அல்லாஹ் நிகரற்றவன்; அவன் (எல்லாவற்றையும்) கேட்பவனும் பார்ப்பவனுமாக இருக்கின்றான், என்பது போன்ற இறை வசனங்கள்படி அமல் ஏற்றுக் கொள்கின்றார்கள். (அப்துல் அஜீஸ் பின்பாஸ்)

(எவர்கள் தங்கள் மார்க்கத்தை (தங்கள் இஷ்டப்படி பலவாருக)ப் பிரித்து, (அவர்களும்) பலபிரிவினராகப் பிரிந்து விட்டனரோ அவர்களுடன் உமக்கு யாதொரு சம்பந்தமுமில்லை.) (6 ; 159)

மற்ருேர் வசனத்தில் கூறுகின்ருன் :

وَلَا تَكُونُوا كَالَّذِينَ تَفَرَّقُوا وَاخْتَلَفُوا مِنْ بَعْدِ
مَا جَاءَهُمُ الْبَيِّنٰتُ ۚ وَأُولٰٓئِكَ لَهُمْ عَذَابٌ عَظِيمٌ

(எவர்கள் தங்களிடம் தெளிவான சான்றுகள் வந்த பின்னரும், தங்களுக்குள் (கருத்து வேறுபட்டுப் பிரிந்து போனார்களோ அவர்களைப் போல நீங்களும் ஆகிவிட வேண்டாம். இத்தகையோருக்குத்தான் (மறுமையில் மகத்தான வேதனையுண்டு) (3-105)

"நாம் மேல் கூறியதே ஸலபுஸ் ஸாலிஹீன்களின் கொள்கை" என்பதற்கு ஆதாரம் என்னவெனில், அவர்கள் திருக்குர்ஆனை நமக்கு எத்திவைத்தார்கள். பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களின் ஹதீஸ்களை நமக்கு அறிவித்தார்கள். இவை இரண்டிலுமுள்ளவற்றை நம்பியவர்களாக அவற்றை உண்மையாக, எந்த மாற்றமுமின்றி நமக்கு எத்திவைத்தார்கள். அவற்றிலோ அவற்றைச் சொன்னவர்களிலோ இவர்கள் எந்த சந்தேகமும் படவில்லை. அல்லாஹ்வின் (சிபாத்) பண்புகளுக்கு மாற்றுப் பொருள் ஏதும் இவர்கள் கொடுக்கவில்லை. படைப்பினங்களின் பண்புகளுக்கு இப் பண்புகளை ஒப்பிடவுமில்லை. அவ்வாறு இவர்கள் இதில் ஏதும் செய்திருப்பார்களானல் அது நமக்குக் கிடைத்திருக்கும். அவ்வாறு செய்ததாக

ஆதாரம் எதுவுமில்லை. ஆனால் இதுபோன்ற விஷயங்களில் அதிக விளக்கம் கேட்கின்றவர்களை எதிர்த்தும், சிலவேளை அவர்களை அடித்துமுள்ளார்கள். இவர்கள் கொள்கைக்கு இவை மாபெரும் சான்றாகும்.

அல்லாஹ்வின் பண்புகளில் ஒன்றான (இஸ்திவா) "அர்ஷில் தரிபடுதல்" என்பதைப் பற்றி இமாம் மாலிக் (ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டபோது அவர்கள் கீழ்க்காணுமாறு பதிலளித்தார்கள் :

அத்திருநாமங்கள் குர்ஆன், ஹதீஸ் மூலம் அறியப்பட்டுள்ளன. அவற்றுக்கு விளக்கம் கேட்பது விலக்கப்பட்டுள்ளது. அவற்றை நம்புவது ஒவ்வொரு முஸ்லிம் மீதும் கடமையாக்கப்பட்டுள்ளது.

இமாம் மாலிக் அவர்களின் இந்த பதில் அல்லாஹ்வின் எந்தப் பண்புகளைப் பற்றி விளக்கம் கேட்கும்போதும் கூறுவதற்குப் பொருத்தமான பதிலாகும்.

"ரயீய், பின் சுலைமான்" என்பவர் கூறுகிறார் ; அல்லாஹ்வின் பண்புகளைப் பற்றி இமாம் ஷாபியீ (ரலி)அவர்களிடம் நான் கேட்டபோது அவர்கள் பின்வருமாறு பதிலளித்தார்கள் :

"அறிவால் அல்லாஹ்விற்கு உவமை காட்டுவதும்; சிந்தனைகளால் அவற்றை சிந்திப்பதும், எண்ணங்களால் அவற்றை வரையறுப்பதும், நஃப்ஸுகளால் அவற்றுக்குத் தீர்ப்பு வழங்குவதும், உள்ளத்தால் அவற்றை உணர முற்படுவதும், அவற்றை ஆழமாக ஆராய்வதும் ஹராமானதாகும். பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் மூலம் அறியப்பட்டவற்றில் மாத்திரமே சிந்திக்க வேண்டும்.

இஸ்மாயில் பின் அப்துர் ரஹ்மான் அஸ்ஸாபூனி என்பவர் கூறுகின்றார் ;

குர்ஆனையும், ஹதீஸையும் பற்றிப் பிடித்து, அதன்படி செயல்படுகின்ற ஹதீஸ் கலைவல்லுநர்கள் குர்ஆன், ஹதீஸின் மூலம் வந்துள்ள அல்லாஹ்வின் பண்புகளைக் கொண்டு அல்லாஹ்வை வர்ணிக்கின்றார்கள் : அவற்றுக்கு உவமையோ, வடிவமோ இருப்பதாக நம்புவதில்லை. முஃதஸிலா, ஜஹமிய்யாக்களைப் போன்று அவற்றை மாற்றிமறைப்பதுமில்லை.

அல்லாஹ் சுன்னத் ஜமாஅத்தார்களை இது போன்ற விஷயங்களை அவன் பண்புகளில் கூறுவதை விட்டும் காப்பாற்றி விட்டான் ; எனவே அவர்கள் ஏகத்துவப் பாதையைப் பின்பற்றி, அல்லாஹ்வின் தூய்மையை ஏற்று, அவனுக்கு உவமை, காட்டுவது போன்றவற்றை விட்டுவிட்டனர். அல்லாஹ் குறைகளை விட்டும் தூய்மையானவன் என்பதற்குக் கீழ் காணும் இறைவசனத்தைக் கொண்டு போதுமாக்கிக் கொண்டார்கள் ;

لَيْسَ كَمِثْلِهِ شَيْءٌ وَهُوَ السَّمِيعُ الْبَصِيرُ

...அல்லாஹ்விற்கு நிகர் எதுவுமில்லை (அவன் எல்லாவற்றையும்) கேட்பவனும் பார்ப்பவனுமாக இருக்கின்றான். 42:11

لَمْ يَلِدْ وَلَمْ يُولَدْ وَلَمْ يَكُن لَّهُ كُفُوًا أَحَدٌ

(அல்லாஹ் (எவரையும்) பெறவுமில்லை, (எவராலும்) பெறப்படவுமில்லை; தவிர அவனுக்கு ஒப்பாகவும் ஒன்றுமில்லை.) (112-3)

என்ற அல்லாஹ்வின் திருவசனங்களில் வந்தது போன்று நம்பினார்கள்.

இமாம் புகாரி (ரஹ்) அவர்களின் ஆசிரியர் அல் ஹுமைதி என்பவர் கூறுகின்றார்கள்.

وَقَالَتِ الْيَهُوْدُ يَدُ اللّٰهِ مَغْلُوْلَةٌ ....

("அல்லாஹ்வுடைய கைகட்டப்பட்டிருக்கிறது" என்று இந்த யூதர்கள் கூறினார்கள்.) (5-64)

...وَالسَّمٰوٰتُ مَطْوِيّٰتٌ بِيَمِيْنِهٖ

(மறுமையில்) வானங்கள் (யாவும்) சுருட்டப் பட்டுச் (சுருளாக அல்லாஹ்வின் வலக்கையிலிருக்கும்) [39-67]

என்பன போன்ற குர்ஆனில் வந்தவற்றையும். இன்னும் ஹதீதில் வந்தவற்றையும் எவ்வித விரிவுரை யும் செய்யாமல். மறுக்கவும் செய்யாமல் குர்ஆன், ஹதீஸில் வந்தது போன்று அப்படியே நம்ப வேண்டும்

اَلرَّحْمٰنُ عَلَى الْعَرْشِ اسْتَوٰى

(ரஹ்மான் அர்ஷில் தரிபட்டு விட்டான்) என்று நாம் கூறுகின்றோம், இதற்கு மாற்றம் சொல்பவர்கள் ஜஹமிய்யாக்களாவர். (20:5)

ஸலபுஸ்ஸாலிஹீன்கள் அல்லாஹ்வின் பண்புகளை எந்த மாற்றமுமின்றி—வந்தது போன்று—நம்பினார் கள். ஏனெனில் அல்லாஹ்வின் பண்புகள் பற்றிப் பேசுவது அல்லாஹ்வின் தாத்தைப் பற்றிப் பேசுவது

போன்றாகும். அல்லாஹ்வின் தாத்தை நம்புவதென்பது, அவனுக்கு வடிவமோ உவமையோ கொடுக்காமல் அவன் இருக்கின்றான் என்று நம்புவதாகும். இவ்வாறே அவன் பண்புகளுக்கும் உவமையோ வடிவமோ கொடுக்காமல் அப்படியே நம்ப வேண்டும். இவ்வாறே எல்லா சலபுஸ்ஸாலிஹீன்களும் நம்பி வந்தார்கள்.

இவ்வாறு அந்த நல்லவர்கள் கூறியதைச் சொல்லிக் கொண்டே செல்வோமானால் அது நீண்டு செல்லும். எனவே, உண்மையை அறிய விரும்புகின்றவர்களுக்கு மேல் கூறப்பட்டவை போதுமானவையாகும். வாதம் புரிகின்றவர்களுக்கு எவ்வளவு கூறினாலும், அவர்கள் தம் வாதத்திலேயே இருப்பார்கள்.

## இமாம் முஹம்மதிற்கும் மற்றவர்களுக்குமிடையில் பிரச்சினை ஏற்பட்ட விஷயங்கள்

1. தவ்ஹீதுல் உபூதிய்யத்

இதற்கு தவ்ஹீதுல் உலூஹிய்யத் (வணக்கத்தை அல்லாஹ் ஒருவனுக்கே செய்தல்) என்றும் கூறப்படும், நபி நூஹ் (அலை) முதல் முஹம்மது (ஸல்) அவர்கள் வரை வந்த ரசூல்மார்கள் இந்த தவ்ஹீதை மக்களுக்கு எடுத்துக் கூறுவதற்காகவே அனுப்பப்பட்டார்கள்,

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான்,

وَلَقَدْ بَعَثْنَا فِي كُلِّ أُمَّةٍ رَّسُولًا أَنِ اعْبُدُوا اللّٰهَ
وَاجْتَنِبُوا الطَّاغُوتَ ...

(பூமியின் பல பாகங்களிலும் வசித்திருந்த) ஒவ்வொரு வகுப்பினருக்கும் நிச்சயமாக நாம் தூதரை அனுப்பியிருக்கின்றோம். (அத்தூதர்கள் அவர்களை

நோக்கி) "அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள்,(வழி கெடுக்கும்) ஷைத்தான்களிலிருந்தும் நீங்கள் விலகிக் கொள்ளுங்கள், (என்று கூறிச் சென்றார்கள்) (16-36) என்பதாக ஒவ்வொரு ரசூலும் கூறினார்கள்.

முன் குறிப்பிடப்பட்டது போன்று நஜ்து மாகாணத்திலும் மற்ற பாகங்களிலுமுள்ள மக்கள் நபிமார்கள், நல்லவர்களின் கப்றுகளையும், சில மரங்கள், குகைகளையும், கடவுளாக மதித்து அவற்றுக்கு அல்லாஹ்விற்குச் செய்யும் வணக்கங்களில் சிலதைச் செய்து வந்ததை இமாம் முஹம்மதவர்கள் கண்டித்தார்கள். மேலும் அவற்றுக்கு நேர்ச்சை செய்தல், அவற்றின் மீது சத்தியம் செய்தல், அவற்றுக்கு குர்பானி கொடுத்தல், அவற்றிடமிருந்து அபயமும், உதவியும் தேடல் போன்ற வணக்கங்களை அவற்றுக்குச் செய்வதை விட்டும் மக்களைத் தடுத்தார்கள்.

'இபாதத்' என்பது அல்லாஹ் ஏவியது போன்று அவனுக்கு வழிபடுவதாகும். இபாதத் என்ற சொல் அல்லாஹ் விரும்பி நேசிக்கின்ற ஒவ்வொரு சொல், செயலுக்கும் சொல்லப்படும். வணக்கங்கள் பலவாறாக இருக்கின்றன. அவற்றில் தொழுகை, நோன்பு, தர்மம், நேர்ச்சை, குர்பானீ, தவாப் செய்தல் உதவி தேடல் பாதுகாவல் தேடல் இவையெல்லாம் இபாதத் என்னும் வணக்கங்களாகும்.

இவற்றில் எதையேனும் அல்லாஹ் அல்லாதவர்களுக்குச் செய்பவன் முஷ்ரிக் ஆவான். அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான்:

وَمَنْ يَّدْعُ مَعَ اللّٰهِ اِلٰهًا اٰخَرَ لَا بُرْهَانَ لَهٗ بِهٖ فَاِنَّمَا حِسَابُهٗ عِنْدَ رَبِّهٖ اِنَّهٗ لَا يُفْلِحُ الْكٰفِرُوْنَ.

(நபியே!) எவன், அல்லாஹ்வுடன் வேறு நாயனை (ஆண்டவனென) அழைக்கிருனே அவனிடத்தில், அதற்குரிய யாதோர் அத்தாட்சியுமில்லை; அவனுடைய (பாபக்) கணக்கு அவனுடைய இறைவனிடத்தில்தான் (தீர்க்கப்படும்) நிச்சயமாக (உண்மையை) நிராகரிக்கும் இத்தகையோர் சித்தி பெறவே மாட்டார்கள்) (23:117)

என்பன போன்றவற்றை இமாம் முஹம்மதவர்கள் மக்களுக்கு விளக்கிஞர்கள். சிலர் விரும்பி இவை உண்மையென அறிந்து பின்பற்றிஞர்கள். வேறுபலர் தங்கள் மூதாதைகள் இருந்து வந்த மூடக் கொள்கைகளைப் பின்பற்றியதாலும், அறிஞர்களில் அதிகமானவர்கள் வாய்மூடி இருந்ததாலும், இவை போன்ற மூடப்பழக்க வழக்கங்கள் பரந்திருந்தமையாலும் இமாம் முஹம்மதைப் பின்பற்ற மறுத்தனர்.

2. வசீலா

வசீலா இரண்டு வகைப்படுகிறது. ஒன்று ஆகுமானது. இது ஈமானைக் கொண்டும் அல்லாஹ்வின் அழகிய திருநாமங்களைக் கொண்டும், நாம் செய்யும் நல்ல அமல்களைக் கொண்டும் தேடும் வசீலா.

இதற்கு உதாரணமாக ஹதீஸில் வந்த ஒரு வரலாற்றை இங்கு காண்போம்.

மூன்று பேர் தற்செயலாக ஒரு குகையினுள் நுழைந்தார்கள். திடீரென அக் குகையை ஒருபாறை மூடிக் கொண்டது. வெளியில் வரமுடியாமல் அம்

மூவரும் திகைத்தனர். அப்போது ஒவ்வொருவரும் தாம் செய்த நல்ல அமல்களை ஞாபகம் செய்து இறைவனிடம் மன்றாட ஆரம்பித்தனர்.

அவர்களில் ஒருவர் தனக்கு விபச்சாரம் செய்யும் வாய்ப்புக் கிடைத்தபோது அல்லாஹ்விற்காக அத்தீய செயலிலிருந்து விலகிக் கொண்ட சம்பவத்தை ஞாபகம் செய்து, அவரிடமிருந்து ஏற்பட்ட அப்பத்தினித் தன்மையைக் கொண்டு வசீலா தேடினார்.

இரண்டாமவர்; தம் தாய் தந்தையருக்கு அடிபணிந்து நடந்து அவர்களுக்குப் பணிபுரிவதிலேயே தம் வாழ்க்கையைக் கழித்தார், எனவே இந்த நல்ல அமலைக் கொண்டு இறைவனிடம் வசீலா தேடினார்.

மூன்றாமவர்: நம்மிடம் அமானிதமாக விடப்பட்ட கொஞ்சப் பொருளை வியாபாரத்திலிட்டு, அதன் வாயிலாக அதிகப் பொருள் திரட்டி அதற்குரியவரிடம் அனைத்தையும் ஒப்படைத்தார். எனவே இவரும் தம்முடைய இந்த நல்ல அமலைக் கொண்டு இறைவனிடம் வசீலா தேடினார்.

இவ்வாறாக மூவரும் தம் நல்ல அமல்களைக் கொண்டு வசீலா தேடியபோது அல்லாஹ் அவர்களுடைய நெருக்கடியான சூழ்நிலையைப் போக்கி குகையின் பாறையைத் திறக்கச் செய்தான்.

இவ்வாறு நாம் செய்த நல்ல அமல்களையும் நமது ஈமானையும் கொண்டு வசீலா தேடுவதே ஆகுமானதாகும்.

இரண்டாவது வகை வசீலா விலக்கப்பட்டதாகும், இது இறந்து போனவர்களைக் கொண்டு

தேடும் வசீலாவாகும். அதாவது; "நபிமார்களின் பொருட்டால், அவ்லியாக்களின் பொருட்டால் உன்னிடம் கேட்கின்றேன் இறைவா! அவர்களின் சிறப்பைக் கொண்டு கேட்கின்றேன் இறைவா!, அவர்களின் ஹக்கைக் கொண்டு கேட்கின்றேன் இறைவா!" என்று கேட்பதாகும். இவ்வாறு கேட்பதை இமாம் முஹம்மதுபின் அப்துல்வஹ்ஹாப் அவர்கள் விலக்கினார்கள், ஏனெனில், இவ்வாறு கேட்பதற்கு குர்ஆனிலும் ஹதீஸிலும் எந்த ஆதாரமும் கிடையாது.

வசீலா என்பது துஆவாகும்; துஆ வணக்கமாகும்; வணக்கம் இறைவன் ஒருவனுக்கே சொந்தமானதாகும். அல்லாஹ்வை அவன் விரும்புவது போன்று வணங்கவேண்டும். நாம் நமது விருப்பப்படி இல்லாதவற்றை உண்டு பண்ணி வணக்கமென நினைத்துச் செய்வோமானல் அதை அல்லாஹ் ஏற்றுக் கொள்வதில்லை.

يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللَّهَ وَابْتَغُوا إِلَيْهِ الْوَسِيلَةَ...

(விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து அவனிடம் செல்வதற்குரிய வழியைத் தேடிக் கொள்ளுங்கள்.) (5-35)

என்ற இந்த இறை வசனத்தை ஆதாரமாக வைத்து நபிமார்களையும், மற்றவர்களையும் கொண்டு வசீலா தேடுகின்றனர். ஆனல் தலை சிறந்த திருக்குர்ஆன் விரிவுரையாளர்களும், முன்சென்ற பெரியார்களும் தம் நல்ல அமல்களைக் கொண்டே

வசீலா தேட வேண்டுமென்பதாக இவ்வசனத்திற்கும் பொருள் கொடுத்துள்ளனர்.

எனவே நம் நல்ல அமல்களைக் கொண்டே வசீலாத் தேட வேண்டுமே தவிர, இறந்தவர்களைக் கொண்டு உதவியோ, வசீலாவோ தேடக் கூடாது.

இறந்தவர்களைக் கொண்டு வசீலா தேடுவதை ஆதரிக்கும் சிலர், ஆதம் (அலை) அவர்கள் முஹம்மது (ஸல்) அவர்களைக் கொண்டு வசீலா தேடினார்கள் என்ற ஹதீஸை ஆதாரம் காட்டுகின்றனர். ஆனால் இது இட்டுக் கட்டப்பட்ட பொய்யான ஹதீஸாகும். இதற்கு ஹதீஸ் கிரந்தங்களில் எந்த ஆதாரமுமில்லை.

மேலும் பார்வை இழந்த ஒருவர் பெருமானார் (ஸல்) அவர்களிடம் வந்து, இறைவன் அவருக்குப் பார்வையை கொடுத்தருள வேண்டியபோது, தங்களைக் கொண்டு வசீலா தேடுமாறு பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியதாக வந்துள்ள பலஹீன்மான ஹதீஸையும் "பாத்திமா பிந்து அஸது" என்பவர்கள் பற்றி அறிவிக்கப்பட்டுள்ள பலஹீனமான ஹதீஸையும் ஆதாரமாக எடுக்கின்றனர்.

பலஹீனமான ஹதீஸ்கள் ஆதாரமாக எடுப்பதற்கு தகுதியற்றவையாகும்.

3. கப்ருகளுக்குப் பிரயாணம் செய்து போகுதல்

மூன்று பள்ளி வாசல்களுக்கே தவிர மற்ற பள்ளி வாசல்களுக்குப் பிரயாணம் செய்து செல்வதை இமாம் முஹம்மது தடுத்தார்கள்.

ஏனெனில் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

கஃபதுல்லா, மஸ்துந்நபவி, பைத்துல் முகத்தஸ் இம்மூன்று பள்ளி வாசலுக்கே தவிர வேறு எந்த இடங்களுக்கும் நன்மையை நாடிப் பிரயாணம் செய்யக் கூடாது.

இமாம் முஹம்மதவர்கள் இந்த ஹதீஸிற்கு எவ்வித மாற்றமான பொருளும் கொடுக்காமல், வெளிப்படையாக அதிலிருந்து கிடைக்கும் அர்த்தத்தின்படியே அமல் செய்தார்கள்.

கல்விக்காக, உறவினர்களை சந்திக்க, பொருள் சம்பாதிக்க—இவை போன்ற காரியங்களுக்காகப் பிரயாணம் செய்து செல்வது இதில் சம்பந்தப் பட்டதல்ல, ஏனெனில் இவற்றுக்காகப் பிரயாணம் செய்வதை கடமையாக்கி ஷரீஅத்தில் பல ஆதாரங்கள் வந்துள்ளன.

இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் மூன்று பள்ளிகளல்லாத மற்ற பள்ளிகளுக்குப் பிரயாணம் செல்வதைத் தடுப்பதற்கு முன்னால், இப்னு தைமிய்யா, இப்னுல் கையிம், ஜுவைனி(1) காளி இயால், போன்ற பெரும் மேதைகளும் இதைத் தடை செய்துள்ளார்கள். இதை அனுமதிக்கின்றவர்களுக்கு எந்த ஆதாரமும் கிடையாது.

4. கப்ருகள் மீது கட்டிடம் எழுப்பல்

கப்ருகள்மீது கட்டிடம் எழுப்பல்; கப்ருகளைத் துணிகளால் மூடுதல், கப்ருகளைச் சுற்றி சுவர்கள் எழுப்பல், கப்ரடியில் விளக்கேற்றல், கப்ருகள்மீது

---

(1) இவர் ஷாபிமத்ஹபில் பிரசித்தி பெற்ற பெரும் இமாம்களில் ஒருவரான இமாமுல் ஹரமைன் என்பவர்களின் தந்தை.

எழுதுதல், கப்ரடியில் சில லெப்பைகளை (பரிபாலகர் கள்) நியமித்தல் போன்றவை ஹராமான விலக்கப் பட்டவையாகும் என இமாம் முஹம்மதவர்கள் கூறினார்கள். மேலும் ஷிர்க்கான சியாரத் என்னும் கப்ரைத் தொட்டு முத்தல், கப்ரடியில் தொழுதல், நன்மையைவேண்டி, தீமையைத் தடுக்க கப்ரிலுள்ள வர்களிடம் வேண்டல் இவை எல்லாம் ஹராமான வையாகும் என்றும் விளக்கினார்கள்.

ஸஹீஹான பல ஹதீஸ்களை ஆதாரமாக வைத்தே இவற்றை இமாம் முஹம்மது கூறினார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: (கப்ருகளை சியாரத் செய்கின்ற பெண்களையும், கப்ருகளில் பள்ளிவாசல்கள் கட்டி விளக்கேற்றுபவர் களையும் அல்லாஹ் லஃனத்து செய்கிறான், (சபிக் கின்றான்).

மேலும் கூறினார்கள் ;

உங்களுக்கு முன்புள்ளவர்கள் அவர்கள் நபிமார் களின் கப்ருகளை பள்ளிவாசல்களாகக் கட்டியதன் காரணத்தால்தான் அவர்களை அல்லாஹ் 'ஹலாக்காக் கினான் (அழித்தான்).

அலீ (ரலி) அவர்கள் (ஹய்யாஜ் அல் அஸதி'' என்பவரிடம் கூறினார்கள்: சிலைகளையும், சமாதிகள் (கப்ருகள்) மீது கட்டப்பட்டுள்ள கூடாரங்களையும், அடித்து உடைத்து தரைமட்டமாக்குமாறு பெருமா னார் முஹம்மது (ஸல்) அவர்கள் எனக்கு கட்டளையிட் டார்கள். எனவே நீவீரும் போய் அவ்வாறு செய்து வாரும்'', எனக் கட்டளையிட்டார்கள்.

இதுபோன்ற சஹீஹான பல ஹதீஸ்களைப் பின்பற்றி கப்ருகள் மீது கட்டப்பட்டுள்ள குப்பாக்

களை உடைக்குமாறு இமாம் முஹம்மது கட்டளை யிட்டார்கள்.

நான்கு இமாம்களான இமாம் மாலிக் (ரலி) இமாம் அபூஹனிபா (ரலி), இமாம் ஷாபியீ (ரலி) இமாம் அஹ்மதுப்னு ஹன்பல் (ரலி) எல்லோரும் மேல்கூறப்பட்ட விஷயங்கள் ஹராமென்றே கூறு கின்றனர்,

மேல் கூறப்பட்டவற்றில் சிலவற்றைச் சிலர் 'கராஹத்' (மக்ரூஹ்) என்று கூறுகின்றனர் ஆனால் கராஹத் என்பது இந்த இடத்தில் "கராஹத்துத் தஹ்ரீமாகும்". ஸலபுஸ் ஸாலிஹீன்கள் ஒன்றை "கராஹத்" (மக்ரூஹ்) என்று கூறுவார்களானால் அது ஹராம் என்ற பொருளையே கொடுக்கும்.

"கராஹத்" என்பது அதை விட்டவனுக்கு நன்மையில்லை, அதைச் செய்பவனுக்கு தண்டனையு மில்லை" என்று பொருள் கொடுப்பது அண்மைக் காலத்தில் புதிதாக வந்தவர்கள் கொடுக்கும் பொருளாகும்.

பொது நிலமாக இருந்தால் நில நெருக்கடியின் காரணத்தால் கப்ருமீது கட்டிடம் கட்டுவது ஹரா மாகும். சொந்த நிலமாக இருந்தால் கட்டிடம்கட்டு வது "கராஹத்"தாகும் என்று சிலர் கூறிக் கொள் வதை ஆதாரமாக எடுக்க முடியாது. ஏனெனில் கப் ரின் மீது கட்டிடம் எழுப்புவதைத் தடை செய்து அவற்றை உடைக்குமாறு வந்துள்ள ஹதீஸ்கள் பொது வானவையாகும். ஆனால் பெருமானார் (ஸல்) அவர் கள் சம்பந்தமாக வந்துள்ள ஹதீஸ்கள் அவர்களைமாத் திரம் குறிக்கும் ஹதீஸ்களாகும், என்பதை அறிதல் அவசியமாகும்.

கப்ருகள் மீது கட்டிடம் எழுப்புவது ஷிர்க்குடைய செயல்கள் நடப்பதற்குக் காரணமாக அமைகின்றது என்பதற்காகவே கப்ருகள்மீது கட்டிடம்எழுப்புவதை பெருமானுர் (ஸல்) அவர்கள் தடை செய்து அவற்றை உடைக்குமாறு கட்டளையிட்டார்களே தவிர பொது நிலம் என்பதற்காக அல்ல என்பதை நினைவிற் கொள்வது அவசியமாகும்.

ஷிர்க்கான செயல்கள் கப்ருகள் மீது நடந்து வருவது எல்லோரும் கண்கூடாகக் காண்கின்ற ஒன்ருகும். எனவே இதை யாரும் மறுக்க முடியாது. இது தர்க்கம் செய்து நிரூபிக்க வேண்டிய விஷயமுமல்ல.

5. அல்லாஹ்வின் திருநாமங்கள் பண்புகளை ஒருமைப்படுத்தல்

அல்லாஹ்வின் திருநாமங்கள், பண்புகளின் ஸஹாபாக்கள், தாபியீன்கள், நான்குஇமாம்கள்முதலியோர் எந்தக் கொள்கையிலிருந்தார்களோ அதே கொள்கையே இமாம் முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் அவர்களின் கொள்கையுமாகும் என்பதை அவர்கள் எழுதிய கடிதங்கள் மூலம் மேலே அறிந்தோம்.

இந்த உண்மையான கொள்கையை ஏற்க எதிரிகள் முன் வரவில்லை. மாருக அவற்றை மாற்றி, வேறு பொருள்கள் கொடுத்து, ஜஹமிய்யாக்களையும், முர்ஜிய்யாக்களையும், குர்ஆன், ஹதீஸிற்குப் பொருந்தாத 'பல்ஸபாக்களையும்' (தத்துவங்களையும்) பின்பற்றினர்.

6 ''பித்அத்'' என்னும் புதுமைகள்

பித்அத் என்னும் புதுமைகளையும்—இஸ்லாமிய மார்க்கத்தில் இல்லாதவற்றைப் புதிதாக உண்டு பண்ணுவதை—இமாம் முஹம்மது கண்டித்தார்கள்.

மௌலூது விழாக்கள் கொண்டாடுவது, பாங்கு சொல்வதற்கு முன் பாங்கு சொல்லப் போவதாகஅறி விக்கும் எதையோ கூறுவது, பாங்கின்பின் சப்தமிட்டு பெருமானார் (ஸல்) அவர்கள்மீது ஸலவாத்துச் சொல் வது, (சப்தமில்லாமல் சொல்லலாம்) நிய்யத்தைசப்த மிட்டுச் சொல்வது[1] ஜும்ஆ தினத்தன்று கதீப் மிம் பரில் ஏறும்போது அபூஹுரைரா (ரலி) அவர்களின் ஹதீஸை ஓதுவது, இவையெல்லாம் ஆதாரமின்றிஇஸ் லாத்தில் புதிதாக உண்டானவை என்பதற்காக இவற்றை இமாம் முஹம்மது கண்டித்தார்கள்.

ஸூபிய்யாக்கள் என்ற பெயரில் மக்களை ஏமாற்றி வழிகெடுக்கும் ஷெய்குமார்களையும், மேலும் பெருமா னார் (ஸல்) அவர்கள் மூலமும், ஸஹாபாக்கள் மூலமும் அறியப்படாத எல்லா "பித்அத்"களையும்கண்டித்தார் கள்.

இமாம் முஹம்மதிற்கு முன் எத்தனையோ பெரும் உலமாக்கள் பித்அத்துக்களைக் கண்டிக்கும் விஷயத்தில் பல நூல்களைக் கோர்வை செய்துள்ளார்கள். இவர் களில் "இப்னு வள்ளாஹ்" "அத்தர்தூஸீ" "அஷ்ஷா திபி" போன்ற பெரியோர்கள் குறிப்பிடத் தக்கவர் களாவார்கள்.

## எதிரிகளும், வஹ்ஹாபி என்ற பெயரும்

'உண்மையான ஏகத்துவக் கொள்கைமீது நம் பிக்கை கொள்ளுங்கள், இறைவனுக்கு இணை வைப் பதையும், அதற்குத் துணையாக இருக்கின்றவற்றையும் பித்அத், அனாச்சாரங்களையும் விட்டு விடுங்கள்,' என

(1) தொழுகையில் நிய்யத்து வைக்கின்றபோது சப்தத்தை உயர்த்தக்கூடாது' மனதிலேயே நிய்யத் செய்ய வேண்டும்.

மக்களை அழைக்கின்றபோது நஜ்து மாகாணத்திலும், மற்ற பல பாகங்களிலுமுள்ள மக்கள் இமாம் முஹம்மதை எள்ளி நகையாடினர். ஏனெனில் இவர்களில் அதிகமானவர்கள் தம் மூதாதைகளிடமிருந்து அனந்தரமாகப் பெற்ற மூடக் கொள்கையில் மூழ்கியிருந்தனர். அம்மூடக் கொள்கையிலேயே சிறுவர்களும், பெரியவர்களும் வாழ்ந்து வந்தார்கள்.

எனவே அப்பழக்க வழக்கங்களை விடுவது அவர்களுக்குப் பெரிதாகத் தெரிந்தது. இமாம் முஹம்மதவர்கள் இம்மூடப் பழக்க வழக்கங்களை விடுமாறு அவர்களை அழைக்கும்போது, அவர்களை இழிவுபடுத்துவதாகவும், அறியாமை, ஷிர்க்கின்பால் அவர்களைச் சேர்ப்பதாகவும், அவர்கள் தாய் தந்தையர்களை எதிர்ப்பதாகவும் தவருகக் கருதினர். குறிப்பாக அறிவுடையவர்களென வாதரீடிய சிலர் இமாம் முஹம்மதின் பிரச்சாரம் உண்மையென அறிந்தும், அதைப் பின்பற்றினுல் பொது மக்களிடம் இருந்துவரும் மதிப்பு போய்விடும், அந்தஸ்து குன்றிவிடுமெனக் கருதி இமாம் முஹம்மதைப் பின்பற்றுவதற்கு மாருக எதிர்த்தனர். இவர்கள் இமாம் முஹம்மதைப் பின்பற்றுபவர்களாஞல் பொதுமக்கள் இவர்களைப் பார்த்து, 'இவர்கள் தங்களை அறிஞர்களெனவும் நேர்வழியின்பால் அழைக்கின்றவர்களெனவும் கூறி தீர்ப்புக்கள் வழங்கி, போதனைகள் புரிந்து வந்தார்களே, இப்போது இவர்களின் அறியாமையும், தவறிய கொள்கையும் வெளியாகி விட்டதே,' எனக் கேவலமாகப் பேசக் கூடும்என்பதற்காகவே உண்மையை மறைத்து, தலைமைப் பதவிகளுக்கு ஆசைப்பட்டு ஷைத்தானிற்கு வழிப்பட்டதால் இமாம் முஹம்மது கூறுவதை ஏற்க மறுத்து அவர்களோடு வீண் தர்க்கங்களும், வாதங்களும் புரிந்

தனர். பொதுமக்களுக்கிடையில் இமாம் முஹம்மதைப் பற்றி தவறிய கருத்துக்களை பரப்பினர். அவர்கள் கொள்கை சரியற்றது, அவர்கள் முஸ்லிம்களுக்கு மாறு செய்கின்றார்கள், நல்லவர்களை மதிப்பதில்லை, எனவே அவர்களைப் பின்பற்றுவது கூடாது, அவரை எதிர்ப்பது அவசியமாகும் என்றெல்லாம் மக்கள் மத்தியில் கூறினார்கள்.

இமாம் முஹம்மதோடு தவறான வாதங்கள் புரிந்து சரியற்ற சந்தேகங்களைக் கிளப்பினர். ஆனால் இறைவன் இமாம் முஹம்மதிற்கு உதவி புரிந்தான். எனவே குர்ஆன், ஹதீஸிலிருந்து பல உறுதியான அசைக்கமுடியாத ஆதாரங்களை எடுத்துக்கூறி, அவர்கள் சந்தேகங்களை முறியடித்தார்கள். இந்த ஆதாரங்களையெல்லாம் அவர்கள் எழுதிய புத்தகங்களிலும், அவர்களுக்குப்பின் வந்த இப்பிரச்சாரத் தலைவர்கள் எழுதிய புத்தகங்களிலும் அதிகம் காணமுடியும்.

வாதத்தில் தகுந்த ஆதாரங்கள் காட்ட முடியாமல் தோல்வியடைந்த இவர்கள் தோல்வியை ஏற்க மறுத்து, இமாம் முஹம்மதின் பிரச்சாரத்திற்குப் பல தடைகள் விதிக்கலானார்கள். எனவே இமாம் முஹம்மதவர்கள் தம் ஆதரவாளர்களுடன் அமீர் மூஹம்மது பின் சவூதுடைய தலைமையின்கீழ் அவர்களோடு பல போர்கள் தொடுத்தார்கள். அறிவுக் களத்தில் ஆதாரம் காட்ட முடியாமல் தோல்வியடைந்த இவ்வெதிரிகள் போர்க் களத்திலும் தோல்வியையே கண்டார்கள். இமாம் முஹம்தின் பிரச்சாரத்தை எதிர்க்க தக்க ஆயுதமில்லையென அறிந்த இப்போலி உலமாக்கள் அவர்கள்மீது இட்டுக்கட்டி பொய்ச் செய்திகளை பரத்தலானார்கள்.

இவர்களில் சிலர் துருக்கியர்களுக்கும், ஹிஜாஸ் மாகான ஷரீப்களுக்கும் கடிதங்கள் எழுதி "முஹம் மதுபின் அப்துல் வஹ்ஹாப் ஐந்தாவது ஒரு புதிய மத்ஹபை உருவாக்கியுள்ளார். பெருமானார் (ஸல்) அவர்களையும், அவ்லியாக்களையும் நேசிப்பதில்லை. ரசூல்லாஹ்வை சியாரத் செய்வதை தடுக்கின்றார். தம் கொள்கையில் உள்ளவர்களைத் தவிர மற்றவர் களை காபிர்களெனக் கூறுகிறார். நான்கு மத்ஹபுகளை ஏற்றுக் கொள்வதில்லை. மத்ஹபு சம்பந்தப்பட்ட நூல்களை அழிக்கத் தூண்டுகின்றார். ரசூலுல்லாஹ் மீது ஸலவாத்துச் சொல்வதைத் தடுக்கின்றார். தலாயிலுல் கைராத்' என்ற புத்தகத்தை எரிக் கின்றார். சவூதி அரேபிய மக்கள் உள்ளத்தைக் கெடுத்து அவர்கள் கொள்கைகளை மாற்றி விடு கின்றார், நம் மூதாதைகளிடமிருந்து அனந்தரமாகப் பெற்றுவரும் பழக்க வழக்கங்களையெல்லாம் மாற்று கின்றார். மக்கள் காலம் காலமாக கண்ணியப்படுத்தி பரக்கத்துத் தேடிவரும் கப்ருகள்மீது கட்டப்பட் டுள்ள குப்பாக்களை உடைக்கின்றார்.' என்றெல்லாம் இட்டுக் கட்டி, இப்பொய்களை மக்கள் மத்தியில் பரவச் செய்தனர். அரசாங்கங்கள் இவர்களைத் தடுக்காமலிருக்குமானால் இப்பிரச்சாரம் அரசையே பாதிக்குமென எச்சரித்து அரசுகளைத் தூண்டி கடிதங்கள் எழுதினர்.

பிரச்சாரத்தின் எதிரிகள் அன்றைய உதுமானிய அரசைப் பாராட்டி, இஸ்லாத்தையும், மக்கா மதீனா பள்ளி வாயில்களையும் அது பாதுகாக்கின்றது என் றெல்லாம் ஏமாற்றி புகழ்ந்து இமாம் முஹம்மதை எதிர்ப்பதற்காக அவ்வரசிடமிருந்து உதவிகள் தேடினர். அவ்வரசின் உதவியுடன் இமாம் முஹம்

மதின் பிரச்சாரத்தை பொய் பிரச்சாரத்தால் தாக்கி அதன் உண்மைகளை மறைத்தனர்.

சுமானில் பலஹீனமடைந்த வெட்கம் குன்றிய இவர்கள் மக்கள் முற்றிலும் இமாம் முஹம்மதை எதிர்க்க வேண்டுமென்பதற்காக "நஜ்து மாகாணத்தவர்கள் பாங்கில் "அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்" என்று கூறுவதில்லை "முஹம்மதுர் ரசூலுல்லாஹ்" என்று தான் கூறுகின்றனர் என்று புத்திக்குப் பொருந்தாத வீண் வதந்திகளைப் பரப்பினர்.

"இருபதாம் நூற்றுண்டில் அரபிய தீபகற்பம்" என்ற நூலில் கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது.

"நஜ்தின் வடபகுதியிலுள்ள ஆட்சியாளர்கள் சவூதி குடும்பத்தினர்களுடன் தர்க்கிக்கும்போது துருக்கியர்களுக்குக் கீழ்கண்டவாறு எழுதினார்கள்.

"லாயிலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரசூலுல்லாஹ்" என்பதை சவூது குடும்பத்தினர் தங்கள் சின்னமாக எடுத்துக் கொண்டார்கள், (அதாவது முஹம்மது என்ற சொல்லிலுள்ள மீம் என்ற எழுத்தைப் போக்கி) இது மாபெரும் பொய் என அறிந்தும் துருக்கியர்களுக்கு வெறுப்பூட்ட வேண்டுமென்பதற்காகவே இவ்வாறு செய்தனர்."

மார்க்கப் பெரும் அறிஞர்கள் ஆலோசனையின்கீழ் இயங்கி வந்த உதுமானிய அரசு அப்பொய் விளம்பரங்களால் சதிக்கப்பட்டது. எனவே பிரச்சாரம் பல பாகங்களிலும் பரந்து, சுவூதி அரசு ஏற்பட்டு அது "அம்மான்" வரை பரந்து சென்று இராக், ஷாம் நாட்டு எல்லைகளையும் அடுத்தபோது, தன் ஏகாதிபத்தியம் அரபு நாட்டை விட்டுப் போய் விடுமோ என உதுமானிய அரசு அஞ்சியது.

குறிப்பாக ஹிஜ்ரீ 1218-ம் ஆண்டு சவூது குடும்பத்தினர் மக்காவை வெற்றி கண்ட பின் துருக்கியர்கள் தங்கள் அரசியல் செல்வாக்கை வைத்து பேனுவையும், ஆயுதங்களை யும் இமாம்முஹம்மதிற்கும், அவர்களைப் பின் பற்றியவர் களுக்கும் எதிராகப் பயன் படுத்தினர்.

இமாம் முஹம்மதை எதிர்த்துப் புத்தகங்கள் எழுதி, அவற்றை மக்கள் மத்தியில் பரப்புமாறு, மார்க்கத்தைப் பற்றிய போதிய அறிவிழந்த போலி உலமாக்களை வேண்டினர். அவ்வாறே இவர்கள் பொய்ப் பிரச்சாரங்களைப் பரத்தினர்.

உதுமானிய அரசு தனது கவர்னராக எகிப்தில் செயல் பட்டுவந்த "முஹம்மது அலீ பாஷா" விற்குக் கடிதம் எழுதி நஜ்து மாகாணத்தவர்களோடு போர் தொடுக்க வேண்டிற்று. அரசின் ஆணையின் கீழ் கவர்னர் தம் மகன் "தூசூன்" என்பவரின் தலைமையின் கீழும், பின் ஹிஜ்ரி 1226-ம் ஆண்டு "இப்ருகீம்" என்ற மகனின் தலைமையின் கீழும் படையைத் திரட்டி நஜ்து மாகாணத்தவர்களோடு போர் புரிய அனுப்பினுர். பல தடவை போரில் தோல்வி கண்ட துருக்கியர்கள் படை, இறுதியாக ஹிஜ்ரி 1233-ம் ஆண்டு வெற்றி பெற்றது. ஹிஜாஸ் மாகாண ஷரீப்கள் துருக்கியர் களுடன் சேர்ந்து இமாம் முஹம்மதின் பிரச்சாரத்தையும், சவூதிகளையும் எதிர்த்தனர். ஆனுல் உண்மைக்கு என்றும் அழிவில்லை என்பதற் கிணங்க சவூதிகள் மக்காவை வெற்றி பெற்ருர்கள். மக்கா வெற்றி பெறுவதற்கு முன் எவ்வாறு துருக்கியர்கள் சவூதிகளை எதிர்த்துப் போர் செய்தார்களோ, அவ்வாறே மக்கா வெற்றியின் பின் இவர்களை எதிர்த்துப் பொய்ச் செய்திகளை எழுதிப் பரத்தினர்.

பிரச்சாரத்தின் மீது ஆத்திரம் கொண்ட துருக்கியர்கள் பொய்கள் நிறைந்த பல புத்தகங்களை இமாம் முஹம்மதை எதிர்த்து எழுதினர். துருக்கியர்களுக்கும், மக்கா ஷரீப் களுக்கும் கையாட்களாக இருந்த உலமாக்கள் இவர்களுக்கு ஆதரவாக இருந்து பொய்யான பலஹீனமான ஹதீஸ்களையும் கட்டுக் கதைகளையும் ஆதாரமாக வைத்து, இமாம்

முஹம்மதின் பிரச்சாரத்தைத் தாக்கி அவர்களை 'காரிஜிய்யா' கூட்டத்தைச் சார்ந்தவர்கள் என்றும் கூறினார்கள்.

'சைனி தஹ்லான்' என்பவர் தம் 'அத்துர்ருச்சனிய்யா' ''அல்புதூஹாத்துல் இஸ்லாமிய்யா'' என்ற புத்தகங்களில் ''காரிஜிய்யா'' வகுப்பினர்கள் மீது கூறப்பட்டுள்ள ஹதீஸ்களை இமாம் முஹம்மது மீது கூறுவது அறியாமையாகும். மக்கள் இப்பிரச்சாரத்தை ஏற்கக் கூடாது என்பதற்காகவே இவ்வாறு செய்தனர்''!

இமாம் முஹம்மது பின் அப்துல்வஹ்ஹாபின் பிரச்சாரத்தை பின் பற்றுகின்றவர்களுக்கு ''வஹ்ஹாபி'' என்ற பெயர் சூட்டப்பட்டது. துருக்கியர்களின் பிரசசாரங்களில் மிக முக்கியமானதாகும்(1)

ஸலபுஸ்ஸாலிஹீன்களைப் பின் பற்றுகின்றன இப்பிரச்சாரத்திலுள்ளவர்களை மத்ஹபுகளை விட்டும் வெளியானவர்கள், பெருமானார் (ஸல்) அவர்களை நேசிக்காதவர்கள் எனவும் வதந்தியை மக்கள் மத்தியில் பரப்பி, அவர்கள்

---

(1) இவ்வாறு இவர்கள் சூட்டிய பெயர் தவறானதும். முறையற்றதுமாகும். இப்பிரச்சாரத்தைப் பின்பற்றுகின்றவருக்கு ஒரு பெயர் வைக்க வேண்டுமானால் ' முஹம்மதீ'' என்றே வைக்க வேண்டும். ஏனெனில் இப்பிரச்சாரத்தை உருவாக்கியவர் பெயர் முஹம்மது. அவர் தந்தை பெயர் அப்துல் வஹ்ஹாப், இப்பிரச்சாரத்தை ஆரம்பித்தது அப்துல் வஹ்ஹாபல்ல.

வியப்பிற்குரிய தென்னவெனில் நஜ்து வாசிகளும், சவூதியர்களும் வஹ்ஹாபி என்ற பெயரை வெறுக்கின்றனர். இப்பெயர் அவர்கள் மத்தியில் புகழப்படவில்லை. இப்பிரச்சாரத்தின் எதிரிகளால் உண்டாக்கப்பட்டதே இப்பெயர் என்பதை இதிலிருந்து அறிய முடியும். அன்று பிரச்சாரத்திற்கு எதிரிகளாக இருந்த துருக்கியர்களும், மக்கா ஷரீபுகளுமே இந்த தப்புப் பெயரை பரத்தினர்.

(இது குர் ஆன், ஹதீஸின் அடிப்படையில் இயங்கும் பிரச்சாரமே தவிர வஹ்ஹாபி என்ற பெயரில் உருவாக்கப்பட்டதல்ல என்பதை அறிவது அவயசிமாகும்)

பிரச்சாரத்தைப் பின்பற்ருமலிருக்கவும்; துருக்கியர்கள், மக்கா ஷரீபுகள் ஆதிக்கம் நிலைத்து, சவூதிகள் செல்வாக்கு வளராமலிருக்கவுமே இவ்வாறு பொய்களை இட்டுக் கட்டினுர்கள்.

உண்மையான பெயரைக் கூறிஞல் மக்கள் பின்பற்றி விடுவார்கள் என்பதற்காகவே துருக்கியர்கள் இம்மாற்றுப் பெயர் சூட்டினர்.

ஆனுல் இறைவன் எதிரிகளுடைய சதியை விட்டு இப் பிரச்சாரத்தைக் காப்பாற்றி, அவர்கள் எண்ணத்திற்கு மாருக உலகெங்கும் பரவச் செய்தான். அதிகமான மக்கள் இதன் உண்மையை அறிந்தார்கள். இது குர்ஆன் ஹதீ ஸிற்கு அப்பாற்பட்டதல்ல என்பதை உணர்ந்து, அதிகமான வர்கள் இதை ஏற்ருர்கள். பலர் அதைப் பற்றிப் புத்தகங் கள் எழுதி அதை எதிர்ப்பவர்களைத் தடுத்தனர்(1)

நாட்கள் செல்லச் செல்ல, இப்பிரச்சாரம் விரிவடைந்து சக்தி பெற்றது. அல்லாஹ் துருக்கியர்கள், மக்கா ஷரீப்கள் அரசை அவர்கள் கையைவிட்டு மாற்றினுன்.

''அப்துல் அஜீஸ் பின் அப்துர் ரஹ்மான் (ரஹ்) என்பவரின் தலைமையின்கீழ் சவூதி அரசை அல்லாஹ் மீண்டும் உருவாகச் செய்தான். அவ்வரசின் ஆதிக்கம் நஜ்து, ஹிஜாஸ், அஸீர் போன்ற மாகாணங்களில் நடந்து வந்தது. பொது மக்கள் பொய் எது மெய் எது என்பதை உணர்ந்தனர்.

''வஹ்ஹாபி'' என்ற பெயர் சூட்டுவதால் இமாம் முஹம்மதிற்கும், அவர்களைப் பின்பற்றுகின்றவர்களுக்கும் மக்கள் மத்தியில் இழிவு ஏற்படுமென எதிரிகள் கருதினுர்கள். ஆனுல் இன்று குர்ஆன், ஹதீஸின் ஆதாரத்தின் அடிப்படை யில் அமல் செய்து, நல்லதை ஏவி, தீயதை விலக்கி, 'பித் அத்'களையும், அனுச்சாரங்களையும் ஒழித்து ஸலபுஸ்ஸாலி ஹீன்களைப் பின்பற்றுகின்ற ஒவ்வொருவருக்கும் 'வஹ் ஹாபி'' என்ற பெயர் ஆகிவிட்டதைக் காண்கின்றேம்.

---

(1) ஸியானத்துல் இன்ஸான்'' ''நைலுல் அமானி போன்ற நூல்களை எழுதியவர்கள்.

இன்று அனுச்சாரங்களையும், 'பித்அத்'களையும் எதிர்க்கின்ற ஒவ்வொருவரையும் ''நீ வஹ்ஹாபி'' என்று அழைப்பதைக் காண்கின்றோம். குர்ஆன், ஹதீஸைப் பின்பற்றி அதன்பால் மக்களை அழைக்கின்றவர்களுக்கும், ஸலபுஸ்ஸாலிஹீனகளைப் பின்பற்றி, ஏகத்துவத்தின்பால் அழைக்கின்றவர்களுக்கும் இப்பெயர் கிடைப்பது பெருமைக்குரியதுதான்.

ஷெய்கு இம்ரான் என்பவர் தம் ஒரு கவிதையில் கூறுகின்றார்.

''பெருமானார் (ஸல்) அவர்களைப் பின்பற்றுகின்றவருக்கு ''வஹ்ஹாபி'' என்ற பெயர் சூட்டப்படுமானால் அப்பெயரை எனக்கு நான் சூட்டிக் கொள்வதில் பெருமைப் படுகிறேன்''.(1)

அறிவாளிகளெனவும், மார்க்கத்தில் அதிகப் பற்றுடையவர்களெனவும், பெருமானார் (ஸல்) அவர்களையும், அவ்லியாக்களையும் அதிகம் நேசிக்கின்றவர்களெனவும் தங்களை வெளிப்படுத்திக் கூறிக்கொள்ளும் சில போலி உலமாக்கள் பிரச்சாரத்தை எதிர்த்துப் புத்தகங்கள் எழுதினர்.

பொதுமக்களிடையில் தலைவர்களாகவும், பெரியவர்களாகவும் ஆகி, துருக்கிய அரசர்கள் அன்பைப் பெற்று, பொருள் திரட்ட வேண்டுமென நினைத்த இவர்கள் தங்கள் ஆசையில் தோல்வி கண்டார்கள். அவர்கள் எழுதிய புத்தகங்களுக்கு எந்த மதிப்புமில்லாமலாகி விட்டது. சில அறிவீனர்களைத் தவிர வேறு யாரும் அப்புத்தகங்களை பற்றி அறிவதில்லை.

அறிவு தேடி அலையும் எல்லா பாகங்களிலுமுள்ளவர்களின் உள்ளங்கள் ஒளிபெற்றன. எனவே இமாம் முஹம்மதைப் பற்றியும, அவர்களைப் பின்பற்றியவர்கள் பற்றியும் தவருகப் புத்தகங்கள் எழுதியவர்கள் அறிவற்றவர்கள் என்பதை உணர்ந்தனர்.

---

(1) கவியின் சுருக்கம் இங்கு கூறப்பட்டுள்ளது.

இதன் உண்மைகளை அறியக் கீழ்க்காணும் புத்தகங்களை படித்துப் பாருங்கள்;

''சைனி தஹ்லான்'' என்பவர் எழுதிய ''அத்துர்ருஸ் ஸனிய்யா'' என்றபுத்தகத்தையும் 'சியானத்துல் இன்ஸான்' என்ற புத்தகத்தையும் ஒன்றிணைத்துப் பாருங்கள்,

''ஷலாஹிதுல் ஹக்''(1) ''காயத்துல் அமானி''(2)என்ற நூல்களையும், நஜ்து வரலாற்றைப் பற்றி இஸ்லாமியர்களும், மேலைநாட்டு மாற்றுச் சமூகத்தவர்களும் எழுதிய நூலகளையும் படித்துப் பாருங்கள்.

## இமாம் முஹம்மதை எதிர்க்க காரணமாக இருந்தவை

1. அன்று உலகின் எல்லா பாகங்களிலும் வாழ்ந்து வந்த இஸ்லாமியப் பொதுமக்கள், அன்றைய துருக்கியர் ஆட்சியை இஸ்லாமிய கிலாபத் ஆட்சி என்று கருதினர். தவிர, அவ்வரசு தான் இஸ்லாமிய ஷரீஅத்துச் சட்டத்தைப் பாதுகாத்து, அதை உலகெங்கும் பரத்தி, அதன் எதிரிகளோடு போர்புரியும் ஒரே அரசென நினைத்தனர். எனவே அவ்வரசு இமாம் முஹம்மதின் பிரச்சாரத்தை எதிர்த்துப் படைகளை அனுப்பி சவூதிகளோடு போர் புரிந்தபோது அதற்கு ஆதரவாக இருந்தனர்.

2. போலி உலமாக்கள் இமாம் முஹம்மதையும் அவர்கள் பிரச்சாரத்தையும் இழிவாக விளம்பரம் செய்த போது சிறிய உலமாக்களும், பொது மக்களும் அதை உண்மையெனக் கருதி அவர்களும் எதிர்த்தனா.

---

(1) ''நபஹானி'' என்பவர் இந்த புத்தகத்தை எழுதினார்

(2) ''ஷவா ஹிதுல் ஹக்'' என்ற புத்தகத்தை மறுத்து ''மஹ்மூது அக்ரி ஆலூசி'' என்பவர் இந்தப் புத்தகத்தை எழுதினார்.

3. புனித கஃபாவிற்கு ஹஜ் செய்வதற்காக வருகின்றவர்கள் மக்காவிலும், மதீனாவிலுமுள்ள உலமாக்கள் பிரச்சாரத்தைப்பற்றிக் கூறும் பொய்களையெல்லாம் உண்மையென நினைத்தனர். ஹஜ்ஜிற்கு வருகின்றவர்களில் பெரும்பாலானவர்கள், புனித பூமியிலே வாழ்கின்ற உலமாக்கள் மேன்மைக்குரியவர்கள், பொய் சொல்லமாட்டார்கள் என்ற எண்ணமுடையவர்களாக இருந்ததால் அவர்கள் கூறுவனவற்றை ஆராயாமல் உண்மையென நம்பினர்.

இமாம் முஹம்மதும், அவர்களைப் பின்பற்றுகின்றவர்களும் அவ்லியாக்கள், நல்லவர்கள் கப்ரை மதிப்பதில்லை. கப்றுகள் மீது எழுப்பப்பட்டுள்ள கூடாரங்களை உடைக்கின்றார்கள். கப்ருகளை தரிசிப்பதை தடுக்கின்றார்கள். பெருமானார் (ஸல்) அவர்களை நேசிப்பதில்லை. நம்மில் ஒருவரின் கைத்தடி முஹம்மது (ஸல்) அவர்களை விடப் பயனுள்ளது என்று சொல்கிறார்கள், அவர்களை சியாரத்துச் செய்வதை தடுக்கின்றார்கள், என்றெல்லாம் பொய்களை ஹாஜிகள் மத்தியில் பரப்பினர். இதனால் பொது மக்களிடையில் தப்பெண்ணம் பரவியது. எனவே இப்பிரச்சாரம் உண்மைக்கு மாறானதென அன்றைய மக்கள் நினைக்கலானார்கள். ஆனால் இன்று மக்கள் சிந்திக்கும் ஆற்றல் பெற்றவர்களாக மாறி உண்மையை உணர்ந்த போது மேல் கூறப்பட்டவை உண்மைக்குப் புறம்பானவை என்பதை அதிகமானவர்கள் அறிந்தார்கள்.

இப்பிரச்சாரத்தைப் பற்றிச் சிறிதேனும் அறிந்தவர்கள் இமாம் முஹம்மதும், அவர்களை பின்பற்றியவர்களும் தான் பெருமானார் (ஸல்) அவர்களை கண்ணியப்படுத்தி. அவர்களை அதிகமாக நேசிக்கின்றனர் என்பதைத்தெரிந்து கொண்டவர்கள் குர்ஆனையும், பெருமானார் (ஸல்) அவர்கள் வாழ்க்கை முறைகளையும் செயல் முறையில் இவர்கள் நடத்திக் காண்பிப்பது இவர்கள் பெருமானார் (ஸல்) அவர்களை அளவு கடந்து நேசிக்கின்றார்கள் என்பதற்கு தகுந்த ஆதாரமாகும். பெருமானார் (ஸல்) அவர்கள் காட்டிச் சென்ற வாழ்க்கைத் திட்டத்திற்கு மாற்றம் செய்வதை இவர்கள் விரும்பவில்லை

பெருமானுர் (ஸல்) அவர்கள் சொல், செயல், பாவனை யிலில்லாத "பித்அத்" என்னும் புதுமைகளை இஸ்லாமிய சமுதாயம் பின்பற்றுமானுல் அதை உடனே துணிவுடன் கண்டிக்கின்றனர், ஏனெனில்.

"மார்க்கத்தில் இல்லாத பித்அத் என்னும் புதுமைகளை யாராவது உண்டு பண்ணுவார்களானுல் அதனுல் ஏற்படும் தீங்குகள் அனைத்தும் அவர்களையே சாரும்.

"மார்க்கத்தில் உண்டாகின்ற ஒவ்வொரு புதுமையும் வழி கேடானதாகும்" என்று பெருமானுர் முஹம்மது (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

இஸ்லாத்தில் இல்லாத புதுமைகளைக் கண்டிக்கின்ற இவர்கள், பெருமானுர் அவர்களை உண்மையாக நேசிக்கின்ற வர்களா? அல்லது அவர்கள்மீது புகழ்மாலை பாடி, அவர்கள் பெயரைச் செவியுறும்போது அவர்கள்மீது ஸலவாத்துக் கூறிவிட்டு அதே நேரத்தில் அவர்கள் காட்டிய வழிமுறை களைப் பின்பற்றுமல், பித்அத்துகள், அனுச்சாரங்களைப் புரிந்து, மனம்போன போக்கில் வாழ்ந்துவிட்டு, 'நாங்கள் பெருமானுர் (ஸல்) அவர்களை நேசிக்கின்ரேம்' என்று வாய ளவில் கூறிக் கொள்கின்றவர்கள் உண்மையாகப் பெருமா னுர் (ஸல்) அவர்களை நேசிக்கின்றவர்களா? என்பதைச் சீர் தூக்கிப் பாருங்கள்.

எனவே இவற்றைப் படிக்கின்றவர்களே சீர்தூக்கிப் பார்த்துச் செயல்பட்டு. யார் நேர்வழியில் இருக்கின்ருர்கள், யார் தவறிய வழியில் இருக்கின்ருர்கள் என்று நேர்மையான தீர்ப்பு வழங்குங்கள். அல்லாஹ் ஹிதாயத் அளிப்பவனும் தவ்ஃபீக் செய்பவனுமாக இருக்கின்ருன்.

## இமாம் முஹம்மதுடைய மகன் அப்துல்லாஹ் என்பவர் எழுதிய கடிதத்தில் வந்தவை[1]

ஹிஜ்ரீ 1218ம் ஆண்டு இமாம் சவூது, மக்காவை வெற்றிகண்டு, அதில் பிரவேசித்தபோது அவர்களின் கொள்

(1) இந்த கடிதம் "அல் ஹதிய்யத்துஸ்ஸனிய்யா" வத் துஹ்பதுல் வஹ்ஹாபிய் யத்துந் நஜ்திய்யா" என்ற நூலில் உள்ளது இது ஐந்து சிறு புத்தகங்கள் கொண்ட ஒருநூலா கும். இதை ஷெய்கு சுலைமான் பின் சஹ்மான் என்பவர் திரட்டினுர்.

கையைப் பற்றிக் கேட்டிருந்தவர்களுக்கு இமாம் முஹம்மதுடைய மகன் அப்துல்லாஹ் என்பவர் எழுதிய கடிதத்தில் வந்தவை :

அல்லாஹ்வின் அருளால் நாங்கள் எல்லோரும் ஏகத்துவக் கொள்கையுடையவர்களாவோம், அதை நிலைநாட்டவே போர் புரிகின்றோம். ஹிஜ்ரி 1218ம் ஆண்டு முஹர்ரம் மாதம் எட்டாம் நாள் சனிக்கிழமை நடுப்பகலில் மக்காவை வெற்றி கண்டோம். அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும், மக்கா ஷரீப்களும், அதன் உலமாக்களும், பொதுமக்களுமே இந்தப் போருக்குக் காரணமாக இருந்தார்கள்.

ஹாஜிகளின் தலைவர்கள், மக்கா அமீர், மக்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து இமாம் சவூதோடு போர் செய்ய வேண்டும், அல்லது கஃபதுல்லாவில் வரவிடாமல் தடுக்க வேண்டுமென்பதற்காக ஒன்று திரண்டனர். ஆனால் ஏகத்துவக் கொள்கையுடையவர்களான சவூதின் படையை இவர்கள் கண்டபோது, அவர்கள் உள்ளங்களில் பயத்தை அல்லாஹ் ஏற்படுத்தினான். எனவே இங்கும், அங்குமாகச் சிதறுண்டு போய்விட்டனர். திரும்பிச் செல்வதே பெரிய பாக்கியம் என ஒவ்வொருவரும் நினைத்தனர்.

இமாம் சவூது கஃபாவினுள் நுழையும்போது அதில் உள்ள எல்லோருக்கும் பாதுகாவல் அளித்தார்கள். "தல்பிய்யா(1) என்னும் எங்கள் கோஷங்களை முழக்கிக்கொண்டு பாதுகாவல் பெற்றவர்களாக, தலைமுடி இறக்கியவர்களாகவும், முடியை வெட்டியவர்களாகவும், அல்லாஹ்வைத்தவிர வேறு யாருக்கும் அஞ்சாதவர்களாகவும் கஃபாவில் நுழைந்தோம்." எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. படைகள் அதிகமாக இருந்தபோதிலும் கஃபாவில் நுழையும்போது மிக மரியாதையாகவும், அமைதியாகவும் நுழைந்தார்கள்; இவர்கள் கஃபாவிலுள்ள மரங்களை வெட்டவோ, உயிர்ப் பிராணிகளை விரட்டவோ செய்யவில்லை. குர்பானியையும், அல்

---

(1) தல்பிய்யா : லப்பய்க அல்லாஹும்ம லப்பய்க என மொழிதல்

லாஹ்வினுல் அனுமதிக்கப்பட்டதையும் தவிர மற்ற எந்த உயிர்ப் பிராணிகளையும் அறுக்கவில்லை.

நாங்கள் உம்ருச் செய்து முடித்தபின் ஞாயிற்றுக்கிழமை காலையில் மக்களை ஒன்று சேர்த்து, அமீர் சஊது உலமாக்களுக்குக் கூறினுர்.

''அல்லாஹ் ஒருவனை மாத்திரமே வணங்க வேண்டும் என்பதையே மக்களிடமிருந்து நாங்கள் எதிர்பார்க்கின்ருேம் அதற்காகவே போர் புரிகின்ருேம். எங்களுக்கும் மக்களுக்குமிடையில் இரண்டு விஷயத்தில் மாத்திரமே வேறுபாடுகள் உள்ளன.

1. அல்லாஹ் ஒருவனுக்கு மாத்திரமே வணக்க வழியாடுகள் செய்ய வேண்டும், இந்த வணக்க வழிபாடுகளின் வகைகளையும், துஆ என்பது வணக்கமாகும் என்பதையும் அறிய வேண்டும்.

பெருமானுர் முஹம்மது (ஸல்) அவர்கள்மீது இஸ்லாத்தின் ஏனைய நான்கு பெரும் கடமைகளை அல்லாஹ் விதிப்பதற்குமுன், பல ஆண்டுகள் மக்களை ஏகத்துவக் கொள்கையின்பாலும், ஷிர்க்கை விட்டுவிடுமாறுமே அழைத்தார்கள், அதற்காகவே போரும் புரிந்தார்கள். எனவே, அந்த ஷிர்க்கின் பொருளை உணர்வது, என்பன போன்றவற்றைத் தெரிந்து கொள்ளும் விஷயத்தில் எங்களுக்கும் மற்றவர்களுக்குமிடையில் வேறுபாடு உள்ளது.

2. மக்கள் மத்தியில் பெயரளவில் மாத்திரம் ''நல்லதை ஏவி தீயதை தடுக்க வேண்டும்,'' என்றிருக்கிறதே தவிர, அதைச் செயலளவில் செய்து காட்டுவதில்லை. இவ்விஷயத்திலும் எங்களுக்கும் மற்றவர்களுக்குமிடையில் வேறுபாடு உள்ளது.

இவ்வாறு கூறியதும், நாங்கள் இருந்துவரும் கொள்கை சிறந்ததென மக்கள் ஒப்பி, நாங்கள் கூறுபவற்றை ஏற்று குர்ஆன், ஹதீஸைப் பின்பற்றுவதன்மீது அமீர் சஊதிடம் பைஅத்துச் செய்தார்கள்.

அதை அமீர் சவூது ஏற்று அவர்களிடமிருந்து ஏற்பட்ட தவறுகளை மன்னித்தார்கள். அவர்களில் யாருக்கும் எந்தத் தொல்லைகளும் ஏற்படவில்லை. அமீர் சவூது மக்களோடும், குறிப்பாக உலமாக்களோடும் மிக இரக்க சிந்தனையோடு நடந்து கொண்டார்கள். அவர்கள் கூட்டமாகவும், தனியாகவும் இருக்கும் போதெல்லாம் எங்கள் கொள்கையின் ஆதாரங்களை எடுத்துக்கூறி வந்தார்கள். உண்மையை விளக்குவதிலும், ஆதாரங்களை எடுத்துக் கூறுவதிலும் ஒருவருக்கொருவர் நஸீஹத்துச் செய்துகொள்ளவேண்டும் என்றும் வேண்டினார்கள்.

'நாங்கள் காட்டிய ஆதாரங்களுக்கு தெளிவுரையாக குர்ஆன், ஹதீஸிலிருந்து எடுத்துக் கூறுவார்களானால், அதை நாங்கள் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கின்றோம்' என அமீர் சவூது மக்கள் கூட்டத்தில் சொன்னதை அவர்களுக்கு எடுத்துரைத்தோம் :

'' என்னுடைய சுன்னத்தையும் எனக்குப்பின் நேர்வழி பெற்ற குலபாக்களின் சுன்னத்துக்களையும் பின்பற்றுவது உங்கள்மீது கடமையாகும்.''

என்ற பெருமானார் (ஸல்) அவர்களின் கட்டளைக்கிணங்க குலபாவுர் ராஷிதீன்களின் வாழ்க்கை வரலாற்றிலிருந்து கூறப்படும் ஆதாரங்களையும் ஏற்றுக் கொள்வோம்.

''உங்களில் சிறந்தவர்கள் என்னுடைய நூற்றாண்டில் உள்ளவர்கள். பின் அதற்கு அடுத்த நூற்றாண்டில் உள்ளவர்கள். பின் அதற்கு அடுத்த நூற்றாண்டில் உள்ளவர்கள் என்ற பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களின் பொன்மொழிக்கிணங்க நான்கு பெரும் இமாம்களிடமிருந்து மூன்றாம் நூற்றாண்டு வரை கல்வி பெற்றவர்கள்மூலம் கூறப்படுகின்ற தெளிவுரைகளையும் ஏற்றுக் கொள்வோம்.

மேலும் மக்களுக்குத் தெரியப்படுத்தினோம்: 'உண்மை எங்கு இருப்பினும் அங்கே நாங்களுமிருப்போம்; நாங்கள் வெளிப்படையான தெளிவான ஆதாரங்களைப் பின்பற்றுவோம். இவ்வாறு எங்களுக்கு ஆதாரங்கள் கிடைக்கும்

போது இவற்றுக்கு மாருக எங்களுக்குமுன் உள்ளவர்கள் சொல்லியிருப்பார்களாஞல் அதை நாங்கள் எதிர்ப்போம்."

தம் நீண்ட கடிதத்தின் இறுதியில் குறிப்பிடுகின்ருர்கள்:

நாங்கள் ஷரீஅத்தின் பிரிவுச் சட்டங்களில் இமாம் அஹ்மதுப்னு ஹன்பல் (ரலி) அவர்களின் மத்ஹபையே பின்பற்றுகிறேம். நான்கு பெரும் இமாம்களைப் பின்பற்று வதை நாங்கள் மறுக்கவில்லை. அவர்களைப் பின்பற்றுகின்ற வர்களைத் தடுக்கவுமில்லை. மாருக இந்த நான்கு மத்ஹபு களில் ஒன்றைப் பின்பற்றுவதை வற்புறுத்துகின்ருேம். இந் நான்கு மத்ஹபுகளைத் தவிர வேறு ராபிலா, சைதிய்யா, இமாமிய்யா, போன்ற மத்ஹபுகள் இமாம்களால் ஏற்றுக் கொள்ளப்படாமையால் அவற்றைப் பின்பற்றக் கூடாது. எனவே தவருன இந்த மத்ஹபுகளில் எதையும் நாங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டோம்; நான்கு மத்ஹபுகளில் ஒன்றையே பின்பற்றுமாறு அவர்களை வற்புறுத்துகின்ருேம்.

குர்ஆன், ஹதீஸிலிருந்து நேரடியாகச் சட்டங்களை எடுக்கின்ற அந்தஸ்தை நாம் எவரும் பெறவில்லை. எனவே "தான் அதற்குத் தகுதியுடையவன்" என யாரும் வாதாட முடியாது. இருப்பினும், நாம் பின்பற்றும் மத்ஹபில் சில மஸ்அலாக்களின் ஆதாரம் பலஹீனமானதாக இருந்து, வேறு மத்ஹபுடைய தீர்ப்பு உறுதியான ஆதாரமுடையதாக இருக்குமாஞல் அதை எடுத்துச் செயல் பட வேண்டும். அதாவது எந்த மத்ஹபில் உறுதியானஆதாரமிருக்கின்றதோ அந்த மத்ஹபின் தீர்ப்பைப் பின்பற்றிச் செயல்பட வேண்டும்.

உதாரணமாக:

ஹனபி மத்ஹபு தீர்ப்புப்படி தொழுகையில் ருகூஉ, ஸுஜூதுக்கிடையிலுள்ள நிலையில் சிறிது தரிபட வேண்டு மென்பது பர்ளு இல்லை. ஆஞல் மற்ற மத்ஹபுகளில் அது பர்லாகும்; பர்ளு என்பதற்கு உறுதியான பல ஆதாரங்கள் உள்ளன; எனவே ஹனபிகள் இந்த மஸ்அலாவில் மற்ற மத்ஹபுடைய தீர்ப்பைப் பின்பற்ற வேண்டும்.

அதே நேரத்தில் ஷாபியீ மத்ஹபில் 'பிஸ்மில் லாஹ்வை', சப்தமிட்டு ஓதுவது சுன்னத்தாகும். மற்ற மத்ஹபுகளில் அது சுன்னத்தல்ல. இம்மஸ்அலாவில் ஷாபீயீ கள் மற்ற மத்ஹபுடைய தீர்ப்புப்படிச் செயல்பட வேண்டு மென கூறுவதில்லே. ஏனெனில் இருதரப்பிலுமுள்ள ஆதா ரங்கள் ஒரே அந்தஸ்தைப் பெற்றுள்ளன.

மேலும் மேற்சொன்ன இருமஸ்அலாக்களுக்கு மிடையில் பெரிய பாகுபாடு இருக்கின்றது. 'பிஸ்மியை' வெளிப்படை யாக ஓதுவதென்பது சுன்னத்தான ஒரு செயல்; ஆனல் ருகூஃ ஸுஜூதிற் கிடையில் தரிபடுவது பர்லான ஒரு செயலாகும்.

உறுதியான ஆதாரமுள்ள மத்ஹபைப் பின்பற்றுமாறு கூறுகின்றேம். இவ்வாறு ஒருமத்ஹபுடைய ஆதாரத்தை விட மற்ற மத்ஹபுடைய ஆதாரம் உறுதியாக இருப்பது மிகக் குறைந்த சட்டங்களிலேயாகும்.

சில மஸ் அலாக்களில் மாத்திரம் 'இஜ்திஹாது செய்வதில் எந்தத் தவறுமில்லே; இவ்வாறு செய்வதால் அவர் முஜ்தஹிது என்று கூற முடியாது.

சில இமாம்கள் சில சட்டங்களில் தம் மத்ஹபை விட்டு விட்டு வேறு மத்ஹபைப் பின்பற்றினுர்கள் என்பதற்குப் பல ஆதாரங்கள் உள்ளன.

திருக்குர்ஆனே விளங்குவதற்கு இப்னு ஜகீர், இப்னுகதீர், பகவி, பைளாவி, காஸின், ஜலாலேன், ஹத்தாது போன்ற வர்களின் தப்ஸீர்களேயும், ஹதீஸ்களே விளங்குவதற்கு பெரும் இமாம்களான இப்னு ஹஜர் அஸ்கலானி, நவவி, மனுவி போன்ற பெரியார்கள், அரும்பெரும் ஹதீஸ் கிரந்தங் களேத் தொகுத்தவர்கள். மற்ற ஹதீஸ் கலேவல்லுனர்கள் இயற்றிய விளக்கவுரைகளேயும் பயன்படுத்துகின்றேம்.

எல்லாத் துறைகளிலும் இயற்றப்பட்ட புத்தகங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கின்றேம். இமாம்கள் எழுதிய எல்லா அறிவுக் கலேகளேயும், குறிப்பாக அருபெரும் ஹதீஸ் தொகுப்புகளேயும், அவற்றின் விளக்கவுரைகளேயும் படிப்ப தில் மிகப் பேராசையுடையவர்களாக இருக்கின்றேம்.

அவற்றில் எதையும் அழிக்க வேண்டுமென நாங்கள் கூற வில்லை. ஆனால் இஸ்லாமிய ஏகத்துவக் கொள்கைக்கு முரண் பட்ட அக்கொள்கையைப் பாதிக்கின்ற ''ரவ்லுர்ரை யாஹீன்'' போன்ற சில புத்தங்களையும் கொள்கையில் குழப்பத்தை உண்டுபண்ணுகின்ற தர்க்க சாஸ்திரம் போன்ற சில கலைகளையும் படிக்கத் தடை போடுகின்றோம். ஏனெனில் சில இமாம்கள் இவற்றைப் படிப்பது விலக்கப்பட்டதெனத் தீர்ப்பு வழங்கியுள்ளனர். இப்புத்தகங்கள் எங்கே என்று நாங்கள் தேடி நடப்பதில்லை. முரண்டு பிடித்து அவற்றை வெளிப்படுத்துவார்களானால் அவற்றை அழிப்போம்.

சில காட்டரபிகள் தாயிப் என்ற ஊர் வாசிகளின் சில புத்தகங்களை அழித்தார்களென்றால் அது அவர்கள் மடமை யின் காரணத்தால் ஏற்பட்டதாகும். இதுபோன்ற தவறான செயல்களைப் புரிவதைவிட்டும் அவர்களும், மற்றவர்களும் எச்சரிக்கப்பட்டார்கள்.

நாங்கள் அரபிகளை அடிமையாக்குவதை அனுமதிக்க வில்லை. அதை நாங்கள் ஒருபோதும் செய்யமாட்டோம். அரபிகளைத் தவிர வேறு யாருடனும் நாங்கள் போர் செய்ய வில்லை. பெண்களையும் சிறியவர்களையும் போரில் கொலை செய்வதை நாங்கள் அனுமதிக்கவில்லை.

ஆனால் சிலர் உண்மையை மறைத்து, மக்கள் மத்தியில் குழப்பம் உண்டுபண்ண வேண்டுமென்பதற்காக எங்கள்மீது இட்டுக்கட்டி '' குர் ஆனிற்கு எங்கள் கருத்துப்படி பொருள் கொடுக்கின்றோம்; எங்கள் அறிவிற்குப் பொருந்திய ஹதீஸ் களை மட்டும் எடுக்கின்றோம்; அதன் விளக்க உரைகளை பார்ப்பதில்லை' என்றும், 'நாங்கள் பெருமானார் (ஸல்) அவர் களை மதிப்பதில்லை; அவர்கள் கப்ரில் அழிந்துவிட்டார்கள். நம்மில் ஒருவரின் கம்பு அவர்களைவிடச் சிறந்ததெனக் கூறுகின்றோம். அவர்களின் ஷபாஅத்தை மறுக்கின்றோம். அவர்கள் கப்ரை தரிசிப்பது சுன்னத் அல்ல எனக் கூறுகின் றோம்' என்றும், பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ''லாயி லாஹ இல்லல்லாஹ்'' என்ற கலிமாவின் பொருளை அல்லாஹ்

அறிவித்துக் கொடுப்பதற்குமுன் அக்கலிமாவின் பொருள் தெரியாமலிருந்தார்கள் என்று நாங்கள் கூறுகின்றோம் என்றும்: (முஹம்மதே! வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் வைத் தவிர வேறு யாருமில்லை என்பதை அறிந்து கொள்வீராக என்ற வசனம் மதீனாவில் இறங்கியதாகும்) நாங்கள் இமாம்களின் கருத்துகளை எடுப்பதில்லை. மத்ஹபுகள் சம்பந்தமான நூல்களை அழிக்கின்றோம். அவற்றில் தவறுகள் இருக்கின்றன என நாங்கள் கூறுகின்றோம். நாங்கள் அல்லாஹ்வில் உருவத்தை ஏற்படுத்துகின்றோம். எங்கள் கொள்கையில் உள்ளவர்களைத் தவிர, ஆறும் நூற்றாண்டிற்குப் பின்னுள்ள எல்லோரையும் காபிர்கள் எனக் கூறுகின்றோம் என்றெல்லாம் எங்கள்மீது வீண் பொய்களை இட்டுக் கட்டுகின்றனர்.

மேலும் எங்களிடம் எவரேனும் பைஅத்துச் செய்ய விரும்பினால், அவர் இதற்குமுன் ஷிர்கில் இருந்து வந்ததாக ஏற்றுக் கொண்ட பின்புதான் பைஅத்துச் செய்கின்றோம்; பெருமானார் (ஸல்) அவர்கள்மீது ஸலவாத்துச் சொல்வதை தடுக்கின்றோம். ஷரீஅத்தில் சுன்னத்தாக்கப்பட்டுள்ள ஸியாரத்தை ஹராமாக்குகின்றோம். எங்களை யாராவது பின்பற்றுவார்களானால் அவர் மீதுள்ள கடன்கள் போன்றவை பொறுக்கப்பட்டுவிடுகின்றன எனக் கூறுகின்றோம் என்றும் எங்கள்மீது பொய் வதந்தியைப் பரத்துகின்றனர்.

மேலும் பெருமானார் (ஸல்) அவர்கள் குடும்பத்தினரை (அஹ்லுல்பைத்) நாங்கள் மதிப்பதில்லை, அவர்களுக்குப் பொருத்தமல்லாதவர்களைத் திருமணம் செய்யுமாறு அவர்களை வற்புறுத்துகின்றோம். வாலிபப் பெண்களை திருமணம் செய்திருக்கும் வயோதிகர்கள், அப் பெண்கள் வாலிபர்களைத் திருமணம் செய்வதற்காக அவர்களை 'தலாக்' சொல்லுமாறு கூறுகின்றோம். என்றெல்லாம் அறிவிற்குப் பொருந்தாப் பொய்களை உண்டு பன்னி கூறினர்.

இவ்வாறு கூறப்படுபவற்றுக்கு எந்த ஆதாரமும் கிடையாது. இம்மாதிரியான பொய்க் கூற்றுகளை எங்கள்

மீது சுமத்துகின்றவர்களுக்கு நாங்கள் கூறும் பதில் என்னவெனில்.

سُبْحٰنَكَ هٰذَا بُهْتَانٌ عَظِيْمٌ.

(இறைவா? நீ துய்மையானவன், இது மாபெரும் இட்டுக்காட்டாகும்)

யாராவது எங்களைப்பற்றி இது போன்றவற்றைக் கூறுவார்களானல் நிச்சயமாக அவர்கள் எங்கள் மீது இட்டுக்கட்டிப் பொய் கூறுபவர்களாவர்.

எங்கள் போதனைக் கேட்பதற்காக வருகை தந்து எங்கள் நிலைமைகளை நேரடியாகக் கண்டு நாங்கள் கூறும் உண்மைகளை ஆராய்ந்துபார்ப்பவர்கள் மேல் கூறப்பட்டவை இஸ்லாத்தின் விரோதிகளான ஷைத்தானின் சகோதரர்கள் இட்டுக்கட்டியவை என்பதைத் தெளிவாக அறிந்து கொள்வார்கள்.

إِنَّ اللّٰهَ لَا يَغْفِرُ أَنْ يُّشْرَكَ بِهٖ وَيَغْفِرُ مَا دُوْنَ ذٰلِكَ لِمَنْ يَّشَآءُ...

(நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைப்பதை மன்னிக்கவே மாட்டான், இதனை அல்லாத (குற்றத்தை) (அதுவும்) தான் விரும்பியவர்களுக்கு மன்னிப்பான்) (4-116)

என்னும் இறை வசனத்தின்படி அல்லாஹ்வினல் மன்னிக்கப்படாத ஷிர்க்கின் வகைகளை மக்கள் விட்டுவிடாதிருக்கவும், மக்களை உண்மையான ஏகத்துவ இறை வழிபாட்டை விட்டுதடுப்பதற்காகவும் இஸ்லாத்தின்எதிரிகளால் உண்டாக்கப்பட்ட பொய்களே மேலே கூறப்பட்டவை என்பதை அறிதல் அவசியமாகும்.

பெரும்பாவங்களான கொலை, விபச்சாரம், மது அருந்தல் போன்றவற்றைத் தொடர்ந்து செய்பவன் இச் செயல்களின் காரணத்தால் இஸ்லாத்தை விட்டு வெளியானவனாக ஆகமாட்டான், என்றும், ஏகதெய்வக்கொள்கையைச் சரிவர நம்பி மரணமடைபவன் இதுபோன்ற பாவச்செயல்களை புரிந்திருந்தால் அதற்குரிய தண்டனையை அனுபவித்த பின் அவனுக்கு சுவர்க்கம் உண்டு என்றும் நாங்கள் நம்புகின்றோம்.

பெருமானார் (ஸல்) அவர்கள் எல்லா படைப்பினங்களை விட உயர்ந்த அந்தஸ்துடையவர்கள். அவர்கள் கப்ரில் "பர்ஸக்" என்ற நிலையில் உயிருடன் இருக்கின்றார்கள்; மரணத்திற்குப் பின்புள்ள அவர்கள் வாழ்க்கை இறைவனுடைய பாதையில் போர்புரிந்து மரணமடைந்தவர்களுக்குக் கிடைக்கும் அந்தஸ்தைவிட எத்தனையோ மடங்கு உயர்ந்த அந்தஸ்துடைய வாழ்க்கையில் இருக்கின்றார்கள்; அவர்களுக்குச் சொல்லப்படும் 'ஸலாமை'க் கேட்கின்றார்கள். அவர்கள் கப்ரை ஸியாரத் செய்வது சுன்னத்தாகும். ஆனால் ஸியாரத் என்ற நோக்கத்தில் பிரயாணம் மேற்கொள்ளாமல் பெருமானார் (ஸல்) அவர்களின் பள்ளிவாசலை தரிசித்து அங்கு தொழ வேண்டுமென்ற எண்ணத்தில் பிரயாணம் செய்து அத்துடன் பெருமானார் (ஸல்) அவர்கள் கப்ரை தரிசிக்க வேண்டும், என்பவை எங்கள் கொள்கையாகும்.

ஒருவன் தன் புனிதமான நேரத்தை வேறு பாதையில் செலவு செய்வதை விட பெருமானார் (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்தும், ஸலாமும் சொல்வதில் கழிப்பானானால் அவன் ஈருலகிலும் வெற்றிபெற்றவன் ஆகின்றான்; அதுவே அவனுடைய கவலைகளையும், துன்பங்களையும் போக்குகின்றது என ஹதீஸில் வந்துள்ளது.

நாங்கள் அவ்லியாக்களின் கராமத்துக்களை மறுப்பதில்லை அவர்களுக்குள்ள உரிமைகளையும், பெருமைகளையும் ஏற்றுக் கொள்கின்றோம்; அவர்கள் ஷரீஅத்துக் சட்ட அடிப்படையில் அல்லாஹ்வின் நேர்வழியில் வாழ்ந்தார்கள். எனவே வெற்றி

படைத்தார்கள். ஆனால் அவர்கள் உயிரோடிருக்கும் போதோ, மரணத்திற்குப்பின்போ எவ்வித வணக்கத்திற்கும் உரியவர்களல்லர். அவர்கள் உயிரோடு இருக்கும்போது பிறருக்காக துஆச் செய்ய அவர்களிடமிருந்து வேண்டலாம்; இது அவ்லியாக்களுக்கு மாத்திரமல்ல, எல்லா முஸ்லிம்களும் பிறருககாக துஆச் செய்யலாம்.

(ஒரு முஸ்லிம் தன் சகோதரருக்காக செய்யும் துஆ இறைவனிடத்தில அங்கீகரிக்கப்படுகிறது என பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.)

''உவைஸ்'' (ரலி) என்பவர்களிடம் தங்களுக்காக பிழை பொறுக்கத் தேடுமாறு வேண்ட உமர் (ரலி), அலி (ரலி) இவ்விருவருக்கும் பெருமானார் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டபோது அவ்விருவரும் அவ்வாறே செய்தார்கள்.

திருக்குர்ஆனிலும், ஹதீஸிலும் வந்ததுபோன்று பெருமானார் (ஸல்) அவர்களுக்கு மறுமை நாளில ஷபாஅத்து இருக்கிறது. இதுபோன்று எல்லா நபிமார்கள், அவ்லியாக்கள், மலக்குகள், குழந்தைகள் எல்லோருக்கும் ஷபாஅத்து இருக்கிறது. ஷபாஅத்தை அதற்குச் சொந்தமான அல்லாஹ்விடமே கேட்க வேண்டும். ஏனெனில் அல்லாஹ்வின் உத்திரவிற்குப் பின்புதான் இவர்கள் ஷபாஅத்துச் செய்கின்றனர். ஏகத்துவ வழிபாட்டின்மீது மரணமடைகின்ற உண்மையான மூமின்களுக்கே இவர்கள் ஷபாஅத்துக் கிடைக்கும்.

ஷபாஅத்திற்காக இறைவனிடம் வேண்டும்போது :

''இறைவா! எங்கள் நபியான முஹம்மது (ஸல்) அவர்கள் மறுமையில் எங்களுக்காக ஷபாஅத்துச் செய்ய அனுமதி கொடு.

இறைவா! உன் மலக்குகளும், நல்லடியார்களும் எங்களுக்காக ஷபாஅத்துச் செய்ய அனுமதி கொடு.'' என்று அல்லாஹ்விடமே கேட்க வேண்டும். மாறாக

"யா ரசூலல்லாஹ், யாவலிய்யல்லாஹ் எங்களுக்கு ஷபாஅத்துச் செய்யுங்கள்; எங்கள் நோய்களை குணமாக்குங்கள்; எங்களுக்குப் பாதுகாவல் அளியுங்கள்; எதிரிகள் எங்களைத் தாக்காமல் இருக்க உதவுங்கள்" என்பது போன்று கேட்கக் கூடாது.

இவையெல்லாம் அல்லாஹ்விடமே கேட்க வேண்டும். இவை அனைத்தும் அல்லாஹ் ஒருவனால் மட்டுமே செய்ய முடியும்.

இவ்வாறு அல்லாஹ் அல்லாதவர்களிடம் அவர்கள் இறந்தபின் கேட்பது மாபெரும் ஷிர்க் என குர்ஆனும், ஹதீஸும் கூறிக் கொண்டிருக்கிறது. இதுபோன்ற ஷிர்க்கை ஒழிக்கவே பெருமானார் (ஸல்) அவர்கள் போராடினார்கள்.

கடிதம் முடிந்தது.

* * *

இமாம் முஹம்மதும் அவர்களைப் பின்பற்றியவர்களும் அடிப்படைக் கொள்கைகளில் ஸலபுஸ்ஸாலிஹீன்களையும், ஷரீஅத்துச் சட்டங்களில் இமாம் அஹ்மதுப்னு ஹன்பல் அவர்களையும் பின்பற்றினார்கள். தம் மத்ஹபில் உள்ள மஸ்அலா தவறு என்பதற்குத் தகுந்த ஆதாரம் கிடைக்குமானால், அந்த மஸ்அலாவில் தம் மத்ஹபை விட்டுவிடுவார்கள் (இது உலமாக்களால் ஏகோபித்து முடிவு செய்யப்பட்ட ஒன்றாகும்.) என்பன போன்றவற்றை இதைப்படிக்கின்றவர்கள் நன்கு அறியமுடியும்.

இமாம் முஹம்மதவர்கள் ஒரு புதுமையான கொள்கையின்பாலோ, ஒரு புதுமையான இயக்கத்தின்பாலோ மக்களை அழைக்கவில்லை. மாறாக அல்லாஹ்வையே வணங்குங்கள்; அவனால் அனுப்பப்பட்ட பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களின் வழிமுறைகளைப் பின்பற்றுங்கள்; இஸ்லாத்தில் புதிதாக எதையும் உண்டுபண்ணாதீர்கள். அவ்வாறு புதிதாகத் தோன்றியவற்றை விட்டுவிடுங்கள். அதிகமான மக்கள் பெருமானார் (ஸல்) அவர்கள் காட்டிய வழியை விட்டு,

தவறிய வழியில் சென்று கொண்டிருப்பதைக் கண்டுஏமாந்து விடாதீர்கள். அதிகமான மக்கள் எங்கள்மீது பொய்களை இட்டுக் கட்டுவதைக் கண்டு அவை உண்மையென நம்பி விடாதீர்கள் என்றே மக்களை அழைத்தார்கள்.

இவர்களை எதிர்க்கின்றவர்கள் இவர்கள்மீது இட்டுக் கட்டிக் கூறுபவற்றில் சிலவற்றிற்கேனும் இமாம் முஹம்மது எழுதிய புத்தகங்களிலிருந்து, அல்லது அவர்கள் மக்களும் அவர்கள் பிரச்சாரத் தலைவர்களும் எழுதிய புத்தகங்களிலிருந்து ஆதாரத்தைக் காட்டுங்களென நாங்கள் இவர்களுக்கு சவால் விடுகின்றோம். நிச்சயமாக இந்தப் புத்தகங்களிலிருந்து ஓர் எழுத்தைக்கூட அவர்கள் இட்டுக் கட்டி கூறுபவற்றுக்கு ஆதாரமாகக் காட்ட முடியாது.

எங்களை எதிர்க்கின்றவர்களுக்கு நாங்கள் கூறிக்கொள்வதென்னவெனில் இமாம் முஹம்மதைப் பற்றியும், அவர்கள் கொள்கை பற்றியும் எழுதப்பட்ட புத்தகங்கள் ஏராளமாக இருக்கின்றன. உங்களுக்கு அவர்கள்மீது சந்தேகமிருக்குமானால் இந்தப் புத்தகங்களில் சிலதையேனும் படித்து உண்மையை விளங்குங்கள். அப்போது எங்கள் மீது இட்டுக் கட்டியவர்கள் பொய்களையும், அதிகமான மக்கள் அவைகளை கண்டு ஏமாந்து, அவர்கள் அறிவாளிகள், உண்மையையே சொல்வார்கள் என நினைத்துக்கொண்டிருந்தவர்கள் நிலைமையையும் அறிவீர்கள்,

وَالَّذِينَ كَفَرُوا أَعْمَالُهُمْ كَسَرَابٍ بِقِيعَةٍ يَحْسَبُهُ الظَّمْآنُ مَاءً حَتَّىٰ إِذَا جَاءَهُ لَمْ يَجِدْهُ شَيْئًا وَوَجَدَ اللَّهَ عِندَهُ فَوَفَّاهُ حِسَابَهُ ۗ وَاللَّهُ سَرِيعُ الْحِسَابِ -

(எவர்கள் நிராகரிப்பவர்களாகி விட்டார்களோ அவர்களுடைய செயல்கள், பாலைவனத்தில் தோன்றும் கானலைப் போல் இருக்கின்றன; தாகித்தவன் அதனைத் தண்ணீர் என

எண்ணிக் கொண்டு அதன் சமீபமாக வரும் போது ஒன்றை யுமே அவன் காண்பதில்லை, எனினும் அல்லாஹ்வையே அவ்விடத்தில் காண்கின்றான். அவன் இவனுடைய கணக்கை முடித்து விடுகின்றான். (அதாவது அவனை மரிக்கச் செய்கிறான்) அல்லாஹ் கேள்வி கணக்கு கேட்பதில் மிகத் தீவிர மானவன்) (24:39)

என்ற இறைவசனத்தில் கூறப்பட்டது போன்று காட்சி யளித்துக் கொண்டிருந்த போலி உலமாக்கள் கூறுபவை உண்மையென நீங்கள் கருதி வந்ததையும் அறிவீர்கள்.

''மஹ்மூது ஷுக்ரீ ஆலூசி'' என்பவர் தம் ''தாரீக் நஜ்து'' என்ற நூலில் இராக் நாட்டைச் சார்ந்த ''தாவூது பின் ஜர்சீஸ் அல்பக்தாதி'' என்பவருக்கும் நஜ்து ஆலிம் ''ஷெய்கு அப்துல் லத்தீப் பின் அப்துர் ரஹ்மான் பின் ஹஸன்''(1) என்பவருக்குமிடையில் நடந்த சர்ச்சையைத் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். இந்த சர்ச்சையில் பயனுள்ள பல முக்கிய பிரச்சினைகளும், சிலர் மத்தியில் நிலவி வரும் சந்தேகங்களுக்குத் தகுந்த பதிலும் இருக்கின்றன. எனவே அதை நான் இங்கு சுருக்கமாகக் குறிப்பிடுகின்றேன்.

## இராக் நாட்டு தாவூது கூறியது

நஜ்து வாசிகளே! எதற்காக முஸ்லிம்களையும், அல்லாஹ்வின் நல்லடியார்களையும் காபிர்களெனக் கூறுகின்றீர்கள்? அவர்கள் வழிகேட்டில் இருக்கின்றார்கள் என்றும், அவர்களோடு போர் செய்வது கூடுமென்றும் கூறுகின்றீர்கள். மக்கா மதீனாவிலுள்ள இறை இல்லங்களைப் போர்புரியும்இடமாக ஆக்கி விட்டீர்கள், அங்கே உள்ளவர்களைக் கொலை செய்வதையும், அவர்கள் பொருளை அபகரிப்பதையும் ஆகுமானதாக ஆக்கிவிட்டீர்கள். ''முஸைலமத்துல் கத்தாப்'' என்பானின் இடமான நஜ்தை ஹிஜ்ராவின் இடமாகவும், ஈமானின் இல்லமாகவும் ஆக்கி விட்டீர்கள். ஆனால் நஜ்து

---

(1) இவர் ''மின்ஹாஜுத்தஃஸீஸ் வத்தக்தீஸ்'' என்ற புத்தகத்தை எழுதியவர். இவர் இமாம் முஹம்மதின் சந்ததியிலுள்ளவர்,

வாசிகள் தங்கள் நாட்டிற்காகப் பிரார்த்திக்குமாறு பெருமானார் (ஸல்) அவர்களிடம் வேண்டியபோது நஜ்து பித்னா குழப்பத்துடைய பூமி என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியிருக்கின்றார்களே!

ஒரு முஸ்லிமை காபிரெனக் கூறுவது மாபெரும் தவறாகும். நூறு பேர்களில் தொண்ணூற்றி ஒன்பது ஆலிம்கள் காபிரென ஒருவருக்குத் தீர்ப்பு வழங்கியபின் ஒரு ஆலிம் மாத்திரம் இவர்களுக்கு மாற்றமாகத் தீர்ப்பு வழங்குவாரானால் ஓர் உயிரைப் பாதுகாக்க இந்த ஒருவரின் தீர்ப்பைத் தான் எடுத்துக் கொள்ள வேண்டுமென உலமாக்கள் முடிவு செய்து கூறுகின்றனர். இவ்வாறிருக்க நீங்கள் ஏன் மார்க்க விஷயங்களில் சிந்திப்பதில்லை! அல்லாஹ்வின் முன் நிற்கும் நாளை நினைவு கொள்வதில்லை? மக்களை அமைதியானவர்களாக இருக்க விடுவதில்லையே ஏன்?

## நஜ்து ஆலிம் கூறிய பதில் :

இராக் வாசியே! விஷயம் நீரும், உம்மைப் போன்றவர்களும் அறிந்தது போன்றல்ல! மாறாக எங்கள் கொள்கையை நீங்கள் சரியாக அறிந்து கொள்ளவில்லை; எனவே நான் எழுதும் இதைப் பார்க்கும்போதாவது உங்கள் உள்ளத்தில் இருந்துவரும் சந்தேகங்கள் நீங்குமென நினைக்கின்றேன்.

நான் கூறுவதைக் கேளும் :

இஸ்லாத்தின் கடமைகள் ஐந்து. முதலாவது இரு கலிமாக்களை உள்ளத்தில் உறுதி கொண்டு, நாவால் மொழிந்து, அதன்படி அமல் செய்தல். பின் இஸ்லாத்தின் ஏனைய நான்கு கடமைகள்.

இந்த நான்கு கடமைகளையும் ஒருவன் நம்பியபின் அவற்றை இலேசாக மதித்து, விட்டுவிடுவானானால் அதற்காக நாங்கள் அவனோடு எதிர்த்தாலும், அவன் இவற்றை விட்டதற்காக அவனை காபிர் என்று நாங்கள் கூறுவதில்லை.

சோம்பேறித்தனத்தால் இந்த நான்கு கடமைகளையும் விட்டவனை காபிர் எனக்கூறலாமா என்பதில் உலமாக்கள் மத்தியில் கருத்து வேறுபாடுகள் உள்ளன.

'கலிமாவை விட்டவனோடு போர் புரியலாம்', என்று எல்லா உலமாக்களும் ஏகோபித்துக் கூறும் இந்த விஷயத்தில்தான் நாங்கள் போர் புரிகின்றோம். மேலும் இஸ்லாத்தின் முதல் கடமையான இரு கலிமாவையும் பகிரங்கமாக மறுப்பவனை காபிர் எனக் கூறுகின்றோம்.

எங்கள் விரோதிகள் பலவிதமாக இருக்கின்றார்கள் :

(1) ஏகத்துவ வழிபாடு இறைவன் ஒருவனுக்கே சொந்தம் என நம்பி, அதை மக்களுக்கு வெளிப்படுத்தி, அதிகமான மக்கள் கற்களுக்கும், மரங்களுக்கும் வணக்கம் புரிந்து வருவது ஷிர்க்காகும். அந்த ஷிர்க்கை ஒழிக்கவே பெருமானார் (ஸல்) அவர்கள் அனுப்பப்பட்டார்கள். இறைவன் ஒருவனை மாத்திரமே வணங்க வேண்டுமென்பதற்காகவே மக்களோடு போராடினார்கள் என்றெல்லாம் ஒருவன் நம்பியபின் ஏகத்துவத்தின்படி அமல் செய்யாமல், ஷிர்க்கான செயல்களையும் விடாமலிருப்பானானால் அவன் காபிர் ஆவான்.

அவன் காபிர் என்பதற்காக அவனோடு போராடுவோம்.

ஏனெனில் பெருமானார் (ஸல்) அவர்கள் கொண்டு வந்த மார்க்கத்தை அறிந்தபின்பும் அதைப் பின்பற்றவில்லை; ஷிர்க்கைப் பற்றி அறிந்தும் அதைவிடவில்லை. ஆனால் இவன் பெருமானார் (ஸல்) அவர்கள் காட்டிய வழி முறைகளை வெறுக்கவுமில்லை, ஷிர்க்கை. ஆதரிக்கவுமில்லை, (ஆனால்) ஷிர்க்கான செயல்களைச் செய்கின்றான்)

(2) ஒருவன் இஸ்லாத்தின் எல்லாக் கடமைகளையும். ஷிர்க்கைப் பற்றியும் அறிந்து, 'நான் பெருமானார் (ஸல்) அவர்கள் காட்டிய வழியிலிருக்கின்றேன். எனத் தன்னைக் கூறிக் கொண்டு பெருமானார் காட்டிய வழிகளைப் பற்றி

அவதூறு கூறி, அல்லாஹ்ற அல்லாதவற்றை வணங்குபவனைப் புகழ்ந்து இவன் அல்லாஹ்வை வணங்குபவனை விடச்சிறந்தவன் எனக்கருதுவானானால் இவ்வாறு கருதுபவன் முதலில் கூறப்பட்டவனை விட மிகக் கொடியவன்.

இவனைப் பற்றி அல்லாஹ் தன் திருமறையில் கூறும் போது.

فَلَمَّا جَاءَهُمْ مَّا عَرَفُوا كَفَرُوا بِهِ فَلَعْنَةُ اللَّهِ عَلَى الْكَافِرِينَ-

(ஆனால் அவர்கள் நன்கறிந்திருந்தும் அவர்களிடம் வந்த சமயத்தில் இதனை அவர்கள் நிராகரிக்கிறார்கள், ஆகவே அந் நிராகரிப் போரர் மீது அல்லாஹ்வின் சாபமுண்டாகுக!) (2:89)

மேலும் இறைவன் கூறுகின்றான்.

وَإِنْ نَّكَثُوا أَيْمَانَهُمْ مِّنْ بَعْدِ عَهْدِهِمْ وَطَعَنُوا فِي دِينِكُمْ فَقَاتِلُوا أَئِمَّةَ الْكُفْرِ إِنَّهُمْ لَا أَيْمَانَ لَهُمْ لَعَلَّهُمْ يَنْتَهُونَ

(சத்தியம் செய்து) உடன் படிக்கை செய்து கொண்ட தன் பின்னரும், அவர்கள் தங்களுடைய சத்தியங்களை முறித்து, உங்களுடைய மார்க்கத்தைப் பற்றியும் குற்றங் குறைகள்கூறிக்கொண்டிருந்தால் (நிச்சயமாக) நிராகரிப்போரின் (இத்தகைய) தலைவர்களுடன் போரிடுங்கள்; ஏனெனில் அவர்களுடைய உடன் படிக்கையில் உறுதியில்லை, (இத்தகைய விஷமத்திலிருந்து) அவர்கள் விலகிக் கொள்ளலாம்) (9:12)

(3) ஒருவன் ஏகத்துவக் கொள்கையை அறிந்து, அதைப் பின்பற்றி; ஷிர்க்கை அறிந்து அதை விட்டு விடுகிறான். ஆனால் ஏகத்துவக் கொள்கையில் சேருகின்றவர்

களை வெறுக்கின்றான். ஷிர்க்கின் மீது இருக்கின்றவர்களை நேசிக்கின்றான். இவனும் காபிர்.

இவனைப்பற்றி அல்லாஹ் கூறும்போது,

ذٰلِكَ بِاَنَّهُمْ كَرِهُوْا مَآ اَنْزَلَ اللّٰهُ فَاَحْبَطَ اَعْمَالَهُمْ-

(ஏனெனில் அல்லாஹ் இறக்கிவைத்ததை மெய்யாகவே அவர்கள் வெறுத்து (நிராகரித்து) விட்டார்கள். ஆதலால் அவர்களுடைய கிரிகைகளையெல்லாம் அல்லாஹ் அழித்து விட்டான்.) (47-9)

(4) ஒருவன் மேல் கூறப்பட்ட எல்லாக் குறைகளை விட்டும் தூய்மையானவன். ஆனால் தன் ஊர்க்காரர்கள் ஏகத்துவத்தின் எதிரிகளாகவும், ஷிர்க்கைப் பின்பற்று கின்றவர்களாகவும், ஏகத்துவக் கொள்கையுடையவர் களோடு போராடக் கூடியவர்களாகவும் இருக்கிறார்கள். இந்நிலையில், தன் நாட்டை விட்டுச் செல்வது கஷ்டம் என்பதற்காக ஏகத்துவக் கொள்கையுடையவர்களோடு போராடும் இவர்களுக்கு உடல், பொருளால், உதவி செய் பவன் காபிர்.

ஏனெனில் ஏகத்துவக் கொள்கையின் எதிரிகள் தவற் றின்பால் அழைக்கும்போது அவற்றுக்கு இவன் உடன்படு கின்றான். இஸ்லாமிய மார்க்கத்தை துண்டிக்க விரும்பும் எதிரிகளுக்குத் தன் உடல் பொருளால் உதவி செய்து அவர் களுடன் ஏகத்துவக் கொள்கையுடைவர்களை எதிர்த்துப் போராடுகின்றான். எனவே இவன் காபிர்.

இவனைப் பற்றி குர்ஆன் கூறும்போது

سَتَجِدُوْنَ اٰخَرِيْنَ يُرِيْدُوْنَ اَنْ يَّاْمَنُوْكُمْ وَيَاْمَنُوْا
قَوْمَهُمْ كُلَّمَا رُدُّوْٓا اِلَى الْفِتْنَةِ اُرْكِسُوْا فِيْهَا...

*(விசுவாசிகளே) வேறு சிலரையும் நீங்கள் காண்பீர்கள்; அவர்கள் உங்களிடம் அபயம் பெற்றுக் கொள்வதுடன் (உங்களுடைய விரோதிகளாகிய) தங்கள் இனத்தாரிடமும் அபயம் பெற்றிருக்க விரும்புவார்கள். எனினும், யாதொரு விஷமத்திற்கும் இவர்கள் அழைக்கப்படுவார்களானால் அதில் (கண்மூடி முகங்குப்புற விழுந்துவிடுவார்கள்) (4 : 91)*

மேல் விளக்கப்பட்ட நான்கு வகுப்பினரை மாத்திரம் தான் நாங்கள் காபிர் எனக் கூறுகின்றோம். வேறு யாரையும் காபிரென நாங்கள் கூறவில்லை.

"நாங்கள் எல்லோரையும் காபிர்களெனக் கூறுகின்றோம்; எங்களிடம் ஹிஜ்ரத்துச் செய்து வருவதைக் கடமையாக்குகின்றோம்; மற்றவர்களை காபிர் எனக் கூறாதவர்களையும், போர் புரியாதவர்களையும் காபிர்களெனக் கூறுகின்றோம்", என்றெல்லாம் கூறுவது, அல்லாஹ்வையும் அவனுடைய ரசூலையும் வழிபடுவதைவிட்டும் மக்களைத் தடுப்பதற்காக இட்டுக் கட்டப்பட்ட பொய்களாகும்.

அறியாமையின் காரணத்தாலும், அவர்கள் மத்தியில் போதிப்பவர்கள் இல்லாததாலும் கப்ருகளை வணங்குகின்றவர்களைக்கூட நாங்கள் காபிர்களெனக் கூறவில்லை(1)

---

(1) ஷெய்கு இந்த இடத்தில் கூறவிரும்புவது என்னவெனில் குர்ஆன், ஹதீஸிலுள்ள ஆதாரங்கள் தெரியாமலும்; அவற்றைக் கேள்விப்படாமலுமிருக்கின்ற பாமர மக்கள் (ஷிர்க்கான செயலைப் புரிவார்களானால்) அவர்களை காபிர்களென கூறவில்லை. ஆனல் ஆதாரங்கள் கிடைத்த பின்பும் தான் இருந்துவரும் "இறந்தவர்களிடம் தேவைகளை வேண்டுதல், அவர்களிடம் அபயம் தேடல்", போன்ற ஷிர்க்கான காரியங்களை மனமுரண்டு பிடித்துச் செய்து வருபவன் முஷ்ரிக் என்பதில் சந்தேகமில்லை. இவ்வாறு ஷிர்க்கானவற்றைச் செய்பவனை காபிரல்ல எனக் கூறுபவன் காபிர் என்பதிலும் சந்தேகமில்லை.

இவ்வாறிருக்க அல்லாஹ்விற்கு இணைவைக்காதவர்கள் எங்கள் பக்கம் ஹிஜ்ரத்துச் செய்து வரவில்லையானால் அவர்கள் காபிர்கள் என நாங்கள் எப்படிக் கூறமுடியும்?

سُبْحَانَكَ هَٰذَا بُهْتَانٌ عَظِيمٌ۔

(இறைவா! நீ தூய்மையானவன் இது மா பெரும் பொய்யாகும்.)

எங்களிடம் கேள்வி கேட்ட உமக்கு சந்தேகங்களைப் போக்க மேல் கூறப்பட்ட விளக்கங்கள் போதுமானவையாகும். உமக்கு சிந்திக்கின்ற அறிவும், சீர்தூக்கிப் பார்க்கும் ஆற்றலுமிருக்குமானால், சந்தேகங்களை விட்டும் விலகிக் கொள்வீர். அல்லாஹ் தவ்பீக் செய்பவனாக இருக்கின்றான்.

மக்கா, மதீனாவிலுள்ள பள்ளிவாசல்களில் போர் புரிவதையும், ஹறாம்கள் செய்வதையும் ஆகுமாக்குகின்றோம் என்று எங்களைப் பற்றிக் கேள்வி கேட்டவர், குறிப்பிட்டது பகிரங்கமான மாபெரும் பொய்யாகும்.

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான்:

إِنَّمَا يَفْتَرِي الْكَذِبَ الَّذِينَ لَا يُؤْمِنُونَ بِآيَاتِ اللَّهِ ۖ وَأُولَٰئِكَ هُمُ الْكَاذِبُونَ۔

(இது) பொய் என்று இட்டுக்கட்டிக் கூறுவோரெல்லாம் அல்லாஹ்வுடைய வசனங்களை நம்பாதவர்கள் தாம். (உண்மையில்) இவர்கள் தாம் பொய்யர்கள்) (16:105)

அவ்விரு பள்ளிகளிலும் எவ்விதப் போரும் நடக்கவில்லை. பாதுகாவல் அளிக்கப்பட்டு, ஒப்பந்தம் செய்தபின், மக்கா ஷரீப்கள், மதீனா பெரியார்களின் அனுமதியின் பின்பே அப்பள்ளிகளில் முஸ்லிம்கள் நுழைந்தார்கள், பட்டாளங்கள் வந்து, ஊடுருவிச் சென்று வெற்றி பெறுவதுவரை, எங்களின் பெரியவர்கள் இவ்விரு பள்ளிகளிலும் மக்களுக்கு இஸ்லாமிய

அறிவுகளை போதித்து, ஏகத்துவக் கொள்கை, இறைவனைத் தூய்மை படுத்தல் போன்ற விஷயங்களில் புத்தகங்கள் எழுது வதில் ஈடுபட்டு வந்தனர்.

மதீனாவிலுள்ள எல்லா உலமாக்களும் அனுமதிவழங்கிய பின்பே பெருமானார் (ஸல்) அவர்கள் அறையில் இருந்த பொருள்களை எடுத்து, அதற்குரியவர்களுக்குச் செலவு செய் தோமே தவிர எங்கள் விருப்பப்படி எதையும் செய்யவில்லை.

சுருங்கக் கூறின்: பெருமானார் (ஸல்) அவர்கள் அறையி லிருந்த பொருள்கள் அவர்கள் அயலார்களுக்கும், மதீனா வாசிகள் அபிவிருத்திக்காகவும், ஏழைகளுக்கு செலவிடுவதற் காகவுமே வைக்கப்பட்டது.

பெருமானார் (ஸல்) அவர்கள் உயிரோடு இருந்த போது இது போன்ற பொருள்களைச் சேகரித்து வைப்பதில்லை, இவற்றைவிட்டும் தேவையற்றவர்களாக இருந்தார்கள். அவ்வாறிருக்க அவர்கள் மரணத்திற்குப்பின் இப்பொருளின் மீது அவர்களுக்கு என்ன தேவை இருக்க முடியும்?

அந்த ஆண்டு ஹாஜிகள் மதீனா வருவதைத் தடை செய்திருந்தால் அவ்வாண்டு மதீனாவாசிகளுக்கு ஹாஜிகளிட மிருந்து ஆண்டு தோறும் கிடைத்து வந்த வருமானம் நின்று விட்டது. எனவே பெருமானார் (ஸல்) அவர்கள் அறையி லிருந்த பொருளை எல்லா மதீனா முக்கியஸ்தர்கள் பார்வை யின் கீழ் வெளியாக்கி பங்கிடப்பட்டன.

சில ஏமாற்றங்களும், சதிகளும் நடந்தனவென்றால் அவை மார்க்கப் பற்றுடையவர்களிடமிருந்து நிகழவில்லை என்பதை நாம் அறியவேண்டும்.

இவ்வாறு நடந்ததற்காக அவற்றை நாங்கள் ஆகுமாக் கின்றோம் என்று நீர் கூறுவது தவறானதாகும்.

நாங்கள் மக்கா, மதீனா பள்ளிவாயில்களை கண்ணியப் படுத்தி, கஃபதுல்லாஹ் விற்குத் துணிபோட்டுச் சிறப்பித்து, பாதைகளில் பாதுகாப்பளித்து; ஹஜ்ஜு செய்து, பெருமானார் (ஸல்) அவர்களின் பள்ளிவாயிலை தரிசித்து, கண்ணியப்படுத்தி

வந்தோம். என்பதை உண்மையை அறிந்தயாரும் மறுக்க முடியாது.

மக்காவும். மதீனாவும் சிறப்பிற்குரிய இடங்கள் என்பதனால் அங்கே உள்ளவர்கள் எல்லோரும் நல்லவர்கள் எனக் கூறுவது தவறாகும். இஸ்லாமிய ஷரீஅத்தின்ஆதாரங்களையும் குர்ஆன் கூறுவதையும் அறியாதவனே இவ்வாறு கூறுவான். (ஒரு பூமிக்கிருக்கும் சிறப்பின் காரணத்தால் அதில் உள்ளவர்கள் சிறந்தவர்களெனக் கூறமுடியாது.)

மக்கா, மதீனாவில் இருந்து கொண்டு அல்லாஹ்விள் அத்தாட்சிகளை மறுத்து, ரசூல்மார்களை எதிர்த்து, ஆதாரங்களை மறுக்கின்ற எத்தனையோ பேர் இருக்கின்றனர். அதே நேரத்தில் ஹபாஷா இந்தியா, பிர்அவ்ன்கள் வாழ்ந்த எகிப்து, மஜூசிகள் ஊரான ஈரான், மதமாறிகள் ஊரான ஹர்ரான் போன்ற நாடுகளில் அறிவு ஞான மேதைகள், தலைமைப் பதவிக்குத் தகுதியுடைய, மார்க்கப் பற்றுள்ளவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கின்றார்கள். இது எல்லோருக்கும் தெரிந்த ஒன்றாகும்.

நபிமார்களின் வரலாற்றைச் சிறிதேனும் அறிந்தவன் மக்கா, மதீனா பள்ளிவாசலுக்குள்ள சிறப்பில் எந்த சநதேகமும் வைக்கமாட்டான். ஆனால் இந்தப் பள்ளிகளின் சிறப்பை, அங்கு வாழ்கின்றவர்கள் எல்லோரும்நல்லவர்கள் என்பதற்கு ஆதாரமாக எடுத்துக்கொள்ள முடியாது.

ஸஹாபி அபூதர்தா (ரலி) அவர்கள் ஸல்மானுல் பாரிசி (ரலி) அவர்களைப்பார்த்து பரிசுத்த பூமிக்கு வாருங்கள் என அழைத்து அந்த பூமியினளவில் ஆசையூட்டினார்கள். அப்போது

''நிச்சயமாக பூமி யாரையும் தூய்மையாக்காது'' என ஸல்மானுல்பாரிசி (ரலி) பதில் கூறினார்கள்.

அல்லாஹ் தன் திருமறையில் கீழ்க்காணுமாறு கூறுகின்றான்:

وَأَوْرَثْنَا الْقَوْمَ الَّذِينَ كَانُوا يُسْتَضْعَفُونَ مَشَارِقَ الْأَرْضِ وَمَغَارِبَهَا الَّتِي بَارَكْنَا فِيهَا...

(எவர்களை இவர்கள் பலஹீனமானவர்களென்று (கேவலமாக) எண்ணிக் கொண்டிருந்தார்களோ, அந்த மக்களுக்கே மிக்க பாக்கியமுள்ள (அவர்களுடைய) பூமியின் கிழக்குப் பாகம், (ஷாம்) மேற்குப்பாகம் (எகிப்து) முதலிய யாவற்றையும் சொந்தமாக்கிக் கொடுத்தோம்.) (7-137)

இந்த வசனத்தில் பரகத்துச் செய்யப்பட்ட பூமிஎன்பது ஷாம், எகிப்து என்ற நாடுகளாகும்.

ஒரு பூமியின் சிறப்பு அந்த பூமியில் உள்ளவர்கள் நல்லவர்கள் என்பதற்கு ஆதாரமாக இருக்குமானால், பரிசுத்த பூமியில் (ஈலியா என்ற ஊரில்) வாழ்ந்த இஸ்ரவேலர்களும், பைத்துல் முகத்தஸில் வாழ்ந்தவர்களும் நல்லவர்கள் ஆகியிருக்க வேண்டும். ஆனால் அங்கு வாழ்ந்தவர்களில், காபிர்களும், பொய்யர்களும் இருந்து நபிமார்களைக் கொலை செய்தார்கள் என்பது நபிமார்கள் வரலாற்றைப் படிக்கின்றவர்களுக்குத் தெரிந்த ஒன்றாகும்.

'ஈமானும் ஹிக்மத் என்னும் அறிவும் எமன் என்ற நாட்டில் இருக்கிறது.'

'எமன் வாசிகள் உங்களிடம் வந்துள்ளார்கள். அவர்கள் மென்மையான உள்ளமுடையவர்கள், இளகிய மனப்பான்மையுள்ளவர்கள்'.

என்ற ஹதீஸ்களை ஆதாரமாக வைத்து எமனில் உள்ளவர்கள் எல்லோரும் நல்லவர்கள் எனப் பொதுவாகக் கூறுவது முறையற்றதாகும். ஏனெனில், தான் நபி என வாதாடிய அல்அஸ்வதுல் அனஸீ எமனைச் சார்ந்தவன். இவனைப் போன்றவர்களும் மேலே கூறப்பட்ட ஹதீஸ்களை ஆதாரமாக வைத்து நாங்கள் சிறந்தவர்கள் எனக் கூறும்

போது இவர்களுக்கு என்ன பதில் கூறுவீர்கள்? அதே பதிலைத்தான் நாங்கள் உங்களுக்குக் கூறிக் கொள்கின்றோம்.

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான் :

وَتِلْكَ الْأَيَّامُ نُدَاوِلُهَا بَيْنَ النَّاسِ ...

(இத்தகைய (சோதனைக் காலம் மனிதர்களுக்கிடையில் மாறி மாறி வரும்படி நாம்தாம் செய்கிறோம்) (3 : 140)

அதாவது ஒரு பூமியிலுள்ளவர்கள் சிறந்தவர்களென வந்துள்ள ஹதீஸை ஆதாரமாக வைத்துத் தவறு புரிபவர்கள், "நாங்களும் நல்லவர்கள் என்று கூறும்போது இவர்களுக்கு நீங்கள் எனப் பதிலைக் கூறுவீர்களோ அந்த பதிலை எங்களுடைய பதிலிற்குப்ப கரமாக்கினோம்.

'பாம்பு தன் பொந்தைத் தேடிச் செல்வது போன்று ஈமான் மதீனாவைத் தேடிச் செல்கின்றது' என்ற பெருமானார் (ஸல்) அவர்களின் ஹதீஸை ஆதாரமாக வைத்து மதீனாவிலுள்ள எல்லோரும் நல்லவர்கள், தவறிழைக்காதவர்கள் எனக் கூறமுடியாது.

## குழப்பங்களின் இடங்கள் என்பதின் பொருள் :

எங்களிடம் கேள்வி கேட்டவரே! பெருமானார் (ஸல்) அவர்கள் ஹதீஸில் வந்துள்ள குழப்பங்களின் இடம் என்பது நஜ்தும், அதில் உள்ள ஊர்களுமாகும் என நீர் கருதி, நஜ்தில் உள்ளவர்கள் அனைவரும் தவறுபுரிகின்றவர்கள் நீர் நினைக்கின்றீர், இந்த ஹதீஸின் பொருளை நீர் அறியாமலிருப்பதைக் கண்டு வருந்துகிறோம்.

நீரும், உம்மைப் போன்றவர்களும் உண்மையை அறிய வேண்டுமென்ற ஆர்வமுள்ளவர்களாகவும், நேர்மையானவர்களாகவும் இருப்பீர்களானால் இந்த ஹதீஸின் பொருளை

ஞாங்கள் விளக்கிய பின்பாவது உண்மையை அறிந்து செயல் பட இறைவனை வேண்டுகின்றோம்.
பெருமானுர் (ஸல்) அவர்கள் ஒரு துஆவில் கூறினார்கள்:

''இறைவா! எங்கள் ஷாம் நாட்டிலும், எங்கள் எமன் நாட்டிலும் பரக்கத்துச் செய்தருள்வாயாக!' என்று; அப்போது ஸஹாபாக்கள் 'யாரசூலல்லாஹ்! எங்கள் நஜ்து நாட்டிற்கு இல்லையா'?என்று மும் முறை கேட்டார்கள். நான் காவது முறை பெருமானுர் (ஸல்) அவர்கள் அது பித்னுக்கள் நாசங்கள் உள்ள இடம் என பதிலளித்தார்கள்''.

பெருமானுர் (ஸல்) அவர்களின் இந்த துஆ ஏற்றுக் கொள்ளப்பட்டு ஷாம், எமன் நாடுகளில் அல்லாஹ் பரக்கத் துச் செய்தான்.

எமன் வாசிகளும், ஷாம் வாசிகளும் இஸ்லாத்தைத் தழுவிய பின்பே இஸ்லாத்தின் கொடி உயர்ந்தோங்கி, படைகள் திரட்டப்பட்டு இஸ்லாமிய ஆட்சி சிறப்படைந்து, அவ்விரு நாடுகளின் பொருள்கள் இஸ்லாத்தின் பாதையில் செலவிடப் பட்ட தென்பது பிரசித்தி பெற்ற ஒன்ருகும்

இவ்வாறு அவ்விரு நாடுகளுக்கிருக்கும் சிறப்பின் காரணத்தால் அங்குள்ளவர்கள் எல்லோரும் நல்லவர்கள், தவறுபுரியாதவர்கள் என்று சொல்லமுடியாது. இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகளையும், அதன் பிரிவுகளையும், நுட்பமான கருத்துகளையும் நன்கு உணரதாவனே இவ்வாறு கூறுவான்.

பரக்கத்துச் செய்யப்பட்ட எகிப்து, ஷாம் என்ற நாட்டைக் குறிக்கும் மேல் கூறப்பட்ட திருவசனத்தை ஆராய்வது அவசியமாகும்.

நஜ்தை சார்ந்த தமீம், அஸது, தை, ஹவாஸின், கதபான், பனூ துஹ்லு பனூஷைபான் போன்ற வம்சத்தவர்கள் இஸ்லாமிய மார்க்கப் போரில் பெரும் பங்கு பெற்று வெற்றியடைந்தார்கள். குறிப்பாக பாரசீக, ரோமானிய நாடுகளுடன் மார்க்கப் போர் புரிந்தார்கள். அவர்களின்

சிறப்பைப் பற்றி பல ஹதீஸ்களில் கூறப்பட்டுள்ளது. கற்றறிந்தவர்கள் இவர்களின் சிறப்பை மறுக்க மாட்டார்கள். இவர்கள் செய்த போர்களையும், அவற்றில் அவர்கள் அடைந்த துன்பங்களையும் படித்தறிந்தவன் இவர்கள் சிறப்பிற்குரியவர்கள் என்பதில் சந்தேகிக்க மாட்டான்.

ஸஹாபாக்கள், அறிவாளிகள், மூமீன்கள் வாழ்வதற்கு முன் அந்த ஊர் மக்கள் எல்லா ஊர் மக்களையும்விட சிறந்தவர்களென்பதில் சந்தேகமில்லை. இவர்கள் அங்கு குடியேறியதன் பின்பு அவ்வூரின் சிறப்பும், மதிப்பும் அங்குள்ளவர்களின் அறிவையும், மார்க்கப் பற்றையும் பொறுத்ததேயாகும்.

எந்தக் காலமானாலும் ஒரு நாட்டில் அறிஞர்கள் அதிகமாக இருந்து, பெருமானார் (ஸல்) அவர்களின் வழிமுறையை அறிந்து அவர்கள் பின்பற்றி வருவார்களானால் அதுவே நாடுகளிலெல்லாம் மிகச் சிறந்ததாகும்.

ஒரு நாட்டில் அறிஞர்கள் குன்றி, அறியாமை அதிகரித்து, பித்அத், ஷிர்க்குகள் பெருகி, பெருமானார் (ஸல்) அவர்கள், மற்றும் முன் சென்ற நல்லவர்களுடைய வழிமுறையை அந்நாட்டு மக்கள் பின்பற்றாமலிருப்பார்களானால், அது நாடுகளில் மிக மோசமானதாகும்.

ஒரு நாட்டின் சிறப்பு அந்த நாட்டில் வாழும் மக்களைப் பொறுத்ததேயாகும்.

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான் :

وَإِذْ قَالَ إِبْرَٰهِـمُ رَبِّ ٱجْعَلْ هَٰذَا بَلَدًا ءَامِنًا وَٱرْزُقْ أَهْلَهُۥ مِنَ ٱلثَّمَرَٰتِ مَنْ ءَامَنَ مِنْهُم بِٱللَّهِ وَٱلْيَوْمِ ٱلْءَاخِرِ قَالَ وَمَن كَفَرَ فَأُمَتِّعُهُۥ قَلِيلًا ثُمَّ أَضْطَرُّهُۥٓ إِلَىٰ عَذَابِ ٱلنَّارِ وَبِئْسَ ٱلْمَصِيرُ

'தவிர இப்ராஹீம் (அலை) இறைவனை நோக்கி) என் இறைவா! (மக்காவாகிய) இதை அபயமளிக்கும் ஒரு

பட்டணமாக ஆக்கிவைத்து, இதில் வசிப்பவர்களில் எவர் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் விசுவாசிக்கிறாரோ அவருக்கு ஆகாரமாக பலவகை கனிவர்க்கங்களையும் அளித்து வருவாயாக! எனக் கூறியதற்கு (இறைவன், 'என்னை விசுவாசிப்பவருக்கு நான் ஆகாரமளிப்பது போலவே என்னை) நிராகரிப்பவனுக்கும் (ஆகாரமளித்து) அவனையும் சிறிது காலம் (அங்கு) சுகமனுபவிக்க விட்டு வைப்பேன். பின்னர் நரக வேதனையின்பால் (செல்லும்படி) அவனை நிர்பந்திப்பேன்; அவன் செல்லும் (அந்த) இடம் (மிகக்) கெட்டது, என்று கூறினான்) 2:126

இவ்வாறே மக்காவில் செய்யப்படும் நல்அமல்களுக்குப் பன்மடங்கு நன்மைகளும், அங்கு செய்யப்படும் தவறுகளுக்குப் பன்மடங்கு தண்டனையும் கொடுக்கப்படுகிறது(1)

நஜ்து மாகாணத்தில் சிலர் "தமீம்" வம்சத்தைப் பற்றி புகாரியில் ஒரு ஹதீஸில் வருவதைக் குறிக்கிறார்கள். அபூ ஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்.

---

(1) பன்மடங்கு நன்மைகள் என்பது எண்ணிக்கையிலல்ல, வடிவத்திலாகும் என சில அறிஞர்கள் கூறுகின்றனர். அதற்கு ஆதாரமாக, எவரேனும் ஒரு நன்மையைச் செய்தால், அவருக்கு அதைப்போல் பத்துப்பங்குகள் (நன்மைகள்) உண்டு; எவரேனும் ஒரு தீமையைச் செய்தால், அதைப் போன்றதேயன்றி (அதிகமாக) அவருக்குக் கூலி கொடுக்கப் படமாட்டாது. (குற்றத்திற்கு அதிகமான தண்டனையைக் கொடுத்தோ, அல்லது நன்மைக்குரியகூலியைக் குறைத்தோ அவர்கள் அநியாயம் செய்யப் படமாட்டார்கள்) என்ற இந்த திருவசனத்தைக் கூறுகின்றனர். இது குர்ஆனில் தெளிவான ஆதாரமாகும். இதில் மக்காவில் செய்யப்படும் அமல்களுக்கு மாத்திரம் பன்மடங்கெனக் கூறவில்லை. இந்த ஆயத்து மக்காவிற்கு மட்டும்தான் எனக் கூறுபவர்களுக்கு ஆதாரமில்லை. எனவே இதை ஆதாரமாகக் கொள்வது நல்லதல்ல.

அப்துல் அஜீஸ்பின்பாஸ்

பெருமானுர் (ஸல்) அவர்கள் கூற நான் கேட்ட மூன்று விஷயங்களுக்காக தமீம் வம்சத்தை நான் நேசிக்கின்றேன்.

1. தமீம் வம்சத்தாரிடமிருந்து 'ஜகாத்துப்' பொருள் வந்தபோது, 'இது என் கூட்டத்தாரின் ஜகாத் பொருள்" என பெருமானுர் (ஸல்) அவர்கள் கூறினுர்கள்.

2. தமீம் வம்சத்து ஓர் அடிமைப் பெண்ணைப் பற்றிக் கூறும்போது, 'அந்தப் பெண்ணை உரிமை விடுங்கள். அவள் நபி இஸ்மாயீல் (அலை) அவர்களின் சந்ததியைச் சார்ந்த வள்' எனப் பெருமானுர் (ஸல்) அவர்கள் கூறினுர்கள்,

3. என் உம்மத்தினரில் ''தஜ்ஜால்'' என்பவன்மீது மிகக் கடுமையாக இருப்பவர்கள் தமீம் வம்சத்தினர்கள், எனப் பெருமானுர் (ஸல்) அவர்கள் கூறினுர்கள்.

இது ஒரு குறிப்பிட்ட வம்சத்தைப் பற்றிய சிறப்பாகும்.

பொதுவாக அரபிகளின் சிறப்பைப்பற்றி பல ஹதீஸ் களில் வந்துள்ளன. நஜ்து வாசிகள் கலப்பற்ற அரபிகள் என்பதில் சந்தேகமில்லை.

ஒரு பூமியில் வாழ்பவர்கள் சிறந்தவர்கள் என்பதற்கு இடத்தின் சிறப்பைப் பற்றி வந்துள்ள ஹதீஸை ஆதாரமாக எடுப்பதைவிட வம்சம், மக்களின் சிறப்பைப்பற்றி வந்துள்ள ஹதீஸை ஆதாரமாக எடுப்பது சிறந்ததாகும்! ஏனெனில் மக்களின் சிறப்பைப்பற்றி வந்துள்ள ஹதீஸ் மிக தெளிவான ஆதாரமாக இருக்கிறது. (அதாவது மக்களைப்பற்றிவந்துள்ள சிறப்பிற்கும், இடத்தைப்பற்றிவந்துள்ள சிறப்பிற்கும் வேறு பாடு உள்ளது.)

''தஜ்ஜால்'' என்பவன் செய்யும் தீமைகளில் பலதை கப்று வணங்கிகளின் தலைவர்களும், கப்று வணக்கத்தின்பால் மக்களை அழைக்கின்றவர்களும் செய்து வருவது தெரிந்த ஒன்ருகும்.

தமீம் வம்சத்தவர்களில் பலரும், நஜ்து வாசிகளும் கப்ரு வணக்கம் புரிந்துவந்த தஜ்ஜால்களை எதிர்த்தார்கள்.

இதைப்பற்றி பெருமானார் (ஸல்) அவர்கள் முன்பே அறிவித்தது அவர்களின் அற்புதங்களில் ஒன்றாகும்,

தமீம் வாசிகள் தஜ்ஜாலை எதிர்ப்பார்கள் என்ற பெருமானார் (ஸல்) அவர்களின் ஹதீஸில் "தஜ்ஜால்" என்ற சொல்லிற்கு, 'கடைசி நாளில் வரும் தஜ்ஜால்' என்றும் பொருள் கொடுக்கலாம்; அத்துடன் இந்த தஜ்ஜால் செய்யும் தீங்குகளைச் செய்கின்ற எல்லோரும் என்ற பொருளையும் கொடுக்கலாம்,

இராக் நாட்டைச்சார்ந்தவரே! நீர் அல்லாது வேறு யாராவது இதைப்பற்றிக் கேட்க வேண்டியிருந்தது. ஏனெனில், உமது நாடான இராக் பித்அவிற்கும், நாசத்திற்கும் உறைவிடமாக இருந்தது. அங்கே தான் இஸ்லாமியர்கள் துன்பத்திற்குமேல் துன்பமடைந்தார்கள்.

இராக்கிலுள்ள "ஹரூரா" என்ற ஊர்வாசிகள் இஸ்லாமியர்கள்மீது விளைவித்த நாசங்களும், சஹாபாக்களைக் கொலை புரிந்த விஷயங்களும் எவருக்கும் தெரியாமலிருக்க முடியாது.

ஜஹமிய்யாக்கள், முஃதஸிலாக்கள், சூபிய்யாக்கள் என்ற பெயரில் பித்அத்களைப் புரிந்து, இஸ்லாத்தில் குழப்பத்தை உண்டு பண்ணி பிளவு படுத்திய கூட்டத்தினர்கள் இராக்கிலேயே தோன்றினார்கள்,(1)

ரசூலுல்லாஹ்வின் குடும்பத்தவர்கள் மீது தவறாக நடந்து, அலி (ரலி) அவர்கள் மீது பெரும் பொய்களைக்கூறி, பெரும் சஹாபாக்களை ஏசுகின்ற ஷியாக்களும், ராபிளாக்களும் இராக்

---

(1) இவ்வாறே ஜமல்ஸிப்பீன் போன்ற யுத்தங்கள் இராக்கிலேயே நடந்தன. அவற்றில் தான் அலீ (ரலி), முஸ்லிம் பின் உகைல்(ரலி), இமாம் ஹுஸைன் (ரலி), அவர்களுடைய மக்கள் எல்லோரும் கொல்லப்பட்டார்கள். அங்கு தான் "முக்தார் பின் அபீ உபைதா' என்பவன் நபித்துவத்துக்காக வாதாடினான். இவ்வாறே தற்காலத்தில் அப்துல் கரீம் காசிம் என்பவர் குழப்பங்களை உண்டுபண்ணி எத்தனையோ பேர்களை கொலை செய்தார்.

கிலேயே உருவானுர்கள். இவையெல்லாம் இராக் நாட்டவர்கள் மூலம் அறியப்படுபவையாகும். இவர்கள் முஸ்லிம்களைக் குறைகூறி அவர்கள் ஊர், "முஸ்ஸலமத்துல் கத்தா" புடைய ஊரென ஏளனமாகக்கூறுவதில் வெட்கப்பட வேண்டாமா?

பெருமானுர் (ஸல்) அவர்கள் கூறிய கீழ்க்காணும் ஹதீஸை நீர் கேள்விப்படவில்லையா?

'இப்லீஸ் இராக்கில் நுழைந்து, அங்கே மலம் கழித்தான். பின் ஷாமில் நுழைந்தபோது, மக்கள் அவனை விரட்டினுர்கள். பின் எகிப்தில் நுழைந்து, அங்கே முட்டையிட்டுக் குஞ்சு பொரித்து தனது திறமையைக் காட்டினுன்.' (தபரானி).

இஸ்லாத்திற்கு முன் "இராக்"கிலுள்ள மக்கள் நெருப்பையும், பசுவையும் வணங்கி வந்தார்கள். அது மஜூஸிகளுடைய இடமாக இருந்தது. இஸ்லாத்திற்குப்பின் அவற்றைவிட்டும் சுத்தமாகி விட்டதெனக்கூற முடியாது. ஏனெனில் "ஏமாமா"வில் உள்ளவர்களும், மற்றும் பல பாகங்களில் உள்ளவர்களும் இஸ்லாத்தைப்பின் பற்றி, அதன் கொள்கைகளை நிலை நாட்டாமல், அல்லாஹ், அவனுடைய தூதரின் எதிரிகளோடு போராடாமலிருக்கின்றனர்.

பெருமானுர் (ஸல்) அவர்களின் ஹதீஸில் வந்த நஜ்து என்பது பிரபல்யமான ஓர் இடத்தைக் குறிக்குமென்று நாங்கள் ஏற்றுக் கொண்டாலும், அதன் பொருள் நீரும் உம்மைப் போன்றவர்களும் கொடுப்பது போன்றல்ல.

ஹதீஸ்களில் வந்துள்ள நஜ்து என்பது இராக் நாட்டையே குறிக்கும். ஏனெனில், இராக் மதீனுவின் கிழக்குப் பகுதியை நோக்கி அமைந்துள்ளது.

இராக்கைச் சுட்டிக் காட்டி பெருமானுர் (ஸல்) அவர்கள் கூறினுர்கள் என்று வேறு ஒரு ஹதீஸில் வந்துள்ளது.

"கத்தாபி" என்பவர் கூறுகிருர்.

"நஜ்து" (பூமியில் உயர்ந்த பாகம்) என்பது கிழக்குப் பகுதியில் உள்ளது; மதீனாவில் உள்ளவர்களுக்கு பூமியில் உயர்ந்த பாகம் "இராக்" கிராமங்களும், அவற்றை அடுத்துள்ளதுமாகும். அது மதீனாவின் கிழக்குப் பகுதியில் உள்ளது.

"நஜ்து" என்ற சொல்லிற்கு அகராதிப்படி பூமியின் உயர்ந்த பாகம் என்பது பொருள். இப்படி உயர்ந்த பாகம் இராக் பக்கமே இருக்கின்றது என வரலாற்று ஆசிரியர் தாவூதி கூறுகிறார். இவ்வாறே ஹாபிள் இப்னு ஹஜர் (ரஹ்) கூறுகின்றார்கள்.

இதற்கு ஆதாரமாக அப்துல்லாஹ்பின் உமர் (ரலி) அவர்களின் ஹதீஸை ஆதாரமாக எடுத்துக் கொள்ளலாம்:

'இராக் வாசிகளே! நீங்கள் சிறு பாவங்களைப் பற்றி அதிகமாகக் கேள்விகள் கேட்டு பெரும் பாவங்களை அதிகமாகச் செய்ய உங்களைத் தூண்டியது என்ன? பெருமானார் (ஸல்) அவர்கள் கிழக்குப் பக்கம் தம் கையால் சுட்டிக் காட்டி, நிச்சயமாக பித்னா இங்கிருந்துதான் வரும் எனக் கூறினார்கள்.'

இந்த ஹதீஸ் இராக் நாட்டவர்களையே குறிக்கிறது என்பது மிகத் தெளிவானதாகும். ஏனெனில் பெருமானார் (ஸல்) அவர்கள் குழப்பத்தின் இடம் எது என்பதை விளக்கித் தம் கையால் சுட்டிக் காட்டியுள்ளார்கள்.

"தபரானி" கிதாபில் அது இராக்தான் எனத் தெளிவாக வந்துள்ளது. தவிர மேல் கூறப்பட்ட அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்களின் ஹதீஸும், அகராதியும், அதற்கொப்ப தற்போது அங்குள்ள நிலையும் அது இராக் தான் என்பதை நன்கு விளக்குகிறது.

'நூறு ஆலிம்களில் 99 பேர் ஒருவனை காபிர் என தீர்ப்பு வழங்கி இவர்களில் ஒருவர் மட்டும் மாற்றமாகக் கூறுவராறல் அந்த ஒருவர் கூறுவதுபடியே தீர்ப்பு வழங்க வேண்டும்'

எனக் கேள்விக் கேட்டவர் குறிப்பிட்டது வேதனைக்குரிய விஷயமாகும்.

ஏனெனில், 'கொள்கை விஷயத்திலும், அமல்கள் விஷயத்திலும் குர்ஆன், ஹதீஸ், இஜ்மாஃ, கியாஸ் இந்த நான்கை மட்டும் ஆதாரமாக எடுக்கவேண்டுமே தவிர, ஆலிம்கள் கூறுவதை மட்டும் ஆதாரமாக எடுக்கக் கூடாது,' என்பதை நீர் அறியவில்லையா? இந்த நான்கில் எதை ஆதாரமாக வைத்து இதைக் கூறுகிறீர்?

'உங்களால் முடிந்த அளவு சந்தேகமான விஷயங்களில் தண்டனை கொடுப்பதை விட்டுவிடுங்கள்' என்ற பெருமானார் (ஸல்) அவர்களின் ஹதீஸ் எங்கள் மத்தியிலுள்ள கருத்து வேறுபாட்டைக் குறிக்கக் கூடியதல்ல. ஏனெனில் கருத்து வேறுபாடு என்பது சந்தேகங்களால் ஏற்படுவதல்ல. ஒருவன் குர்ஆன், ஹதீஸ், இஜ்மாஃ இந்த மூன்றிற்கு மாற்றமாகக் கூறுவானானால் அதை ஏற்றுக் கொள்ளக்கூடாது. இது ஏகோபித்து முஸ்லிம்களால் தீர்மானிக்கப்பட்ட ஒன்றாகும். இதை யாரும் அறியாமலிருக்க முடியாது.

கருத்து வேறுபாடு சந்தேகத்தின் காரணத்தால் உண்டாவதாகுமெனப் பொதுவாகக் கூறுவது இஸ்லாமிய மார்க்கத்தைத் தகர்க்க முயல்வதாகும்; இமாம்களை இழிவு படுத்துவதாகும். ஏனெனில் இஜ்திஹாது மூலம் எடுக்கப்பட்ட இஸ்லாமியச் சட்டங்களில் கருத்து வேறுபாடு இல்லாமலிருக்கும் சட்டங்கள் மிகக் குறைவாகும்.

பெருமானார் (ஸல்) அவர்களின் உம்மத் எழுபத்தி மூன்று பிரிவுகளாகப் பிரிந்து, மார்க்கத்தில் கருத்து வேறுபாடுகள் உண்டாகும் என பெருமானார் (ஸல்) அவர்கள் ஹதீஸில் வந்துள்ளது. இதை எல்லா உலமாக்களும் ஏற்றுக் கொள்கிறார்கள்.

கருத்து வேறுபாட்டை எல்லா விஷயங்களிலும் ஏற்றுக் கொள்ள முடியாது. குறிப்பாக குர்ஆன், ஹதீஸ், இஜ்மாஃ இவைகளின் தெளிவான ஆதாரங்களுக்கு மாற்றமான கருத்தை ஏற்றுக் கொள்ளக்கூடாது. மார்க்கத்தின்

எத்தனையோ சட்டங்களில் இவ்வாறே இமாம்கள் தீர்ப்பு வழங்கியுள்ளனர்.

கருத்து வேறுபாடு என்பது சந்தேகங்களால் ஏற்படுகின்றது என்றிருக்குமானல், இமாம்கள் எல்லோரும் சந்தேகத்திலும், தவற்றிலும் இருந்தார்கள் என்பதாகி விடும் ஆனல் கேள்வி கேட்டவர் கூறியதற்கு மாற்றமாகவே இவர்கள் ஏகோபித்துக் கூறியுள்ளார்கள்.

வெளிப்படையான ஆதாரங்களுக்கு ஆயிரக்கணக்கானோர் கருத்துத் தெரிவித்தாலும் அவற்றை ஏற்கக் கூடாது.

''குறைவானவர்கள் உண்மையைப் பின்பற்றுகின்றனர்கள் என்பதற்காக (ஆத்திரப்படாதே) அவ்வுண்மையை தவறெனக் கருதிவிடாதே. அதிகமானவர்கள் தவற்றைப் பின்பற்றி மடிவதால் நீ ஏமாந்து விடாதே என புலைல் பின் இயாள் என்பவர்கள் கூறுகிறுர்கள்.

அல்லாஹ், பெருமானுர் முஹம்மது (ஸல்) அவர்களுக்குக் கூறுகிறுன்.

وَإِن تُطِعْ أَكْثَرَ مَن فِي الْأَرْضِ يُضِلُّوكَ عَن سَبِيلِ اللَّهِ...

(இப் புவியிலிருப்போரில் அநேகரை நீர் பின்பற்றுவீரானல், அவர்கள் உம்மை அல்லாஹ்வுடைய பாதையிலிருந்து திருப்பி விடுவார்கள்) 6:117

இஸ்லாமிய சட்டங்களில் அதிகமானவர்கள் (ஆதாரத்திற்கு மாற்றமாகக்) கூறுவதை ஆதாரமாக எடுக்கக்கூடாது என்பதை இவ்வசனம் நமக்கு விளக்குகிறது,

சிந்திப்பதற்கு இடமிருக்கின்ற விஷயங்களைத் தவிர வேறு எந்த விஷயங்களிலும் கருத்து வேறுபாடு கூடாதெனை ஒரு கவிஞர் கூறுகிறுர்.

## கேள்வி கேட்பவர் கூறுவது :

நஜ்து வாசிகளே! முஸ்லிம்களை காபிர்களெனக் கூறுபவன் இஸ்லாத்தைவிட்டு அப்பால் பட்டுவிட்டான் என்று நீங்கள் அறிய வேண்டாமா! ஏன் நீங்கள் காரிஜிய்யாக்களைப் பின்பற்றி அவர்களின் வழியில் செல்கிறீர்கள்? அவர்கள் மத்ஹபுக்கும், கொள்கைக்கும் ஏன் ஒத்துப் போகின்றீர்கள்!

(லாஹுக்ம இல்லல்லாஹ்) அல்லாஹ் ஒருவனுக்கே தீர்ப்பளிக்கும் உரிமையுண்டு என காரிஜிய்யாக்கள் கூறினார்கள்.

(லாயுஃபது இல்லல்லாஹ்) அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாரையும் வணங்கக் கூடாது என நீங்கள் கூறுகின்றீர்கள். இதுபோன்ற வார்த்தைகள் சமுதாயத்தை வழி கெடுப்பதாகும்.

காரிஜிய்யாக்கள் முஸ்லிம்களை வழிகெடுப்பவர்களாவர், அவர்கள் கொள்கையை நீங்கள் எப்படி ஏற்றுக் கொள்கிறீர்கள்?

## பதிலளிப்பவர் கூறுவது

கேள்வி கேட்பவரே! உண்மை நிலையை நீர் அறிந்திருப்பீரானால் இந்தக் கேள்வியை கேட்டிருக்கமாட்டீர்.

அன்பியாக்களையும், அவ்லியாக்களையும், நல்லவர்களையும் வணங்கி அல்லாஹ் உடன் இவர்களையும் அழைத்து உதவி தேடுபவர்களை காபிர் எனக்கூறும் முஸ்லிம்களை, உண்மையான மூமின்களை காபிர்கள் எனக்கூறும் காரிஜிய்யாக்களுக்கு ஒப்பிட்டு விட்டீர்.

கப்றுகளை வணங்குகின்றவர்கள் சுன்னத் ஜமாஅத்தை சார்ந்தவர்களென நீர் கருதுகின்றீர். ஆனால், அல்லாஹ் கூறுகின்றான்,

لَا يَسْتَوِيٓ أَصْحَٰبُ ٱلنَّارِ وَأَصْحَٰبُ ٱلْجَنَّةِ...

(நரகவாசிகளும், சுவர்க்கவாசிகளும் சமமாக மாட்டார்கள்) 59-20

இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாபின் மகன் அப்துல்லாஹ் என்பவர் எழுதிய கடிதத்திலிருந்து குறிப்பிடப்பட்டது முடிந்தது.

## இரு காலங்கள் ஒன்று படுதல்

பெருமானார் (ஸல்) அவர்கள் காலமும், இமாம் முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் வாழ்ந்த காலமும் அதிகமான விஷயங்களில் ஒன்று பட்டிருப்பதைக் காணலாம்.

இவ்வாறுள்ள ஒற்றுமையை கூறுவதால் இமாம் முஹம்மதை பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஒப்பிட்டுக் கூறுவதாக கருதிவிடக்கூடாது. அவ்வாறு கருதுவது எங்கள் நோக்கமல்ல. ஏனெனில் பெருமானார் (ஸல்) அவர்களை எல்லா நபிமார்கள் ரசூல்மார்களை விட சிறந்தவர்களாக அல்லாஹு தஆலா ஆக்கி அவர்களை இறுதிநபியாகவும் ஆக்கினான் அவர்களுடைய சிறப்பும், அந்தஸ்தும் மற்றவர்களைப் போன்றதல்ல.

இமாம் முஹம்மது ஒரு ஆலிமாகவும், சீர்திருத்த வாதியாகவும், பெருமானார் (ஸல்) அவர்களின் மறைந்து போன சுன்னத்துக்களை புதுப்பிக்கக் கூடியவராகவுமே இருந்தார்கள்.

இரு காலங்களுக்கு மிடையிலுள்ள ஒருமைப் பாட்டில் சிலவற்றைச் சுருக்கமாகக் கீழே காண்போம்:

(1) பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் காலத்தில் மூடக் கொள்கைகள், மோசமான பழக்க வழக்கங்கள், தவறிய பண்பாடுகள் முதலியன தன் எல்லையை எட்டிப்பிடித்திருந்தன, இறை ஆலயமாகிய கஃபதுல்லாஹ்வில் சிலைகள் வைத்து வணங்கப்படலாயின, அரபியர்கள் சிலை வணக்கத்தில் மிக கீழ்த்தரமானவர்களாக இருந்தார்கள். அவற்றை வணங்குவதில் மிகப் பெயர் பெற்றவர்களாகவும் இருந்தார்கள். கீழ்த்தரமான பழக்க வழக்கங்களிலும், மது அருந்தல்,

பெண்களை உயிருடன் புதைத்தல் ஏழைகள் மீது ஆதிக்கம் செலுத்தல் போன்றவற்றில் மூழ்கியிருந்தனர்.

சுருங்கக்கூறின், இந்தக் காலம் மனிதத்துவ சிறப்புகளை குழிதோண்டிப் புதைக்கக் கூடிய காலமாக இருந்தது.

இதைப் போன்றே இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாபுடைய காலத்தில் வாழ்ந்த மக்களும் அறியாமைக் கால மக்களைவிட மிக மோசமானவர்களாகவும், நல்லவர்களை நேசிக்கின்றோம் என்ற பெயரில், அல்லாஹ்விற்கு இணை வைத்தும் வந்தார்கள். மனிதத்துவச் சிறப்புக்கள் அறவே காண முடியவில்லை. இஸ்லாத்தில் இல்லாத பித்அத்களையும், அனுச்சாரங்களையும் புரிகின்ற தலைவர்களுக்கு மக்கள் அடிபணிந்திருந்தார்கள். இஸ்லாமிய மார்க்கத்தின் பெயர் மங்கிக் கொண்டே சென்றது.

2. நபித்துவம் முறிந்திருந்த காலத்தில் அதாவது ஐநூறு ஆண்டு காலமாக நபிமார்கள் அனுப்பப்படாமல் பின் பெருமானார் (ஸல்) அவர்கள் அனுப்பப்பட்டார்கள். நபிமார்கள் இல்லாத இந்த இடைக் காலத்தில் அழிவும், நாசங்களும் மலிந்து காணப்பட்டதால் மனித சமுதாயம் பெருமானார் (ஸல்) அவர்கள் வருகையை மிக ஆவலோடு எதிர் பார்த்திருந்தது. அவர்களால் அநியாயங்கள் ஒழிக்கப்பட்டு, அமைதியின்பால் மக்கள் திரும்பக் கூடுமெனவும், தாழ்ந்த பண்பாட்டிலிருந்து வந்த மக்கள் நேர்மை, அமைதியின்பால் திரும்பக் கூடுமென எதிர்பார்த்தது.

இவ்வாறே ஹிஜ்ரி 12-ஆம் நூற்றுண்டின் ஆரம்ப கட்டத்தில் அராபியாவில் பரந்திருந்த மூட பழக்கவழக்கங்களை ஒழிப்பதற்கு ஒரு சீர்திருத்தவாதி மிக அவசியமாக இருந்தது. பெருமானார் (ஸல்) அவர்கள் காட்டிய நேர்வழியின்பால் மக்களை அழைத்து, இஸ்லாத்தின் உண்மைகளை எடுத்துரைத்து, மூடக் கொள்கைகள், தவறிய பழக்க வழக்கங்களை விட்டும் மக்களை காப்பாற்றி, குர்ஆன், ஹதீஸின் ஒளியை மக்கள் உள்ளத்தில் ஏற்ற ஒரு வழிகாட்டி

மிகமிக அவசியமாக இருந்தது. அதை பூர்த்தி செய்வ தற்கே இமாம் முஹம்மது அவர்கள் தயாரானூர்கள்.

3. பெருமானூர் (ஸல்) அவர்கள் எவ்வாறு இணை வைப்பையும், சில வணக்கத்தையும் ஒழித்து, ஏகத்துவத் தின்பால் மக்களை அழைத்தார்களோ, அவ்வாறே இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்களும் பெருமானூர் (ஸல்) அவர்கள் வழியை மக்களுக்கு தூய்மையாக எடுத்துக் காட்டி மங்கிப்போன இஸ்லாமிய சட்டங்களைச் செயல் படுத்த தயாரானூர்கள்.

4. பெருமானூர் (ஸல்) அவர்களைத் தம் தாய் நாடான மக்காவை விட்டு மக்கள் விரட்டினூர்கள். அவர்களுக்கு எத் தனையோ இன்னல்கள் கொடுத்தார்கள். இறுதியாக அவர் களைக் கொலை செய்யவும் திட்டமிட்டனர். எனவே பெருமா னூர் (ஸல்) அவர்கள் மதீனூவிற்கு ஹிஜ்ரத்துச் செய்தார்கள் அங்கே அன்சாரி தோழர்களுடைய அன்பையும், ஆதரவை யும் பெற்றூர்கள். இவ்வாறே அவர்கள் உத்தம ஸஹாபாக் களும் மார்க்கத்தையும், அவர்கள் கொள்கையையும் பாது காப்பதற்காக விடிழந்து, நாடிழந்து தொல்லைகளையும் சகித் தார்கள்.

இவ்வாறே உண்மையான ஏகத்துவக் கொள்கையின் பால் மக்களை அழைத்தபோது, இமாம் முஹம்மதவர்களை அவர்கள் பிறந்த ஊரைவிட்டு விரட்டி, அவர்களைக் கொலை செய்யவும் திட்டமிட்டனர்(1)

எனவே அவர்கள் ''தர்யிய்யா'' என்ற ஊருக்குச் சென்று அங்கே மக்களின் அன்பையும், ஆதரவையும், தம்

---

(1) கொலைத் திட்டம் அவர்கள் பிறந்த ஊரில் நடக்க வில்லை, ''ஹரீமலா'' என்ற ஊரில் நடந்தது. எனவே ''உயைனூ'' என்ற ஊருக்கு மாறிச் சென்றூர்கள். இவ்வாறே ''இப்னுபிஷ்ர்'' தம் வரலாற்றில குறிப்பிடுகிறூர்.

அப்துல் அஜீஸ்பின் பாஸ்

பிரச்சாரத்திற்குகந்த உதவிகளையும் பெற்றார்கள். அங்கு மார்க்கத்தைப் பரத்த முடிந்தது. இமாம் முஹம்மதைப்பின் பற்றியவர்களும் தம் கொள்கையையும், உயிரையும் பாது காக்க அங்கு சென்றனர்.

5. பெருமானார் (ஸல்) அவர்கள் மதீனாவை நோக்கி ஹிஜ்ரத்துச் செய்தபோது "சுருக்கா பின் மாலிக்" என்பவர் அவர்களைப் பின் தொடர்ந்து கொல்லச் சதி செய்தார். ஆனால் அல்லாஹ்வின் அருள் அவர்களைப் பாதுகாத்தது. சுருக்கா தாம் வந்த விஷயத்தில் தோல்வியடைந்து திரும்பிச் சென்றார்.

இவ்வாறே இமாம் முஹம்மது தம் தாய்நாட்டை விட்டு விரட்டப்பட்டு 'தர்யிய்யா'' என்ற ஊரை நோக்கிக் கால் நடையாகச் சென்று கொண்டிருக்கும்போது "உயைனா" என்ற ஊர் கவர்னர் "உதுமான் பின் முஅம்மர்" என்பார் ஒரு குதிரை வீரனை அனுப்பி அவர்களைக் கொலைசெய்யுமாறு கூறினார். கொலை செய்வதற்காக, அவர்களைப் பின் தொடர்ந்து சமீபத்தில் நெருங்கி வாளை உருவும்போது, தம் கை நடுங்கி வாள் கீழே விழுந்து விட்டது. அல்லாஹ் அவர்களைக் காப்பாற்றினான்; குதிரை வீரன் தோல்வி கண்டு திரும்பினான்.

6. பெருமானார் (ஸல்) அவர்கள் தம் பிரச்சாரத்தை ஒவ்வொரு குடும்பத்திலும், ஒவ்வொரு வம்சத்தலைவரிடமும் எடுத்துக்கூறி அழைப்புக் கொடுத்தார்கள். ஹஜ்ஜுக்கு வருகின்றவர்களை அணுகிஇஸ்லாத்தின் உண்மைகளை விளக்கும் போது சிலர் உதவினர் சிலர் பரிகசித்தனர், வேறு சிலர் இழிவு படுத்தினர். அதனால் ஏற்பட்ட இன்னல்களையும், தொல்லை களையும் சகித்தார்கள். மக்களின் நேர் வழிக்காக அல்லாஹ் விடம் பிரார்த்தித்தார்கள்.

இவ்வாறே இமாம் முஹம்மது தம் பிரச்சாரத்தை குடும்பத் தலைவர்களிடமும், பெரியவர்களிடமும் எடுத்துக் கூறும் போது சிலர் உதவினர்; வேறு சிலர் எதிர்த்தனர்; பலர் தொலைகள் கொடுத்தனர். தலைவர்களும், பெரியவர்

களும் சதித்திட்டங்களை பல தீட்டினர். இவற்றை எல்லாம் பொருட் படுத்தாமல், அவற்றை சகித்தார்கள்.

7. பெருமானார் (ஸல்) அவர்கள் மக்களை நேர்வழியின் பால் அழைக்கின்ற போது அவர்கள் உயிருக்கே ஆபத்து ஏற் பட்டது. இவ்வாறே அவர்களை உண்மையாகப் பின்பற்றிய இமாம் முஹம்மதின் உயிருக்கும் பல ஆபத்துகள் ஏற்பட்ட போது அவற்றை அமைதியோடும், ஈமான் நிறையப்பெற்ற உள்ளத்தோடும் வரவேற்றார்கள்.

8. பெருமானார் (ஸல்) அவர்கள் எதிரிகளோடு போர்க் களங்களில் போராடி, போர் நடக்கின்ற நேரத்தில்தம்சஹா பாக்களை உற்சாகமூட்டி அவர்களுக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார்கள்.

இவ்வாறே பெருமானார் (ஸல்) அவர்களைப் பின்பற்றி இமாம் முஹம்மதும், அமீர் முஹம்மது பின் சவூதுடன் சேர்ந்து எதிரிகளுடன் போராடினார்கள். போர் நேரத்தில் நல்ல பல தம் கருத்துகளை எடுத்துக் கூறுவதில் தயங்கிய தில்லை. இமாம் முஹம்மதிற்கும், மற்றவர்களுக்கும் கருத்து வேறுபாடு ஏற்படும்போது, அல்லாஹ்வின் நேர்வழியில் செலுகின்ற இமாம் முஹம்மதின் கருத்தைத்தான் முற் படுத்துவார்கள். அவர்கள் சிறந்த படைத் தளபதியாகவும் இருந்தார்கள்.

9. பெருமானார் (ஸல்) அவர்கள் அரசர்களை கடிதங்கள்; தூதர்கள் மூலமாக இஸ்லாத்தின் பால் அழைத்தார்கள்; இஸ்லாமியப் பிரச்சாரத்தை அவர்கள் எதிர்க்கும் போது படைகளை அனுப்பிப் போர் புரிந்தார்கள்.

இவ்வாறு இமாம் முஹம்மதும் பெருமானார் (ஸல்) அவர்களின் இந்த கண்ணத்தைப் பின்பற்றிச் செயல்பட்டு வந்தார்கள்.

10. பெருமானார் (ஸல்) அவர்கள் பிரச்சாரத்தை சூனி யம் என்றும், பொய் யென்றும் எதிரிகள் இட்டுக் கட்டித் தொல்லைகள் கொடுத்தனர். இதனால் பெருமானார் (ஸல்)

அவர்களின் நெருங்கிய உறவினர்கள் கூட அவர்கள் விஷயத்தில் சந்தேகித்து எதிர்த்தார்கள்.

இவ்வாறே எதிரிகள் இமாம் முஹம்மதை சூனியக்காரர் என்றும், பொய்யர் என்றும் பலவாறாகத் தாக்கினர். எனவே இவர்களின் சொந்த சகோதரரான ''சுலைமான்'' என்பவர் எதிரிகளோடு சேர்ந்து இவர்களைக் கடுமையாக எதிர்த்தார். (1)

11. ஆரம்பத்தில் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு எதிரியாக இருந்த உமர் (ரலி) காலிதுப்னு வலீது (ரலி), அம்றுபின் ஆஸ் (ரலி) போன்றவர்கள் பின் எவ்வாறு பெருமானார் (ஸல்) அவர்களின் உத்தமத் தோழர்களாக மாறினார்களோ, அவ்வாறே இமாம் முஹம்மதிற்கும் ஆரம்பத்தில் எதிரிகளாக இருந்தவர்கள், பிரச்சாரத்தின் உண்மைகளை அறிந்தபின், இமாம் முஹம்மதிடம் வந்து நடந்த தவறுகளுக்காக மன்னிப்புக் கோரி பிரச்சாரத்திற்கு மிக ஆதரவாக இருந்தார்கள். (2)

## நஜ்து மாகாணத்தில் பிரச்சாரத்தால் ஏற்பட்ட நன்மைகள்

1. இப்பிரச்சாரம் நஜ்திலுள்ள ஊர்கள் அனைத்திலும் நிறைந்து காணப்பட்ட அனாச்சாரங்கள், கப்ரு வணக்கங்கள்,

---

(1) தம் சகோதரர் உண்மையின்பாலே அழைக்கின்றார் என்று பின்னர் தெரியவந்ததும் சுலைமான் இறைவனிடம் பாவ மன்னிப்புக் கோரி, தம் சகோதரர் இருந்துவந்த ''தர்யிய்யா'' என்ற ஊருக்குச் சென்று நடந்தவற்றுக்காக மன்னிப்புக் கோரினார்.

இவ்வாறு ''இப்னு பிஷ்ர்'' தம் ''உன்வானுல் மஜ்தி'' என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

அப்துல் அஜீஸ் பின்பாஸ்.

(2) மேல் கூறப்பட்டவற்றை அதிகமானவை ''முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப்'' என்ற ''அப்துல் கபூர் அத்தார்'' என்பவர் எழுதிய புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டுள்ளது.

அவற்றுக்காக நேர்ச்சை செய்தல், சில மரங்கள்மீது மூட நம்பிக்கை வைத்தல் போன்ற எல்லாக் கெட்ட பழக்க வழக்கங்களையும் அடியோடு ஒழித்து, இஸ்லாமிய ஷரீஅத்துச் சட்டங்களை உயிர்பெறச் செய்தது.

2. இணை வைப்பதில் வாழ்ந்து வந்த நஜ்து மக்கள் உண்மையான ஏகத்துவக் கொள்கையின்பால் திரும்பினார்கள். தங்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு பிரச்சினைக்கும் குர்ஆன், ஹதீஸ் கூறும் தீர்ப்பை வழங்கினார்கள்.

3. தங்கள் மத்தியில் இறை சட்டமோ, மனித சட்டமோ செயல்படுத்தப்படாமல் ஒற்றுமையிழந்து, சிதறுண்டு, வேறுப்பட்டிருந்த மக்களை இப்பிரச்சாரம் ஒன்று சேர்த்து ஒருமைப் படுத்தியது. குர்ஆன், ஹதீஸ் அடிப்படையில் ஆட்சி செய்யும் ஒரே அரசின்கீழ், ஒரே கொடியின் கீழ் ஒன்றிணைத்தது.

4. கற்களையும், குகைகளையும் நம்பி அவற்றை மதிக்கக் கூடிய அளவில் (மூடக் கொள்கையின்) அறியாமையின் எல்லையை எட்டிப் பிடித்திருந்த அம்மக்களிடையில் இப்பிரச்சாரம் குர்ஆன், ஹதீஸ், பிக்ஹ், தவ்ஹீது போன்ற பரிசுத்த இஸ்லாமிய மார்க்க அறிவுகளைப் பரத்தியது.

நஜ்தின் பல பாகங்களிலிருந்தும், எமன், ஹிஜாஸ், பாரசீக வளைகுடா நாடுகள் முதலியவற்றிலுள்ள மக்கள் ''தர்யிய்யா'' என்ற ஊருக்குக் கூட்டம் கூட்டமாகக் கல்விதேடி வரும் அளவில் இவ்வூர் அறிவின் சிகரமாகத் திகழ்ந்தது. அறிவு எல்லாப் பாகங்களிலும், எல்லா மக்களிடையும் பரந்தது.

'பாலைவனத்தில் ஆடுகளை மேய்த்துச் செல்லும் இடையன் தான் கற்கும் பலகையை கழுத்தில் தொங்கவிட்டுப் படித்துக் கொண்டே செல்வான்' என வரலாற்று ஆசிரியர்களால் பாராட்டக் கூடிய அளவில் அறிவு வளர்ந்தது.

அறியாமையிலும், சந்தேக இருளிலுமிருந்து, மனம் போன போக்கில் போய்க் கொண்டிருந்த நஜ்து மக்களுக்

கிடையில் அறிவு வளர்ச்சி பெற்று, திறமையான அறிஞர்கள் பலர் தோன்றி, எல்லாத் துறைகளிலும் சிறந்த பல நூல்களைக் கோர்வை செய்தனர்.

5. நஜ்தின் எல்லாப் பாகங்களிலும் அமைதியும், பாது காவலும் நிறைந்தது. கால்நடையாகவும், வாகனங்கள் மூலமாகவும் பலநாட்கள் நீண்ட தொலைதூரம் அதிகமான பொருட்களுடன் பிராயாணம் செய்கின்றவர்கள் எவ்விதம் பயமுமின்றிச் செல்வார்கள்.

6. நஜ்தைப் பற்றி மக்கள் யாரும் தெரியாமலேயே இருந்தார்கள் அதற்கு மக்களிடையில் எந்த மதிப்பும், செல்வாக்குமிருக்கவில்லை. அதற்கென ஒரு அரசோ, ஒரு சட்டமோ இருக்கவில்லை. ஆங்காங்கு ஒரு சில கிராமங்களில் சில சிறிய அமீர்கள் ஆதிக்கம் செலுத்தி வந்தார்கள். ஆனால் இப்பிரச்சாரத்தின் காரணத்தால் நஜ்து ஒரே அரசாகி உலக மக்களிடையில் அதன் புகழ் பரவி, செல்வாக்குப் பெற்றது.

அன்று இருந்து வந்த உதுமானிய அரசு சவூதிய அரசின் காரணத்தால் தன் அதிகாரமும் ஆதிக்கமும் போய் விடுமோ என அஞ்சியது. எனவே சவூதிய அரசை ஒழிப்பதற்காக படைகளை அனுப்பிப் போர் புரிந்தது.

7. கிழக்கே பாரசீக வளைகுடாவிலிருந்து, மேற்கே செங்கடல் வரை இன்றைய சவூதிய அரசு பரந்து நீண்டு காணப்படுகின்ற தென்றால், அது இமாம் முஹம்மதுபின் அப்துல்வஹ்ஹாப் அவர்களின் பிரச்சாரத்தின் காரணத்தினாலேயாகும்,

இவ்வரசு குர்ஆன், ஹதீஸ், தவ்ஹீதின் அடிப்படையில் செயல்படும் அரசாகும் நல்லவற்றை ஏவி, தீயவற்றைத் தடுக்கும் அரசாகும். நேர்மை, சமாதானம், பாதுகாப்பு ஆகியவற்றை பரத்தும் அரசாகும். அறிவின் உறைவிடத்திலிருந்து கலவியை எடுத்து தன் மக்கள் மத்தியிலும், தன்னைத்தேடி வருபவர்கள் மத்தியிலும் பரத்துகிறது. அறிவுக் கூடங்களையும், கல்லூரிகளையும், பள்ளிக் கூடங்களையும் நிறுவி அங்கே பயிலுகின்ற உள் நாட்டு, வெளி நாட்டு

மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் கணக்கற்ற பொருள் களைச் செலவிடுகிறது.

இஸ்லாத்தின் ஆரம்ப கால மக்களான 'ஸலபுஸ்ஸாலி ஹீன்கள்' அடிச்சுவட்டையும், அவர்கள் பண்பாடுகளையும் பின்பற்றி, குர்ஆன், ஹதீஸின் சட்டத்தைச் செயல்படுத்து கிறது இவ்வரசு.

நாட்டு மக்களின் நலனிற்காகவும், அவர்களின் அந்தஸ் தையும், வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்தி, ஏழ்மையை ஒழித்து இரவு பகலாகச் செயல்படுகிறது.

இவ்வாறே தன் நாட்டை நோக்கிவரும் ஹாஜிகளுக்குத் தேவையான எல்லா வசதிகளையும் செய்து கொடுத்து, அவர் களுக்குள்ள கஷ்டங்களைப் போக்குகிறது. அவர்கள் திரும் பத் திரும்ப ஹஜ்ஜு செய்வதற்கும், பெருமானார் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலை தரிசிப்பதற்கும் ஆசையூட்டுகிறது.

சுருங்கக் கூறின் இஸ்லாமிய ஷரீஅத்துச் சட்டத்தைச் செயல்படுத்துவதிலும், நேர்மை, பாதுகாப்பு, அறிவு இவற் றைப் பரத்துவதிலும், பித்அத்களை, வழிகேடுகளைஎதிர்த்துப் போராடுவதிலும், தவறுகள் புரிபவர்களுக்கு தக்க தண்டனை கொடுப்பதிலும் சவூதி அரசு மற்ற எல்லா நாடுகளையும் விட மிகச் சிறந்ததாகும்.

அல்லாஹ் இவ்வரசிற்குப் பாதுகாப்பளித்து உதவி, பொது நலன்களைப் பேணி நல்லவற்றைச் செய்ய தவ்பீக் செய்தருள்வானாக!

## பிரச்சாரம் வெளிநாடுகளில் பரவுதல்

ஹிஜ்ரீ 1218ம் ஆண்டு சவூதி அரசு மக்காவை வெற்றி கண்டதிலிருந்து இப்பிரச்சாரம் நஜ்தின் வெளியே பரவ ஆரம்பித்தது. இஸ்லாமிய உலக மக்கள் ஏராளமாக மக்கா விற்கு ஹஜ் செய்ய வரலானார்கள். இவர்கள் பிரச்சார மேதைகளை கண்கூடாகக் கண்டு, அவர்கள் பிரச்சாரங்களை யும், உபன்னியாசங்களையும் அவர்கள் காட்டும் உண்மை

யான ஆதாரங்களையும் செவிமடுத்தார்கள். மேலும், சவூதி அரசு குர்ஆன், ஹதீஸின் அடிப்படையில் அரசு நடத்தி, நேர்மை பாதுகாப்பைப் பரத்துவதைக் கண்ட சில ஹாஜி களிடத்தில் இப்பிரச்சாரம் ஒரு தனி இடத்தைப் பெற்றுவிட் டது. எனவே, இவர்கள் தங்கள் நாடுகளுக்குச் சென்று ஏகத்துவக் கொள்கையைப் பரப்பி, கப்று வணக்கங்களை, அவை மீது குப்பாக்கள் கட்டல் போன்ற அனுச்சாரங்களை ஒழிப்பதில் ஈடுபட்டார்கள்.

எனவே இப்பிரச்சாரம் சூடான், சுமத்ரா, இந்தியா, இராக், ஷாம், எகிப்து, அல்ஜீரியா, ஜாவா, உமான், ஈரான் போன்ற நாடுகளில் பரவியது.

நாசங்கள், பித்அத், அனுச்சாரங்களை ஒழித்து இல்லாம லாக்கி கொள்கையைச் சரி செய்வதே இப்பிரச்சாரத்தைப் பரத்தி வந்த ஒவ்வொருவரின் நோக்கமாக இருந்தது. நாடு களில் நிலவிவந்த மோசமான நிலைமை எதிர்த்து வஹ்ஹாபி பிரச்சாரகர்கள் போராடினார்கள். "ஷெய்கு உதமான் பின் பூதி" என்பவர் சூடானில்(1) பிரச்சாரம் செய்து வந் தார். இவர் "பூலா" என்ற வம்சத்தைச் சார்ந்தவர். இவர் ஹஜ்ஜுக்கு வந்தபோது பிரச்சார உலமாக்களை சந் தித்து, அவர்களின் கொள்கையை அறிந்து ஏற்றார். ஹஜ்ஜை நிறைவேற்றியபின் தம் நாடு சென்று, அங்கு மக்கள் மத்தி யில் பரந்து காணப்பட்ட அனுச்சாரங்கள், மூடப் பழக்க வழக்கங்களை ஒழிக்கப் போராடினார். சூடானியர்கள் உள் ளத்தில் இஸ்லாமியக் கொள்கையோடு கலந்திருந்த சிலை வணக்கப் பழக்கங்களையும், இறந்தவர்களை வணங்குவதை யும் இல்லாமலாக்கப் பாடுபட்டார்.

உண்மையான இஸ்லாமியப் போதனைகளைப் பரத்தி இமாம் முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் அவர்களின் அடிப்படைகளை போதிக்கலானார். எனவே சிதறுண்டு

---

(1) சூடான் என்ற வார்த்தையை மேற்கு ஆப்பிரிக்கா விற்கு ஆசிரியர் புழங்கியுள்ளார்.

பிரிந்து காணப்பட்ட தம் குடும்பத்தினர்களை ஒன்று சேர்க்க முடிந்தது.

1802ம் ஆண்டு சில வணக்கக் கொள்கையில் இருந்து வந்த "ஹோசா" என்ற வம்சத்தவரோடு போராடி, "நைஜர்" ஆற்றங்கரையோரத்திலுள்ள "கபர்" என்ற அரசை வீழ்த்தினர். இரு ஆண்டுகளுக்குப் பின் வஹ்ஹாபிய பிரச்சார அடிப்படையில் "சூடானில்" "சூகடசு" என்ற அரசை உதுமான் உருவாக்கினர். இவ்வரசின் செல்வாக்கு அண்டை நாடுகளிலும் பரவிற்று. இவ்வாறு ஒருநூற்றாண்டு கழிந்தபின் ஐரோப்பிய ஏகாதிபத்தியம் இவ்வரசை கைப்பற்றியது.

இப் பிரச்சாரத்தின் செல்வாக்கு சூடானில் எவ்வாறு பரவியிருந்ததோ அதைப்போன்று, ஸய்யிது அஹமது என்ற பெரியார் மூலம் இந்தியாவின் வடபகுதியில் பல பாகங்களிலும் பரவியது.

ஸய்யிது அஹமது இந்தியத் தலைவர்களில் ஒருவராக இருந்தார். இவர் ஹஜ்ஜுக் கடமையை நிறைவேற்றுவதற்காக 1816ம் ஆண்டு மக்காவிற்கு வந்தபோது, அங்கு வஹ்ஹாபிய பிரச்சாரகர்களைச் சந்தித்து அப்பிரச்சாரத்தின் உண்மையை உணர்ந்தார். மேலும் உண்மையான இஸ்லாமியப் பிரச்சாரகர்களில் ஒருவராக மாறிவிட்டார்.

1820ம் ஆண்டு இந்தியா திரும்பிச் சென்று, தம்சொந்த ஊரான "பங்கான்" பகுதியில் ஹிந்துக்கள் பழக்கவழக்கங்களில் வாழ்ந்து வந்த முஸ்லிம்களுக்கு அழைப்புக் கொடுக்கத் தகுந்த வாய்ப்பைப் பெற்றபோது, பாட்னா நகரில் தம் பிரச்சாரத்தைத் துவங்கினர்.

இஸ்லாத்தின் உண்மையான அடிப்படைகளைப் பின்பற்றுமாறு தம் இஸ்லாமிய சகோதரர்களை அழைத்தார். அவர்களுக்கிடையில் பரவியிருந்த ஹிந்துக்களின் பழக்கங்களை விட்டு விடுமாறு கூறினர். இப்பிரச்சாரத்தின் பாதையில் பல தியாகங்கள் செய்த பின்பு, பஞ்சாப் பகுதியில் இஸ்லாமியப் பிரச்சாரத்தின் அடிப்படையில், செய்யது அஹ்ம

தின் தலைமையின் கீழ் ஓர் இஸ்லாமிய அரசை உருவாக்கினார்கள். ஆனால் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பகுதியில் ஏற்பட்ட ஆங்கிலேயர் ஆதிக்கத்தின் காரணத்தால் இவ்வரசு நீண்ட நாட்கள் இருக்கவில்லை. இருப்பினும், பிரச்சாரம் ஸய்யிது அஹ்மதின் ஆதரவாளர்கள்மூலம் பரந்து வந்தது. அதை ஆங்கிலேய ஏகாதிபத்தியம் ஒன்றும் செய்ய முடியவில்லை.

1803ம் ஆண்டு இப்பிரச்சாரம் "சுமத்திரா"விலும் அங்கிருந்து ஹஜ் செய்வதற்கு வந்த ஒருவரின் மூலம் பரவ ஆரம்பித்தது. இவர் மக்கா வந்தபோது பிரச்சாரத்தின் தலைவர்களை சந்தித்து, அதன் உண்மைகளை அறிந்து தம்நாடு திரும்பிச் சென்று, அதை மக்கள் மத்தியில் பரத்தினார். பின்பு சுமத்திராவில் மாபெரும் செல்வாக்கைப் பெற்றிருந்த வஹ்ஹாபியர்களுக்கும், மற்றவர்களுக்குமிடையில்பல சண்டைகள் நடந்தன. 1821ம் ஆண்டு ஹாலண்டு ஏகாதிபத்திய அரசு சுமார் பதினாறு ஆண்டுகள் முஸ்லிம்களோடு போர் செய்து தனது ஆதிக்கத்தை சுமத்திராவில் நிலை நாட்டியது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பகுதியில் "அஸ்ஸனூஸிய்யா" என்ற இயக்கத்தை உருவாக்கிய "ஸய்யது முஹம்மது அலி ஸனூஸி" என்பவர் மக்காவில் கல்வி பயின்று கொண்டிருக்கும்போது, வஹ்ஹாபியர்கள்மக்காவைவெற்றி கண்டார்கள். இவர் வஹ்ஹாபிய பிரச்சாரகர்களுடன் சேர்ந்து, உண்மைகளை அறிந்து பின் தம் நாடான "அல்ஜீரியா"விற்குச் சென்று அங்கு இப்பிரச்சாரத்தைப் பரப்பினார்.

பின்பு இப்பிரச்சாரம் தராப்லஸ், ஆப்பிரிக்காவின் வடபகுதியில் பல பாகங்களிலும் பரவி சூடானை எட்டியது. அங்கு ஆங்கிலேயர்களின் ஏகாதிபத்தியத்தை எங்கும் எதிர்த்தது. ஸனூஸியர்களுக்கு ஒரு பள்ளிக் கூடமாகவும் அமைந்தது.

''அஸ் ஸய்யிது முஹம்மது ரஷீது ரிளா'' என்பவர் மூலம் இப்பிரச்சாரம் ஹளரமௌத், ஜாவா போன்ற நாடுகளில் பரவியது. அங்குள்ள அதிகமான மக்கள் இதனுல் பயனடைந்து இதை ஆதரித்தனர்.

சுருங்கக்கூறின் இப்பிரச்சாரம் பல கோணங்களில் இஸ்லாமிய உலகிற்கு மாபெரும் பயனளித்துள்ளது. இஸ்லாமிய உலகில் ஒரு புதிய விழிப்புணர்ச்சியை தூண்டிய முதல் ஜோதியாகும். இஸ்லாமிய உலகின் பல பாகங்களிலுமுள்ள சீர்திருத்தத் தலைவர்கள் இதனுல் பல பயன்கள் பெற்றுள்ளனர்.

எல்லாச் சீர்திருத்த இயக்கங்களும் வஹ்ஹாபிய பிரச்சாரத்தின் பட்டணமாக அமைந்துள்ளன. இவ்வியக்கங்களுக்கும், வஹ்ஹாபிய பிரச்சாரத்திற்குமிடையில் ஏதோ ஒன்றில் ஒரு தொடர்பை காண முடியும்.

## முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாபிற்கு அறிஞர்கள் பாராட்டு(1)

1. ''புலூகுல்மராம்'' என்ற ஹதீஸ் கிரந்தத்தின் விளக்கவுரையான ''சுபுலுஸ்ஸலாம்'' என்ற நூலை எழுதிய எமன் நாட்டைச் சார்ந்த 'முஹம்மது பின் இஸ்மாயீல் (ரஹ்) என்பவர்கள் ''இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாபை பாராட்டிப் பாடிய ஒரு கவியில் வந்த சில பகுதிகள் :

''செயல் படுத்தப்படாமலிருந்துவந்த இஸ்லாமிய ஷரீஅத்துச் சட்டத்தைச் செயல்படுத்தி, பித்அத், அனுச்சாரங்களை ஒழிக்க வந்தவர் இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப், இது நான் முற்றிலும் விரும்புகின்ற ஒன்றுகும்.

---

(1) ஆசிரியர் குறிப்பிட்ட 42 பேர்களில் சிலரின் பாராட்டை மட்டும் சுருக்க இங்கு மொழி பெயர்த்துக் கூறுகின்றேன்.

ஆதிகாலத்து மக்கள் எவ்வாறு சுவாவு, எஹூது, உத்ஜ, என்ற சிலைகளைக் கடவுளென மதித்து வந்தார்களோ, அதைவிட மிக மோசமாக கப்றுகளை வணங்கி, அதற்கு எத்தனையோ கிடாய்கள் அறுத்துப் பலியிட்டு, அவற்றைச் சுற்றி தவாப் செய்து, அதனடியில் இஃதிகாப் இருந்து, அவற்றை முத்தி, மோந்து, துன்பங்கள் நேரும்போது அவற்றிடம் சென்று ஓலமிட்டு அழுது ஒப்பாரி வைத்து, தேவைகளைக் கோரி வந்த மக்களை நேர்வழியின்பால் அழைக்க வந்தவரே முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள்.

இடிபட்டு சிதறுண்டு கிடந்த ஷரீஅத்துச் சட்டத்தை நிலைநாட்டி, நேர்வழியை விட்டுத்தவறிமனம்போனபோக்கில் திரிந்த மக்களுக்கு ஒளி விளக்காக வந்தவர் இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் :

மூடக் கொள்கையின் உச்சக்கட்டத்தை எட்டிப் பிடித்திருந்த அம்மக்களை உண்மையான இஸ்லாமியக் கொள்கையின்பால் அழைத்ததனுல் இவர்களை மக்கள் பழித்தார்கள், இழிவாகப் பேசினுர்கள். இப்பழிச் சொல்லையெல்லாம் பொருட்படுத்தாது குர்ஆன், ஹதீஸிலிருந்து தகுந்த ஆதாரங்களை எடுத்துக்கூறி, தம் பிரச்சாரத்தில் தீவிரமாகச் செயல்பட்டு வந்தார்கள்.

இந்தக் கொள்கை எனக்கு மட்டும் சொந்தமானது என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனுல் இவர்களின் கொள்கை எனது கொள்கைக்கு முற்றிலும்ஒன்றுபட்டுள்ளது. இவர்கள் பிரச்சாரம், மங்கிப்போய்கிடந்த ஷரீஅத்துச் சட்டத்தை செயல் முறையில் மீண்டும் கொண்டுவரக் காரணமாக இருந்தது.(1)

---

(1) கவியின் சுருக்கம் இங்கு கூறப்பட்டுள்ளது. இவர்கள் பாராட்டியது போன்றே ஷெய்கு முஹம்மது பின் அஹ்மது ஹிப்ளி, ஷெய்கு ஹுஸைன் பின் கன்னும் அஹ்ஸாயீ, ஷெய்கு இம்ருன் பின் அலி பின் ரிஸ்வான், ஷெய்கு அஹ்மது பின் முஷ்ரிப் அஹ்ஸாயி போன்ற பெரியார்களும் இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்களை கவிகள் மூலம் பாராட்டியுள்ளார்கள்.

2. ''பத்ஹுல்கதிர்'' என்ற தப்ஸீர் ''நைலுல் அல்த்தார்'' போன்றபெரும் நூல்கள் எழுதிய "முஹம்மது பின்அலி அஷ்ஷவ்கானி (ரஹ்) என்ற பெரியார் பாராட்டிக் கூறிய ஒரு கவியின் சுருக்கம் ;

இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்களின் இறப்பால் மார்க்க அறிவும் இறந்து விட்டது. உண்மையின் முகம் பெரும் பாராங் கற்களுக்கிடையில் பதுங்கிக் கொண்டது.

இவர் நேர்வழியின் தலைவராகவும் இழிவுகளை ஒழிப்ப வராகவும், தனது அறிவினால் எதிரிகளை அடக்கக் கூடிய வராகவும், இருந்தார்கள். மக்களுக்குத் தலைவராகவும், காலத்தின் கல்விமானாகவும், அறிஞர்களுக்கு முதல்வராக வும், எனக்கு முன்மாதிரியாகவுமிருந்தார்கள்.

புகழின் எல்லையை எட்டிப்பிடித்துப் பல சிறப்புகளைப் பெற்றார்கள். இவரால் அராபியா முழுவதும் ஒளிபெற்று, உண்மை உலகெங்கும் பரவ ஆரம்பித்தது. பெருமானார் (ஸல்) அவர்கள் எவ்வாறு மூடக்கொள்கைகளை எதிர்த்து, ஏகத்துவக் கொள்கையை நிலை நாட்டினார்களோ, அதைப் போன்று அவர்களை அப்படியே பின்பற்றிய இவர்கள் ஏகத்துவக்கொள்கையை நிலைநாட்டுவதில் ஒருமாபெரும் புரட்சியை உண்டு பண்ணினார்கள்.

இவர்களுடைய பிரச்சாரம் இருந்திருக்க வில்லையானால் இஸ்லாமிய ஷரீஅத்துச் சட்டங்கள் உயிர் பெற்றெழுந்திருக் காது; ஏகத்துவக் கொள்கையில் ஊனமுற்றிருந்த மக்கள் நேர்வழி பெற்றிருக்க மாட்டார்கள்;

இவர்களை இழிவாகப் பேசுகின்றவர்களே! இவர்கள் தம் மூதாதைகள் பாதையின் பாலோ, ஒரு புதிய கொள்கையின் பாலோ அழைக்கவில்லை, பெருமானார் (ஸல்) அவர்கள் எதை நமக்கு விட்டுச் சென்றார்களோடு அந்த குர்ஆன், ஹதீஸின் பாலே நம்மை அழைத்தார்கள். எனவே விழிப் புணர்ச்சி பெற்று சிந்தித்துச் செயல்படுங்கள்.

3. ''இராக்'' நாட்டைச்சார்ந்த மஹ்மூது சுக்ரிஆலூசி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

ஷைய்கு முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அறிஞர்கள் குடும்பத்தில் பிறந்தார்கள். இவர்கள் தந்தை அப்துல் வஹ்ஹாப் ஹன்பலிமத்ஹபில் பேரறிஞராகவும், ஹிஜ்ரி பன்னிரண்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் உயைனா, ஹரீமலா என்ற ஊர்களில் நீதிபதியாகவும் பணியாற்றினார். ஹதீஸ்பிக்ஹ் போன்ற கலைகளில் மிகத் தேர்ச்சி பெற்றிருந்தார். ஷெய்கு அப்துல் வஹ்ஹாபின் தந்தை ஷெய்கு சுலைமானும் மார்க்க அறிவில்தேர்ச்சிபெற்றவராகவே இருந்தார்.

முஹம்மது தம் மூதாதைகள் வழியிலில்லாமல் சுன்னத்தைப் பின்பற்றுவதிலும், அதைப் பேணுவதிலும் மிகக் கடுமையானவர்களாகவும், உண்மையை மறுக்கின்ற உலமாக்களை எதிர்க்கின்றவர்களாகவுமிருந்தார்கள்.

சுருங்கக்கூறின் முஹம்மது நல்லவற்றை ஏவி, தீயவற்றைத் தடுப்பவர்களாகவும் மக்களுக்கு இஸ்லாமியக் கல்வி ஞானங்களைப் போதிப்பவர்களாகவுமிருந்தார்கள். வழிபாட்டின் மீதும், இஸ்லாமிய அடிப்படைகளை அறிவதின் மீதும் மக்களுக்கு ஆர்வமூட்டினார்கள். எல்லாப்பள்ளிவாயில்களிலும் மார்க்க அறிவை மக்களுக்குப் போதிக்குமாறு எல்லா ஊர் மக்களையும் வேண்டினார்கள்.

ஏகத்துவக் கொள்கையின் பால் மக்களை அழைத்து, துஆ, குர்பானி, நேர்ச்சை செய்தல், உதவி தேடல், பாதுகாவல் தேடல் போன்ற அல்லாஹ்விற்குச் செய்ய வேண்டிய வணக்கங்களை வேறு யாருக்கும் செய்யலாகாது என்றே மக்களை முதல் முதலாக அழைத்தார்கள்.

அறியாதவர்களாக இருந்து வந்த அதிகமான நஜ்து வாசிகள் இவர்கள் போதனைகளால் அறிவு பெற்றார்கள்.

4. ''அமீர் ஷகீப் அர்ஸலான்'' என்பவர் தம் ''ஹாலிருல் ஆலமில் இஸ்லாமி'' (தற்கால இஸ்லாமிய உலகம்) என்ற புத்தகத்தில் கூறுகிறார்.

முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் தமாஸ்கஸ் (திமஷ்கு) பக்தாத், பஸரா போன்ற நாடுகளில் கல்வி பயின் றார்கள், இப்னுதைமிய்யா, இப்னுல் கையிம் மேலும் ஹன்பலி மத்ஹபின் தலைசிறந்த உலமாக்கள் எழுதிய புத்த கங்களை அதிகமாகப்படித்தார்கள். ஆரம்ப காலத்திலிருந்தே உண்மையான இஸ்லாமியக் கொள்கையின்பால் மக்களை எவ்வாறு திருப்புவதென்பதில் நீண்டநாள்கள் சிந்தித்தார் கள். எனவே இவர்கள் கொள்கைக்கு (அகீததுஸ்ஸலப்) என்று கூறப்படுகிறது.

மக்கள் அவ்லியாக்கள் மீது வைத்திருந்த மூட நம்பிக்கை களையும், புதை குழிகளுக்குப் போய் அங்கு தவறாக நடந்து கொள்வதையும், அல்லாஹ்விடம் உதவிதேடாமல் இறந்து போனவர்களிடமிருந்து உதவி தேடுவதையும் வன்மையாகக் கண்டித்தார்கள். அவர்கள் கூறுகின்ற ஒவ்வொன்றிற்கும் குர்ஆன், ஹதீஸிலிருந்து தெளிவான ஆதாரம் காட்டினார் கள்.

5. எகிப்தில் ''அன்ஸாருஸ் ஸுன்னத்'' என்ற இயக் கத்தின் தலைவர் ''ஷெய்கு முஹம்மது ஹாமிது அல்பிக்ஹி'' என்ற அஸ்ஹர் அறிஞர்களில் ஒருவர் கூறுவது :

''வஹ்ஹாபிய்யா'' என்று ஹிஜ்ரி பன்னிரண்டாம் நூற்றாண்டின் சீர்திருத்தவாதியான முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் அவர்களின் பிரச்சாரத்தைக் கூறுவது அரபி இலக்கணப்படி முறையற்றதாகும்.

இப்பிரச்சாரத்தை உருவாக்கியவர் பெயர் முஹம்மது எனவே இதற்கு ''முஹம்மதிய்யா'' என்று பெயர் கூறுவதே சரியானதாகும்.

இவர்கள் ஹன்பலி மத்ஹபில் அதிகப் பற்றுடையவர் களாக இருந்தார்கள். இவர்களைப் பின்பற்றியவர்கள், ''முஹம்மது ஒரு புதிய மத்ஹபை உண்டாக்கிவிட்டாரென ஒருபோதும் சொல்லவில்லை.

இவர்கள் புதிதாக ஒரு அறிவை உண்டு பண்ணிக் கூறவில்லை. முன் சென்ற பெரியார்கள், நல்லவர்கள் கூறியதையே போதித்தார்கள்.

அல்லாஹ்வின் திருநாமங்களையும், பண்புகளையும் வந்ததுபோன்று அப்படியே நம்பினார்கள். ஸஹாபாக்களும், இமாம்களும் இருந்து வந்த வழியிலேயே இவர்களும் செயல் பட்டார்கள். ஸஹாபாக்களையும், இமாம்களையும் பின் பற்றுவதாலேயே ஒருவன் சொல்லும் ஏகத்துவக் கலிமா உண்மையாகின்றது.

6. இமாம் ''ரஷீதுர் ரிலா'' என்பவர்கள் கூறுவது.

அனுச்சாரங்களும். பித்அத் என்னும் புதுமைகளும் மலிந்து காணப்பட்ட ஒவ்வொரு நூற்றுண்டிலும் போதனை யாலும், நற்பண்புகளாலும் இஸ்லாமிய மார்க்கத்தைப் புதுப்பிக்கின்ற உண்மையான தெய்வீகஉலமாக்கள் இருந்தே வந்தார்கள். முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள் இவர்களில் ஒருவராக இருந்தார்கள். இவர்கள் மக்களை ஏகத்துவத்தின்பாலும், வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் வைத்தவிர வேறுயாருமில்லை எனவே அல்லாஹ் ஒருவனையே வணங்கவேண்டும்; அவ்வணக்கம்அல்லாஹ்வும், பெருமானார் (ஸல்) அவர்களும் காட்டித்தந்த அமைப்பிலிருக்கவேண்டும், என்பதின்பால் அழைத்தார்கள். பாவங்கள், புதுமைகள் புரிவதைவிட்டு விட்டு, மங்கிப்போன இஸ்லாமியச் சட்டங் களை நிலை நாட்ட மக்களை அழைத்தார்கள். இவர்களை மூன்று வித சக்திகள் எதிர்த்தன.

1. அரசு அதிகாரிகள் 2. அரசிற்கு ஆதரவாக இருந்த நயவஞ்சக உலமாக்கள் 3. வழிகேட்டில் இருந்து வந்த பொதுமக்கள்.

ஷெய்கு முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாபை எதிர்த் தோர் யாரெனில் கொள்ளையும், கொலையும் புரிந்து அறியா மைக் கால மக்களை விடமிக மோசமான வாழ்க்கை நடத்தி வந்த சில காட்ட ரபிகளாவார்கள். இவர்கள் முஸ்லிம்களைக் கொலைபுரிந்து. அதிகமான இஸ்லாமியச் சட்டங்களை மன

முரண்டாக மறுத்து வந்தவர்கள். இவர்களைத் தவிர அறிவு படைத்தவர்கள். யாரும் ஷெய்கு முஹம்மதை எதிர்க்க வில்லை.

ஷெய்கு முஹம்மதுபின் அப்துல்வஹ்ஹாபை எதிர்க்கின்றவர்கள் கூறிய காரணம் என்னவெனில் அவர் அதிகமான முஸ்லிம்களுக்கு மாறு செய்கின்றார்கள் என்பதே யாகும். (அதிகமானவர்கள் புரிவது ஆதாரமல்ல என்பதை இவர்கள் அறியவில்லை.)

7. டாக்டர். தாஹா ஹுஸைன் கூறுகிறார்:

அராபியாவின் இலக்கிய அறிவியல் வாழ்க்கையை ஆராய்கின்றவர்கள். அங்கு பதினெட்டாம் நூற்றாண்டின் பகுதியில் உருவான கடுமையான புரட்சியை அறியாமலிருக்க முடியாது, அப்புரட்சியின் பால் கிழக்கத்தியவர்களும், மேற்கத்தியவர்களும் சிந்தனை செய்தனர். இப்புரட்சி அவர்கள் மத்தியில் பிரச்சினைக்குரிய விஷயமாக மாறியது. தற்போது அப்புரட்சி அராபியாவில் மாத்திரமின்றி, ஐரோப்பா முழுவதும் பரவி மக்கள் மத்தியில் ஓர் இடத்தைப் பெற்று விட்டது. அப்புரட்சி தான் முஹம்மதுபின் அப்துல்வஹ்ஹாபுடைய கொள்கைப் புரட்சியாகும்.

இது தற்கால மக்களுக்கு ஒரு புதுமைப்புரட்சியாகத் தென்பட்டாலும், உண்மையில் இஸ்லாத்தின் ஆரம்பகாலத்தில் ஏற்பட்டபுரட்சி இது. ஏனெனில் இணைவைப்பு, புதுமைகள் புரிவதை விட்டு, உண்மையான இஸ்லாமியக் கொள்கையின்பால் மக்களை அழைப்பது ஆகியவைதான் இப்புரட்சியின் இலட்சியமாகும். அதுவே பெருமானார் (ஸல்) அவர்கள் கொண்டு வந்த இஸ்லாமிய அழைப்பு மாகும். அறியாமைக் கால மக்களின் வாழ்க்கையின்பால் அரபிகள் திரும்பிவிட்டதைக் கடுமையாகக் கண்டித்து இஸ்லாத்தை உயிர்பெறச் செய்தார்.

துருக்கியர்களும், எகிப்தியர்களும் இவர்களை எதிர்த்து ஆயுதம்தாங்கிப் போர் புரியாமலிருந்திருப்பார்களானால் இஸ்லாத்தின் முதல் நூற்றாண்டில் அராபியர்கள் ஒன்று

சேர்ந்ததுபோல் ஹிஜ்ரி பன்னிரண்டாவது நூற்றுண்டிலும் ஒன்று சேர்ந்திருக்கமுடியும், என்றலும் முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் மடிந்துகிடந்த அரபியர்கள் உள்ளத்தை வாளாலும். பேனுவிலுலும் போராடி உயிர் பெறச் செய்து. அரபியர்களின் இலக்கிய அறிவியல் வாழ்க்கையில் ஓர் இடத்தைப் பெற்று விட்டார்கள்,

8. ''அரபிய தீவு'' என்ற புத்தகத்தில் ''ஹாபிஸ் வஹ்பா'' என்பவர் கூறுவது.

முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் இஸ்லாத்தைப் புதுப்பிக்க வந்த ஒரு சீர்திருத்த வாதியாவார்கள். இஸ்லாத்தின் உண்மையான கொள்கையின்பால் மக்களை அழைக்க வந்தவர்கள், அவர்களுக்கென தனி போதனைகளோ, தனிக் கொள்கைகளோ இருக்கவில்லை, அவர்கள் ஹன்பலி மத்ஹபின் சட்டத்தையே செயல் படுத்தினுர்கள். கொள்கையில் ஸஹாபாக்கள். தாபியீன்களைப் பின்பற்றினுர்கள். இவர்களின் போதனைகள் இப்னுதைமிய்யாவும், அவர்கள் மாணவர்களும் எழுதிய போதனைகளைப் போலவே இருந்தன

9. ''ஐரோப்பிய வரலாறு'' என்ற புத்தகத்தில் ''முஹம்மதுபின் காஸிம்'' என்பவர் கூறுகிறுர்

வஹ்ஹாபியர்கள் தங்களின் கொள்கையில் சுன்னத் ஜமாஅத்தையே பின் பற்றுகிறுர்கள், அவர்களுடைய கொள்கையின் அடிப்படை தவ்ஹீதை நிலைப்படுத்துவதேயாகும்.

10. காவுண் வாய்ஸ் என்ற ஆங்கில எழுத்தாளரை எதிர்த்து ''மினஹ் ஹாருன்'' என்பவர் கூறுகிறுர்.

சவூதிய அரசு விரிவடைந்து இராக், சிரியா, எமன் நாடுகளை பயமுறுத்தியது அரபியர்களுடைய புகழை மீட்கப் போராடிய ''அப்துல் அஜீஸ் பின் சவூதை'' விட்டும் அரபியர்கள் உள்ளத்தைத் திருப்ப நினைத்த உதுமானிய அரசு, அதைச் செய்ய இயலாமலாகிவிட்டது. எப்படியாவது சவூதி அரசின் வளர்ச்சிக்குத் தடை போட நினைத்த உதுமானியர்கள், முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாபின் பிரச்

சாரத்தின்மீது பல பொய்களை இட்டுக் கட்டி மக்கள் மத்தியில் கொந்தளிப்பை ஏற்படுத்தினர். இமாம்களுக்கிடையில் கருத்து வேறுபாடுள்ள மஸ்அலாக்களை ஆயுதமாகப் பயன் படுத்தி, மக்களிடத்தில் முஹம்மது ஒரு புதிய மத்ஹபை உருவாக்கியுள்ளார் எனக்கூறி, குழப்பத்தை உண்டுபண்ண நாடி அம்மஸ் அலாக்களுக்கு 'வஹ்ஹாபி மத்ஹப்' என்று பெயர் கூறினர்கள். ஆனால் உண்மையில் முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் அவர்களும், அவர்களைச் சார்ந்தவர்களும் ஹன்பலி மத்ஹபின்படியே செயல்பட்டார்கள். புதிதாக எதையும் கூறவில்லை இமாம்களும், சஹாபாக்களும் எதைக் கூறிச் சென்றார்களோ, அதையே கூறினர்கள். ஹன்பலி மத்ஹபிற்கு மாறாக எதையும் அவர்கள் சொல்லவில்லை.

11. ''நதீமுல் அதப்'' என்ற நூலின் ''அஹமது பின் ஸயீது பக்தாதி'' என்பவர் கூறுகிறார்.

வஹ்ஹாபியர்கள் ஹன்பலி மத்ஹபையே பின்பற்றுகிறார்கள். கொள்கை சம்பந்தமாக வரலாற்றாசிரியர்கள் சிலர் கூறிக் கொள்பவைகள் ஆதாரமற்றவையாகும், இவர்களின் புத்தகங்களைக் கூர்ந்து படிக்கின்றவர்கள் ஒன்றிற்கொன்று முரண்பாடான பல விஷயங்களைக் காணமுடியும். ஏனெனில் கிழக்கத்திய வரலாற்றாசிரியர்களில் அதிகமானவர்கள் எழுதிய புத்தகங்கள் ''பிரஞ்சு'' புத்தகங்களிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவையாகும். மொழிபெயர்ப்பவர்கள் எவ்வளவு திறமையானவர்களாக இருப்பினும், சில கருத்துச் சிதைவுகள் ஏற்படுகின்றன. மொழிபெயர்ப்பாளர் திறமையற்றவராக இருப்பாரானால் கருத்துச் சிதைவுகள் அதிகம் ஏற்படுமென்பதில் சந்தேகமில்லை.

இவர்களில் சிலர்; ''வஹ்ஹாபிகள் பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களைப் புகழ்வதையும் அவர்களை கண்ணியப் படுத்துவதையும் தடுக்கிறார்கள்! குர்ஆன் கதீமானதெனக் கூறுகிறார்கள்,'' என்று கூறுகின்றனர். இவர்களின் இந்தக் கூற்றில் முரண்பாடிருப்பதைக் காணுகின்றோம்.

அதாவது குர்ஆனை நம்புகின்ற ஒருவன் அதில் உள்ளவை அனைத்தையும் நம்பியே ஆகவேண்டும்.

குர்ஆனில் பெருமானார் (ஸல்) அவர்கள் புகழ் பல இடங்களில் வந்துள்ளது.

அல்லாஹ் குர்ஆனில் கூறுகின்றான்.

اِنَّكَ لَعَلٰى خُلُقٍ عَظِيْمٍ۔

"(முஹம்மதே) நிச்சயமாக நீர் சிறந்த பண்புடையராக இருக்கின்றீர்.)

மேலும் கூறுகின்றான்:

اِنَّ اللّٰهَ وَمَلٰٓئِكَتَهٗ يُصَلُّوْنَ عَلَى النَّبِيِّ يٰٓاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا صَلُّوْا عَلَيْهِ وَسَلِّمُوْا تَسْلِيْمًا۔

(நிச்சயமாக அல்லாஹ்வும், மலாயிகத்துகளும் நபி முஹம்மது (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்துச் சொல்கிறார்கள், (எனவே) ஈமான் கொண்ட விசுவாசிகளே நீங்களும் அவர்கள் மீது ஸலவாத்தும், ஸலாமும் சொல்வீர்களாக.)

இதுபோன்ற எத்தனையோ வசனங்கள் அவர்களைப் புகழ்கின்றன.

முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் தடுத்தது என்னவெனில், அல்லாஹ்விற்குச் சொந்தமான பண்புகளை பெருமானார் (ஸல்) அவர்கள் மீது கூறி, அவர்கள் மறைந்தவற்றையெல்லாம் அறிகிறார்கள் என கிறிஸ்தவர்கள் நபி "ஈசா" (அலை) அவர்கள் மீது கூறியதுபோன்று கூறுகிறீர்கள் என்றே தடுத்தார்கள். ஏனெனில்,

பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு துஆவில் கூறினார்கள்:

''இறைவா எனது கப்றை வணங்கப்படும் சிலை போன்று ஆக்கி விடாதே''(1)

வஹ்ஹாபிகளின் கொள்கையைப் பற்றி விளக்கமாக அறிய விரும்புகின்றவர்கள் ஹன்பலி மத்ஹபின் புத்தகங்களைப் படிக்கட்டும். ஏனெனில் அது இவர்கள் மத்ஹபாகும்.

எகிப்தியர்கள் வஹ்ஹாபியர்களோடு போர் புரியக் காரணம் என்னவெனில், முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாபும், இப்னு சவூதும் புரட்சி செய்தபோது அவர்களுடன் அரபியர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து, இஸ்லாமிய மார்க்கத்தை உயிர்ப்பிக்கப் புத்துணர்ச்சிப் பெற்று எழுந்ததைக் கண்ட இங்கிலாந்தும், பிரஞ்சும் பிற்போக்கிலிருக்கும் முஸ்லீம்கள் உணர்ச்சிப் பெற்று எழுந்து இவர்களோடு இணைவதைக் கண்டு பயந்தது. ஏனெனில் அவ்வாறு இணையும்போது கலீபா உமர் (ரலி) அவர்கள் காலத்திலிருந்த இஸ்லாத்தை மீண்டும் பெற்று மார்க்கப் போர்களும், இஸ்லாமிய வெற்றிகளும் ஏற்பட்டு அதனால் ஐரோப்பாவிற்கு மிகப் பெரிய சேதம் ஏற்படும் எனவும் அஞ்சியது. எனவே, அன்று அராபியாவில் ஆட்சி செய்து வந்த துருக்கி நாட்டைச்சார்ந்த முஹம்மதலி பாஷாவை வஹ்ஹாபியர்களோடு போர் செய்யத் தூண்டினர். இதனால் பல சேதங்கள் ஏற்பட்டன.

முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாபைப்பற்றி அறிவீனர்கள் கூறிக்கொள்பவைகளை விட்டும் இவர்கள் நிரபராதிகளாவார்கள். இவர்களை தவறாக பேசுகின்றவர்கள். அல்லாஹ்விடத்தில் பாவத்திற்குரியவர்களாவார்கள்.

12. ''அல் அஃலாம்'' என்ற நூலில் ''சர்கலி'' என்பவர் கூறுகிறார்.

---

(1) மேலும் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள் (கிறிஸ்தவர்கள் மரியமுடைய மகன் நபி ஈசா (அலை) அவர்கள் மீது வரம்பு மீறி கூறியது போன்று என்மீது கூறிவிடாதீர்கள்.)

முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அராபியாவின் ஒரு இஸ்லாமிய புதிய சீர்திருத்தப் புரட்சிதலைவராக இருந்தார்.

இவருடைய பிரச்சாரம் இஸ்லாமிய உலகில் புதிய விழிப் புணர்சி ஏற்பட முதல்தீபகற்பமாக அமைந்தது.

இந்தியா, எகிப்து, இராக், சிரியா போன்ற நாடுகளி லுள்ள சீர்திருத்தத் தலைவர்கள் மத்தியில் ஓர் மாறு தலை ஏற்படுத்தியது.

ஆலூசி, ஜமாலுத்தீன் அப்காானி, முஹம்மது அப்துஹூ, ஜமாலுத்தீன் காஸிமி, சித்தீக் அலிகான் போன்ற மேதை கள் இப்பிரச்சாரத்தால் வெளியானவர்களாவார்கள் ஏகத்துவக் கொள்கையை நிலைநாட்ட ஏற்பட்ட புரட்சியே இப்பிரச்சாரம், இதன் எதிரிகள் இதை வஹ்ஹாபிய்யா என்று பெயர் சூட்டி அழைத்தார்கள்,

13. இந்தியாவைச்சார்ந்த ''முஹம்மது பஷீர் அஸ்ஸஹஸ்லானி'' என்பவர் தனது ''சியானதுல் இன்ஸான் அன் வஸ்வசதித்தஹ்லான்'' என்ற புத்தகத்தில் கூறுகிறார்.

ஹிஜ்ரி பன்னிரண்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் அராபியர்கள் அறியாமையை எட்டிப் பிடித்து, வழிகேட்டி லும், ஏழ்மையிலும், கொள்ளைகள், கொலைகள் புரிவதிலும் வாழ்ந்தார்கள் என்பது அவர்கள் வரலாற்றைபடிக்கின்றவர் களுக்கு தெரியவருகின்ற ஒன்றாகும்,

இவர்கள் மத்தியில் ஷேக் முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் உருவாகி தன் பிரச்சாரத்தால் ஷிர்க்கை அடியோடு இல்லாமலாக்கி, அனியாயக்காரர்களை ஒழித்து, பெருமானார் (ஸல்) அவர்கள் கொண்டு வந்த ஏகத்துவ தீபத்தை ஒவ்வொரு இல்லத்திலும் ஏற்றிவைத்தார்கள், இஸ்லாமியக் கடமைகளை எடுத்துச் செயல்பட்டு, விலக்கப் பட்டவைகளை விட்டும் தவிழ்த்து, ஒவ்வொரு செயலிலும் ஸலபுஸ்ஸாலிஹீன்களை பின் பற்றுமாறும் கூறினார்கள், இவர்கள் இப்பிரச்சாரத்தில் இஸ்லாமிய ஷரீஅத்துச் சட்டங் கள் செயல்படுத்தப்பட்டன, நல்லவைகளை ஏவி, தீயவைகளை

தடுப்பவர்கள் உருவானார்கள், அல்லாஹ்வின் திருநாமத்தை உயர்த்தி ஷிர்க்கை ஒழிப்பதற்காக மார்க்கப் போர் செய்தார்கள், இதனால் வேறுபட்டுக் கிடந்த உள்ளங்கள் ஒன்று பட்டன, எதிரிகளாக இருந்தவர்கள் சகோதரர்களாக மாறினார்கள், இழிவாக்கப்பட்டிருந்த அராபியா இன்று உலகமே நடுங்குமளவிற்கு பல முன்னேற்றங்கள் அடைந்துள்ளது.

இவ்வாறு தன் நீண்ட உரையில் பாராட்டுகிறார்.

14. அமெரிக்க வரலாற்றாசிரியர் ''ஸ்தூடார்டு'' என்பவர் ''தற்கால இஸ்லாமிய உலகம்'' என்ற புத்தகத்தில் கூறுகிறார்.

பதினெட்டாம் நூற்றாண்டில் இஸ்லாமிய உலகம் வீழ்ச்சியடைந்து, இருளில் மூழ்கி, ஒவ்வொரு பாகமும் குழப்பங்களும், மோசமான பண்பாடுகளும் பரவியிருந்தது,

மார்க்கம் இருண்ட போர்வையால் போர்த்தப்பட்டிருந்தது. பெருமானார் (ஸல்) அவர்கள் போதித்த ஏகத்துவக் கொள்கை, அனாச்சாரங்களால் மூடப்பட்டிருந்தது. பள்ளிவாயில்கள் தொழுகின்ற நல்லவர்களை விட்டும் காலியாக இருந்தது. எளியவர்கள் எண்ணிக்கையும், அறிவீனர்கள் பிரார்த்தனைகளும் அதிகமானது, தல்ஸமாத்களையும், தஸ்பீஹ்களையும் கழுத்தில் சுமந்து கொண்டு இங்கும் அங்குமாக அலைந்தார்கள். மக்களை தவறுகளிலும், சந்தேகங்களிலும் வீழ்த்தி அவுலியாக்கள் கப்றுகளுக்குச் சென்று ஹஜ்ஜு செய்யுமாறும், அவைகளிடம் தேவைகளை கோருமாறும் தூண்டினார்கள். குர்ஆனின் சிறப்பு மறைந்தது, ஒவ்வொரு இடத்திலும் மதுவையும், அபினையும் அருந்தி வந்தார்கள், இழிச்செயல்கள் பரந்து, கண்ணியங்கள் பங்கப்படுத்தப்பட்டன. மக்காவும், மதீனாவும் சாதாரணப்பட்டணங்களைப் போன்று மாறியது. சுருங்கக் கூறின் முஸ்லீம்கள் முஸ்லீம்களாக வாழவில்லை, பெருமானார் (ஸல்) அவர்கள் மீண்டும் உலகிற்கு வந்து முஸ்லீம்கள் நிலையை பார்ப்பார்களானால்

மத மாறியவர்களை சபித்தது போன்று இம்முஸ்லிம்களையும் சபித்திருப்பார்கள்.

இந்த அவல நிலையில் வீழ்ந்து கிடந்த முஸ்லீம்களை உணர்ச்சி பெறச் செய்கின்ற ஒரு சப்தம் அராபிபா பாலை வனத்திலிருந்து வெளியாகி, மக்களை உண்மை இஸ்லாத்தின் பால் அழைத்தது. அச்சப்தத்திற்குரியவர்தான் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் என்பவர். இவர் வஹ்ஹாபிய பிரச்சார ஒளியை இஸ்லாமிய உலகெங்கும் பரவச் செய்தார், இஸ்லாமிய பழம் பெரும்சிறப்பை மீண்டும் பெற மக்களைத் தூண்டினர், இதனுல் இஸ்லாமிய உலகில் விழிப்புணர்ச்சி ஏற்பட்டது.

15. மேல்நாட்டு அறிஞர் ''சீடியோ'' என்பவர் கூறுகிறுர்.

அராபியா தனது பூரண சுதந்திரத்தை பதினெட்டாம் நூற்ருண்டின் ஆரம்பத்தில் பெற்றது. 1749ம் ஆண்டு வெளியான ஒரு குடும்பம் தான் இவ்வெற்றியைப் பெற்றுக் கொடுக்கக் காரணமாக இருந்தது. அக்குடும்பம் தான் இன்றுவரை செயல்பட்டு, இனியும் செயல்படவிருக்கின்ற வஹ் ஹாபிகளாவர்கள். இவ்வரசை உருவாக்கியவர்பெயர் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் என்பதாகும், இவர் சிறிய வயதிலேயே அரபி இலக்கணம், பிக்ஹ் ஞானம் போன்ற கலைகளை கற்பதில் மிக ஆர்வமுடையவராக இருந்தார். பிக்ஹ் மத்ஹபுகளை ஆராய்ந்து உணர்ந்தார். பக்தாத், பஸரா, ஈரான் போன்ற நாடுகளுக்குச் சென்று கல்வியை அதிகப்படுத்தினர். தன் உறவினர்களும், நாட்டு மக்களும் இஸ்லாத்தைப் பற்றிய போதிய அறிவின்றி மனம் போன போக்கில் வாழ்வதைக் கண்டார். திருக்குர்ஆனின் சட்டங்கள் செயல்படுத்தப்படுமானுல் சென்றுபோன நல்லவர்கள் சிறப்பை மீண்டும் பெற முடியுமென அறிந்தார், சென்ற காலத்தில் இருந்ததுபோன்று ஷரீஅத்துச்சட்டத்தை மீண்டும் செயல்படுத்த வேண்டும் என்பதையே தவிர வேறு எந்த குறிக்கோளும் இவர் பிரச்சாரத்திற்கு இருக்கவில்லை,

முஸ்லிம்கள் செய்து வந்த தீய செயல்களையெல்லாம் எதிர்த்துப் போராடினார். அவுலியாக்களின் கப்றுகளை வரம்புமீறி கண்ணியப்படுத்தி தவறுகள் புரிந்து வந்தவர்களை எதிர்த்து அவைகளை உடைத்தார்.

இஸ்லாத்தின் கடமைகளும், அதில் விதிக்கப்பட்டுள்ள தண்டனைகளும் முஸ்லிம்களால் செய்யப்பட்ட சதித் திட்டங்களாகும் எனக் கூறியவர்களோடு போராடி வெற்றி கண்டார். மார்க்க அறப்போரின் சிறப்பை மக்கள் உள்ளத்தில் பதித்து அவர்களை விழிப்புணர்ச்சி பெற செய்து அதனால் பல வெற்றிகள் பெற்றார்.

இவர் குர்ஆனில் உள்ளவைகளை முற்றிலும் செயல்படுத்திக் காட்டுவதுடன், அதற்காக உருவாக்கிய தன் அடிப்படையிலும் அமல் செய்தார், நஜ்து வம்சத்தார்களின் பெரும் தலைவர்கள் இப்பிரச்சாரத்தை ஏற்றுச் செயல்பட்டார்கள்.

பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் கொண்டு வந்த ஷரீஅத்துச் சட்டத்திற்கு புத்துணர்ச்சி அளித்தார். அனாச்சாரங்களை அடியோடு ஒழித்தார். குர்ஆனிற்கு தவறான பொருள் கொடுப்பவர்களை எதிர்த்து அவைகளை இல்லாமலாக்கி, அதன் உண்மைப் பொருளை மக்களுக்கு உணர்த்தினார். எனவே இவர் பிரச்சாரம் மக்கள் மத்தியில் நல்லதோர் இடத்தைப் பெற்றது.

16. ''வரலாற்றில் அரபியர்கள்'' என்ற புத்தகத்தில் ''பர்னாட் லூஸ்'' என்ற பிரஞ்சு அறிஞர் கூறுகிறார்.

ஹிஜ்ரி முதல் நூற்றாண்டில் எவ்வாறு இஸ்லாமிய மார்க்கம் தூய்மையாகக் காணப்பட்டதோ அவ்வாறு நாமும் ஆகவேண்டும் என்பதன் பால் மக்களை முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் அழைத்தார். கொள்கையிலும், வணக்க வழிபாட்டிலும் அதிகரித்து காணப்பட்ட இஸ்லாத்திற்கு எதிரான. பித்அத் அனாச்சாரங்களை விட்டு விடுமாறு மக்களை வேண்டினார்.

17. ''கொள்கையும் சட்டமும்'' என்ற புத்தகத்தில் ''ஆஸ்ட்ரியா'' நாட்டைச் சார்ந்த ''கோல்ட் சைஹர்'' என்ற மேலை நாட்டு அறிஞர் கூறுகிறார்.

சுன்னத் ஜமா அத்தார்களுக்கும், வஹ்ஹாபிய இயக்கத்திற்குமிடையிலுள்ள தொடர்பை நாம் அறிய விரும்பும் போது, உண்மையான மார்க்க வரலாறு சம்பந்தமான கருத்துக்கள்பால் நம் சிந்தனைகளை தூண்டுகின்ற எத்தனையோ விஷயங்களைப் பெற முடியும்.

பெருமானார் (ஸல்) அவர்களும் ஸஹாபாக்களும் எந்தக் கொள்கையில் இருந்தார்களோ, அந்த இஸ்லாமிய மார்க்கத்தின் ஆதரவாளர்களாக இருந்தார்கள் என்பதை, இஸ்லாமிய வரலாற்றில் நிகழ்ந்த சம்பவங்களுக்கு தீர்ப்பு வழங்கவிரும்புகின்றவர்கள் அறிவது அவசியமாகும்.

இஸ்லாம் ஆரம்ப காலத்தில் இருந்தது போன்று தற்கால மக்களிடையில் பரவவேண்டுமென்பதே வஹ்ஹாபியர்கள் இலட்சியமாகும்.

18. பிரிட்டானிய கலைகளஞ்சியத்தில் கூறப்பட்டுள்ளது.

''வஹ்ஹாபிய்யா'' என்பது இஸ்லாத்தை தூய்மையாக்குவதில் செயல்பட்டுவந்த ஒரு இயக்கத்தின் பெயராகும். வஹ்ஹாபியர்கள் பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் காட்டிய வழியை மாத்திரமே பின் பற்றுகிறார்கள். மற்ற எல்லாக் கொள்கைகளையும் விட்டு விடுகின்றார்கள். வஹ்ஹாபிகளின் எதிரிகள் உண்மையான இஸ்லாத்தின் எதிரிகளாவார்கள்.

19. மேல் நாட்டவர்கள் சிலர்களால் எழுதப்பட்ட ''கிழக்கத்தியவர்கள் கண்ணோட்டத்தில் இஸ்லாம்'' என்ற புத்தகத்தில் கூறப்பட்டுள்ளது.

நீங்கள் இஸ்லாமிய ஷரீ அத்துச் சட்டப்படி வாழுங்கள், அதுவே நீங்கள் முஸ்லீம்களாக ஆகிய நன் பொருளாகும்

என முதல் முதலாக முஸ்லீம்களுக்கு முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் கூறினார், சூபிய்யாக்கள் என்ற பெயரில் இருந்தவர்கள் கூறிக் கொள்பவைகள் ஷரீஅத்துச் சட்டத்திற்கு சம்பந்தப்பட்டவைகளல்ல, இஸ்லாத்தின் அடிப்படை என்பது ஷரீஅத்துச் சட்டமாகும், நீங்கள் முஸ்லீம்களாக வாழ விரும்பினால் ஷரீஅத்துச் சட்டக் கட்டளையின்படி வாழுங்கள் எனவும் மக்களுக்குக் கூறினார்.

20. ''அப்துல் அஜீஸ்'' என்ற புத்தகத்தில் ஜர்மன் நாட்டைச் சார்ந்த டாக்டர் ''டாக்பரீத்'' என்பவர் கூறுகிறார்.

சவூதி குடும்பத்தினர்கள் தங்கள் வெற்றிகளில் வாளைப் பயன்படுத்தியோடு மட்டுமல்லாமல் வேறு ஒரு சக்தியும் அவர்களுக்கு உதவியாக இருந்தது. இவர்கள் வெற்றியின்போது அதிகமானவர்கள் இந்த சக்திக்கு பணிந்திருந்தார்கள். அதுவே கொள்கையின் பாதையில் முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாபால் உருவாக்கப்பட்ட சக்தியாகும்.

அன்று சவூதி குடும்பத்தினர்களின் தலைநகராக இருந்து வந்த ''தரீயிய்யா'' என்ற ஊரில் முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் தங்கி, மக்களின் பாதுகாப்பைப் பெற்றார்.

அன்றைய மக்கள் முன் சென்ற நல்லவர்கள் வழியை விட்டும் தூரமாகி, பல பிரிவுகளாகப் பிரிந்து, அரபிப் பண்பாட்டை விட்டு அப்பால் பட்டு, அன்னியர்கள் ஆதிக்கம் தங்கள் நாட்டில் ஊடுருவுமளவில் மிக பிற்போக்காக இருந்தார்கள். இவர்களுக்குப் பொருத்தமான, மார்க்க அடிப்படையில், சக்தி வாய்ந்த புதியதோர் சிந்தனை முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாபின் உள்ளத்தில் உருவாகி மக்களை இஸ்லாத்தின் உண்மையான போதனையின்பால் அழைத்தார். மக்களை தவறுகளிலிருந்து காப்பாற்ற இதுவே தகுந்த ஆயுதமென அறிந்தபோது, காலப் போக்கில் இஸ்லாத்தில் புதிதாகப் புகுந்துவிட்ட பித்அத்துக்களை உள்ள

உணர்ச்சியோடு எதிர்த்தார். குர்ஆன் கூறுவதையும், பெருமானார் (ஸல்) அவர்கள் காட்டிய வழிமுறைகளையும் தவிர வேறு ஆலிம்களென வாதாடி வழிகெடுப்பவர்களின் பேச்சுக்களை ஆதாரமாக எடுக்கக் கூடாது எனக் கூறினார். அவ்லியாக்கள் கப்றுக்குச் சென்று வணங்குவதையும், கப்ரிலுள்ளவர்களை மக்களுக்கும், அல்லாஹ்விற்குமிடையில் வாசிதாவாக எடுப்பதையும் தடுத்து, பெருமானார் (ஸல்) அவர்களின் கட்டளைப்படி கப்றுகள்மீது கட்டப்பட்டுள்ள குப்பாக்களை உடைக்கக் கூறினார்.

21. இமாம் "முஹம்மது அப்துஹ்" அவர்கள் கூறியதாக "ஹாபிஸ் வஹபா" கூறுகிறார்.

"ஐம்பது ஆண்டுகள் அராபியாவில்" என்ற புத்தகத்தில் வஹபா என்பவர் எகிப்தின் முப்தியாக இருந்த இமாம் முஹம்மது அப்துஹ் அவர்கள் கூறியதைக் குறிப்பிடும்போது முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் மாபெரும் ஓர் சீர் திருத்தவாதியாகும். அறியாமையின் காரணத்தால்மார்க்கத்தின் உண்மைகளை சரியாக அறியாமலிருந்த சில உலகமாக்கள் பித்அத்துக்கள் அனுச்சாரங்கள் புரிகின்றவர்களுக்கு ஆதரவாக இருந்தார்கள், இந்த போலி உலமாக்களோடு ஒற்றுப் போக நினைத்த, அன்றைய ஆட்சியிலிருந்த துருக்கியர்களுடனும், முஹம்மதலி அல்பானி என்பவருடனும் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் போர் புரிய நேர்ந்தது.

22. "இஸ்லாமிய சீர்த்திருத்தத் தலைவர்கள்" என்ற புத்தகத்தில் தலை சிறந்த எகிப்து ஆலிம் "அஹ்மது அமீன்" என்பவர் கூறுகிறார்,

அல்லாஹ் ஒருவனே இந்த உலகைப் படைத்தான், அவனே அதில் ஆதிக்கம் செலுத்தக் கூடியவன், அவன்தான் இந்த உலகம் இயங்குவதற்குள்ள விதிமுறைகளை வைத்தான், அவனே சட்டமியற்றக் கூடியவன், படைப்பதிலும், சட்டமியற்றுவதிலும் அவனுக்கு இணையாருமில்லை, அவனுக்கு உதவியாளர்களுமில்லை, அவனோடு எவ்வளவு அடுத்தவர்களாக இருப்பினும், அவர்கள் மீது அவன் தேவையற்ற

வஞக இருக்கின்முன், அவன் ஒருவன் கையிலேயே சட்டமிருக்கிறது. நல்லதும், கெட்டதும் அவன் கையிலேயே இருக்கிறது அவன் இணையற்றவன் என்று நம்புவது தவ்ஹீதின் அடிப்படையாகும்,

அல்லாஹ் ஒருவனே சட்டமியற்றி, அந்த சட்டத்திற்கொப்ப உலகை நடாத்திச் செல்வதற்கு தகுந்த ஆதிக்கமுடையவன். வணக்கத்திற்கும், கண்ணியத்திற்கும் உரியவன் அவனைத்தவிர வேறுயாருமே இல்லை, இதுவே ''லாயிலாஹ இல்லல்லாஹ்'' என்பதின் பொருளாகும், இதுவே குர்ஆனின் சாராம்சமுமாகும்,

அல்லாஹ் தன் திருமறைல் கூறுகின்றுன்.

قُلْ يَٓا اَهْلَ الْكِتَابِ تَعَالَوْا اِلٰى كَلِمَةٍ سَوَٓاءٍۭ بَيْنَنَا
وَبَيْنَكُمْ اَلَّا نَعْبُدَ اِلَّا اللّٰهَ وَلَا نُشْرِكَ بِه۪ شَيْـًٔا
وَلَا يَتَّخِذَ بَعْضُنَا بَعْضًا اَرْبَابًا مِنْ دُونِ اللّٰهِ فَاِنْ
تَوَلَّوْا فَقُولُوا اشْهَدُوا بِاَنَّا مُسْلِمُونَ -

(நபியே! பின்னும் அவர்களை நோக்கி) நீர் கூறும்; 'வேதத்தையுடையவர்களே எங்களுக்கும் உங்களுக்கும் (சம்மதமான) ஒரு மத்திய விஷயத்தின்பால் வருவீர்களாக! (அதாவது;) 'நாம் அல்லாஹ்வைத் தவிரவேறென்றையும் வணங்கோம், நாம் அவனுக்கு யாதொன்றையும் இணையாக்கோம், நம்மில் எவரும், அல்லலாஹ்வையன்றி எவரையும் வணங்க தகுதியுடையவஞக எடுத்துகொள்ளோம்! (என்று கூறுவீராக, விசுவாசிகளே! இதனையும்) அவர்கள் புறக்கணித்தால் (அவர்களை நோக்கி) நிச்சயமாக நாங்கள் (அவன் ஒரு

வனுக்கே முற்றிலும் வழிபட்ட) முஸ்லீம்கள் என்று நீங்கள் சாட்சியங் கூறுவீர்களாக!'' என்று நீங்கள் கூறிவிடுங்கள்,) (3-64)

எல்லாக்குறைகளைவிட்டும் தூய்மையான தவ்ஹீதை விட்டும் தற்கால இஸ்லாமிய உலகம் திரும்பி, படைப்பினங்களில் அதிகமானவைகளை அல்லாஹ்விற்கு இணையாக ஆக்கி விட்டது.

அவ்லியாக்களை, கப்றுகளுக்குச் சென்று ஹஜ்ஜு செய்கின்றார்கள், அவர்களுக்கு நன்மை தீமை செய்யும் சக்தியிருக்கின்றதென நம்புகிறார்கள், கப்றுகள்மீது குப்பாக்கள் எழுப்பப்பட்டு, தர்ஹாக்கள் கணக்கின்றி எல்லா இடங்களிலும் காணப்படுகிறது, இவைகளுக்கு மக்கள் யாத்திரை செய்து சென்று, அவைகளை முத்திமுகர்ந்து, அவைகளுக்கு அடிபணிந்து, நல்லவைகளை செய்து துன்பங்களை போக்கு மாறு அவைகளிடம் வேண்டுகிறார்கள்.

ஒவ்வொரு ஊரிலும் எத்தனையோ அவுலியாக்கள், எத்தனையோ தர்ஹாக்கள் உருவாக்கப்பட்டு அல்லாஹ்விற்கு ஒப்பிடப்பட்டு விட்டன, அல்லாஹ்வை உலக அரசர்களில் ஒருவனைப் போன்று கருதி, அவன் பக்கம் நெருங்குவதற்காக மனிதர்களின் பொருட்டைத்தேடுகின்றனர்.

அராபியாவில் இருந்துவந்த முஷ்ரிகீன்களும் இவ்வாறே கூறினார்கள், அதை அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான்.

...مَا نَعْبُدُهُمْ إِلَّا لِيُقَرِّبُونَا إِلَى اللَّهِ زُلْفَى...

(அந்த தெய்வங்கள்) இறைவன்பால் எங்களை அடுத்து வைப்பதற்காகவே தவிர (வேறு எதற்காகவும்) அவைகளை நாங்கள் வணங்கவில்லை.)

மேலும் அவர்கள் கூறினார்கள்

...هَٰؤُلَاءِ شُفَعَاؤُنَا عِندَ اللَّهِ ...

(இவர்கள் (தெய்வங்கள்) அல்லாஹ்விடத்தில் எங்களுக்காக ஷிபாரிசு செய்யக் கூடியவர்களாகும்)

மிக வேதனைக்குரிய தென்னவெனில் முஸ்லீம்கள் அவுலியாக்களை வணங்குவதோடு மாத்திரம் இருந்து விடவில்லை. மரம், செடிகள் கற்களைக் கூட அல்லாஹ்விற்கு இணையாக்கி விட்டார்கள்,

இராக்கில் "மன்பூஹா" என்ற ஊரில் ஒரு பேரீத்தம் பழம் மரம் இருந்தது. அதை நாடிச் செல்லும் திருமணமாகாத பெரிய பெண்கள் ஒரு வருடத்திற்குள் திருமணம் செய்து கொள்வார்கள், இந்த சக்தி அந்த மரத்திற்கு இருக்கிறதென நம்பி வந்தார்கள்.

"தர்யிய்யா" என்ற ஊரில் பரக்கத்துக் கிடைக்குமென நினைத்து மக்கள் அங்கிருந்த ஒரு குகைக்குச் சென்று ஹஜ்ஜு செய்து வந்தார்கள். முஸ்லீம்கள் வாழுகின்ற ஒவ்வொரு ஊர்களிலும் இது போன்று காண முடியும்.

எகிப்தில் ஹனபி மரம், குல்ஷனி செருப்பு, முதவல்லி வாசல் என்பன போன்ற வற்றையும் முஸ்லீம்கள் வணங்கி வந்தார்கள்,(1)

---

(1) "ஹனபி மரம்" என்பது கெய்ரோவிலுள்ள ஹனபி பள்ளியில் ஒரு மரம் இருந்தது, மக்கள் அம்மரத்தடியில் சென்று பரகத்துத் தேடி வந்தார்கள், "குல்ஷனி செருப்பு", என்பது குல்ஷனி தர்ஹாவிலிருந்த பழைய செருப்பாகும். இந்த செருப்பை கழுகிக் குடிப்பார்களானல் காம நோயிக்குப் பயனளிக்குமென நம்பினார்கள், 'முதவல்லி வாசல் என்பது கெய்ரோவில் இருக்கிறது. இது முழுவதும் ஆணிகள் அடிக்கப்பட்டுள்ளன, தங்கள் தேவைகளை கோரி அதில் கயிறுகளையும், தலை முடிகளையும் தொங்க விடுவார்கள்,

அப்துல் அஜீஸ் பின்பாஸ்

ஒவ்வொரு பாகத்திலும் கல்லும், மரமும் அல்லாஹ்விற்கு இணையாக ஆக்கப்பட்டுள்ளன, இதுபோன்ற மூடக் கொள்கைகளை விட்டும் தவ்ஹீதை எப்படி தூய்மையானதாக ஆக்கமுடியும்? ஏனெனில் இக்கொள்கைகள் ஏக அல்லாஹ்வை வணங்குவதை விட்டும் மக்களை தடுத்து விட்டன. அல்லாஹ்வுடன் மற்றவைகளையும் வணங்கக் கூடியவர்களாக மக்களை ஆக்கிவிட்டன. உள்ளங்களை இழிவானதாகவும், பிற்போக்கானதாகவும் ஆக்கி, தவ்ஹீதை விட்டும் மக்களை அப்பால் படுத்தி விட்டன,

இவ்வாறு ஷிர்க்கைவிட்டும் தூய்மையான ஏகத்துவக் கொள்கையின் சிந்தனை முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாபின் உள்ளத்தில் சுழன்று கொண்டிருந்தது.

ஷரீஅத்தில் தவ்ஹீதைப்பற்றி அறிவதற்கு குர்ஆன், ஹதீஸைத்தவிர வேறு எதையும் பயன்படுத்தக் கூடாது,

மேலும் கீழ் குறிப்பிடப்பட்டுள்ள எல்லா அறிஞர்களும் இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்களை பாராட்டிக் கூறியுள்ளார்கள்,

ஃ ''அமீன் ஸயீது'' என்பவர் ''முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாபின் வரலாறு'' என்ற புத்தகத்தில்.

''அராபியாவில் நான் கண்டவை'' என்ற புத்தகத்தில் ''அஹ்மது ஹுஸைன்'' என்பவர்,

ஃ ''அராபியர்கள் வரலாறு'' என்ற புத்தகத்தில் லப்னான் வரலாற்றாசிரியர் ''பிலிப் ஹித்தி'' என்பவர்

ஃ ''முஹம்மதிஸம்'' என்ற புத்தகத்தில் ''ஜப்'' என்ற ஆங்கிலேயர்

ஃ மக்காவில் இமாமாக இருந்த ''அபுஸ்ஸமஹ் அப் துல்லாஹிர்'' என்ற ஏகிப்தைச் சார்ந்த ஆலிம்,

ஃ ''முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப்'' என்ற புத்த கத்தில் ''அலி அத்தன்தாவி'' என்பவர்.

ஃ ''இப்னு சவூது'' என்ற புத்தகத்தில் ''வில்யம்ஸ்'' என்பவர்,

ஃ ''இஸ்லாமிய மக்கள் வரலாறு'' என்ற புத்தகத்தில் ''புரோகல்மேன்'' என்பவர்

ஃ ''அரபியர்கள் வரலாற்றில் விடப்பட்டுப் போன வளையங்கள்'' என்ற புத்தகத்தில் ''முஹம்மது ஜமீல் பேஹம்'' என்பவர்,

ஃ ''முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப்'' என்ற புத்தகத்தில் ''அப்துல் கரீம் கதீப்'' என்பவர்,

ஃ ''புவாதுல் அவ்வல்'' என்ற பல்கலை கழகத்தில் வர லாற்றாசிரியராக பணியாற்றிய முஹம்மது ஜியாவுத்தீன் அர்ரீஸ் என்பவர்

ஃ ''தற்கால இஸ்லாமிய உலகம்'' என்ற புத்தகத்தில் ''டாக்டர் முஹம்மது அப்துல்லாஹ் மாளி'' என்பவர்

ஃ ''பழையதும் புதியதும்'' என்ற புத்தகத்தில் ''முஹம்மது குர்துஅலி'' என்பவர்

ஃ ''இப்னு சவூது'' என்ற புத்தகத்தில் ''உமர் அபுன்னஸ்ர்'' என்பவர்

ஃ ''முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் என்ற புத்த கத்தில் ''அஹமது பின் அப்துல் கபூர் அத்தார்'' என்பவர்

ஃ ''இஸ்லாத்தில் முஜத்தித்கள்'' என்ற புத்தகத்தில் ''அப்துல் முதஆல் அஸ்ஸயீதி'' என்பவர்,

ஃ அஹ்மது பின்முஷ்ரிப் அல் அஹ்ஸாயி'' என்பவர் ஒரு கவிதையில்,

ஃ ''இம்ரூன் பின் அலிபின் ரிள்வான்'' என்பவர் ஒரு கவிதையில்,

ஃ ''ஹுஸைன் பின் கன்னும்'' என்பவர் ஒரு கவிதையில்

ஃ முஹம்மது பின் அஹ்மது அல்ஹிப்ளி'' என்பவர் ஒரு கவிதையில்





# الشيخ محمد بن عبد الوهّاب

## عقيدته السّلفيّة ودعوته الإصلاحيّة وثناء العلماء عليه

بقلم


## العلّامة الشيخ أحمد بن حجر بن محمد آل أبوطامي

(قاضي المحكمة الشرعية بقطر)


قدم له وصححه سماحة الشيخ

## عبد العزيز بن عبد الله الباز

نقله إلى التاملية

## كمال الدّين بن شاه الحميد